# சங்க இலக்கியத்தில் உயிரினங்கள்

பெரியார் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்
**வெ.பானுமதி, எம்.ஏ., எம்.ஃபில்.,**
பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்

நெறியாளர்
**முனைவர் இரா. சாந்தி, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,**
இணைப்பேராசிரியர்,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம்–636 007.

தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம்–636 007.

**டிசம்பர் – 2009**

முனைவர் இரா. சாந்தி, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர்,
தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம்–636 007.

# நெறியாளர் சான்றிதழ்

திருமதி.வெ.பானுமதி, சேலம்–7 அரசு கலைக்கல்லூரித் தமிழ்த்துறையில் 2006–2009–ஆம் ஆண்டுகளில் பகுதி நேர முனைவர் (பிஎச்.டி) பட்ட ஆய்வாளராகப் பயின்றவர் என்றும், **"சங்க இலக்கியத்தில் உயிரினங்கள்"** என்னும் தலைப்பில் அவர் செய்துள்ள இவ்வாய்வு அவர்தம் சொந்த முயற்சியால் செய்யப்பட்டது என்றும், இதற்கு முன் இவ்வாய்வேடு வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

இடம் : சேலம்–7

நாள் : 02-12-2009.

DR. R. SHANTHY, M.A., M.Phil.,Ph.d.
LECTURER IN TAMIL,
Goverment Arts College,
SALEM-636 007.

முனைவர் இரா. சாந்தி, எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர், தமிழ்த்துறை,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம்–636 007.

(நெறியாளர்)

02/12/09

தமிழ்த்துறைத்தலைவர்,
அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),
சேலம் - 636 007.

2/12/09

PRINCIPAL
GOVT. ARTS COLLEGE (AUTONOMOUS)
SALEM-7.
C. Code No. 201

**வெ.பானுமதி, எம்.ஏ., எம்.ஃபில்.,**

பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளர்

தமிழ்த்துறை,

அரசு கலைக்கல்லூரி (தன்னாட்சி),

சேலம்–636 007.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"சங்க இலக்கியத்தில் உயிரினங்கள்"** என்னும் தலைப்பில் பகுதி நேர முனைவர் (பிஎச்.டி) பட்டத்திற்காக சேலம்–7, அரசு கலைக்கல்லூரி, தமிழ் இணைப்பேராசிரியர் **முனைவர் இரா.சாந்தி,** எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி., அவர்களின் மேற்பார்வையில் 2006–2009 ஆம் ஆண்டுகளில் நிகழ்த்தப்பட்ட இந்த ஆய்வேடு என் சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப் பெறவில்லை என உறுதி அளிக்கின்றேன்.

இடம் : சேலம்–7

நாள் : 02-12-2009.

(வெ. பானுமதி)
ஆய்வாளர்

வெ. பானு
2/12/09.

# நன்றியுரை

**"சங்க இலக்கியத்தில் உயிரினங்கள்"** என்னும் தலைப்பில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள எனக்கு இசைவு நல்கிய பெரியார் பல்கலைக்கழக மாண்பமை **துணைவேந்தர்**, மாண்பமை **பதிவாளர், ஆட்சிக்குழு உறுப்பினர்கள்** உள்ளிட்ட அனைவருக்கும் என் இதயங்கனிந்த நன்றி.

பழமைக்கு இலக்கணமாய், புதுமைக்கு வழிகாட்டியாய் ஒரு நூற்றாண்டைக் கடந்து பல சான்றோர்களை உருவாக்கிய சேலம்–7, அரசு கலைக்கல்லூரி என்னைப் பகுதிநேர முனைவர் பட்ட ஆய்வாளராக ஏற்றுக் கொண்டதற்குக் கல்லூரிக்கும், கல்லூரி **முன்னாள் முதல்வர்**களுக்கும், இந்நாள் முதல்வர் **முனைவர்.சீத்தாராமன்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தமிழ்த்துறையில் ஆய்வு மேற்கொள்ள ஒப்புதல் அளித்த முன்னாள் தமிழ்த் துறைத்தலைவர் **முனைவர்.சங்கரன்** அய்யா அவர்களுக்கு நன்றி.

என் ஆய்வு சிறப்புறப் பல்லாற்றானும் துணைநின்ற தமிழ்த்துறைத் தலைவரும், பெரியார் பல்கலைக்கழக ஆட்சிக்குழு உறுப்பினருமாகிய **பேராசிரியர் பெ.மாது** அய்யா அவர்களுக்கு நன்றிகள் பல.

ஆய்வு சிறக்க பல்வேறு நிலைகளில் என்னை நெறிப்படுத்தியதுடன் பல்வேறு கருத்துகளை எடுத்துக்கூறி தேவையான நேரங்களில் ஊக்கமும் ஆக்கமும் தந்து நெறிப்படுத்தி பெருந்துணையாக இருந்த **முனைவர் இரா.சாந்தி** அவர்களுக்கு மிக்க நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வுக்குத் துணை நின்ற **நாமக்கல் மாவட்ட கிளை நூலகத்தாருக்கு** என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

எனது ஆய்வுப் படிப்பிற்கு உதவிப் புரிந்த என் **குடும்பத்தினருக்கும்**, என் கணவர் **திரு.மு.சுதாகர்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வினைச் செம்மையாக அச்சிட்டு உதவிய **"ஆய்வுப் பூங்கா", சேலம்–7** என்ற நிறுவனத்தாருக்கும் ஆய்வு செம்மையாக நடைபெற உதவிய அனைவருக்கும் என் நன்றியை உரித்தாக்குகிறேன்.

**(வெ. பானுமதி)**

# சுருக்கக் குறியீட்டு [illegible]

| | | |
|---|---|---|
| அகத். | – | அகத்திணையியல் |
| அக.நா. | – | அகநானூறு |
| உ.ஆ. | – | உரை ஆசிரியர் |
| ஐ.கு.நூ. | – | ஐங்குறுநூறு |
| கள. | – | களவியல் |
| கலி. | – | கலித்தொகை |
| குறள். | – | திருக்குறள் |
| குறி.பா.வ. | – | குறிஞ்சிப்பாட்டு வரிகள் |
| குவ. | – | குவலயாநந்தம் |
| குறி.கலி. | – | குறிஞ்சிக்கலி |
| குறுந். | – | குறுந்தொகை |
| சந். | – | சந்திராலோகம் |
| செய். | – | செய்யுளியல் |
| த.அ. | – | தண்டியலங்காரம் |
| தொ.வி. | – | தொன்னூல் விளக்கம் |
| தொல்.எழுத்து | – | தொல்காப்பியம் எழுத்ததிகாரம் |
| தொல்.சொல். | – | தொல்காப்பியம்–சொல்லதிகாரம் |
| தொ.பொ. | – | தொல்காப்பியம்–பொருளதிகாரம் |
| நற். | – | நற்றிணை |
| ந.அக. | – | நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| ப.ஆ. | – | பதிப்பாசிரியர் |
| பதி.பத்து. | – | பதிற்றுப்பத்து |
| பா.வரி. | – | பாடல் வரி |
| புற.நா. | – | புறநானூறு |
| பொரு. | – | பொருளியல் |
| பொ. | – | பொருளதிகாரம் |
| வீ.சோ. | – | வீரசோழியம் |
| மு.வீ. | – | முத்துவீரியம் |

# பொருளடக்கம்

# இயல் – ஒன்று

## 1. ஆய்வு அறிமுகம்

1.1. ஆய்வுப் பொருள்

1.2. ஆய்வுத் தலைப்பு

1.3. ஆய்வு நோக்கம்

1.4. ஆய்வு கருதுகோள்

1.5. ஆய்வு எல்லை

1.6. ஆய்வுச் சான்றாதாரங்கள்

1.7. ஆய்வு அணுகுமுறைகள்

1.8. ஆய்வு முன்னோடிகள்

1.9. ஆய்வுப் பகுப்பு

# இயல் – ஒன்று

# ஆய்வு அறிமுகம்

## 1.1. ஆய்வுப் பொருள்

இலக்கியங்கள் வாழ்க்கையைப் பிரதிபலிப்பன. ஒரு காலக்கட்டத்தில் எழுதப்படும் இலக்கியம் அக்காலக்கட்டத்தின் அனைத்து நிலைகளிலுமான பதிவுகளை முன் வைக்கின்றது. அவற்றுள் அறிவியல், புவியியல், மானிடவியல், சமூகவியல், அரசியல் போன்ற அனைத்து கூறுகளும் அடங்குவன. இலக்கியப் படைப்பின் பரப்பிற்கேற்ப இக்கூறுகள் குறைவாகவோ நிறைவாகவோ படைப்பில் பதிவு செய்யப்படுகின்றன.

அவ்வகையில் சங்க இலக்கியங்கள் வாழ்வியலைப் பதிவு செய்வதில் முதலிடம் பெறுகின்றன. சங்க இலக்கியங்களை அடியொற்றிய ஆய்வுகள் பல இருப்பினும் அவை மேலும் மேலும் ஆய்வுகளுக்கான இடமளிப்பவையாக பரந்து பட்ட களங்களை உள்ளடக்கியுள்ளன.

## 1.2. ஆய்வுத் தலைப்பு

'சங்க இலக்கியத்தில் உயிரினங்கள்' என்பது ஆய்வுத் தலைப்பு ஆகும்.

## 1.3. ஆய்வு நோக்கம்

தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள், கபிலர் பாடல்களில் பெரிதும் ஒத்து விளங்குகின்றன. தொல்காப்பிய மரபியல்

கருத்துகளிலிருந்து கபிலர் பாடல் கருத்துகள் சில இடங்களில் மாறி அமைவதையும் இவ்வாராய்ச்சி எடுத்துக்காட்டுகின்றது. இவ்வாறு சிறிதளவிற்குத் தொல்காப்பியக் கொள்கைகளால் விலகி நிற்றலால், அவை மரபு வளர்ச்சியினையும், கொள்கைகளில் ஒத்து நிற்றலால் அவை தொல்காப்பியத்தை அடுத்துத் தோன்றிய கபிலர் பாடல்களில், தொல்காப்பியத் தாக்கம் அமைந்திருக்கும் பாங்கினையும் விளக்குகின்றன. இவற்றை வரையறை செய்தலோடு தெளிவாக்குதலும் ஆய்வின் நோக்கமாக அமைந்துள்ளது.

கபிலர் இலக்கியத்தில் இடம்பெறும் உயிரினங்களின் உணர்வுகள், செயல்பாடுகள், உடல்தோற்றம் ஆகியவற்றை ஆராய்தலும் இவ்வாராய்ச்சியின் நோக்கமாகின்றது.

## 1.4. ஆய்வு கருதுகோள்

கபிலரின் இலக்கியக் கோட்பாடு பல இடங்களில் தொல்காப்பியக் கோட்பாட்டின்படியும் சில இடங்களில் வளர்ச்சியைக் காட்டுவனவாகவும் உள்ளன என்பது இவ் ஆய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது.

அகப்பொருள் இலக்கியத்தில் உயிரினங்களின் செயல்கள், மாந்தரின் உள்ளக்கருத்துகளை உணரப் பெரும் துணை செய்கின்றன என்பதும் இந்த ஆய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது. மேலும் மனித வாழ்வியலோடு பிற உயிரினங்கள் ஒன்றி அமைந்திருந்தமையை இலக்கியங்களின் வழி விளக்குவதும் இந்த ஆய்வின் கருதுகோளாக அமைந்துள்ளது.

## 1.5. ஆய்வு எல்லை

சங்க இலக்கியங்களான பத்துப்பாட்டு, எட்டுத்தொகையில் அகப்புற இலக்கியங்கள் அனைத்திலும் உயிரினங்கள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் கபிலர் பாடிய சங்க இலக்கியப் பாடல்கள் மட்டும் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. பிற சங்க இலக்கியப் பாடல்கள் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்படவில்லை.

## 1.6. ஆய்வுச் சான்றாதாரங்கள்

ஆய்விற்கு முதன்மைச் சான்றாதாரமாக கபிலரின் சங்க இலக்கியப் பாடல்கள் அமைந்துள்ளன. தொல்காப்பியம் பொருளதிகாரம், அதற்கானப் பல்வேறு உரைகள், சங்க இலக்கியங்கள் குறித்த நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள் ஆகியன துணைமைச் சான்றாதாரங்களாகக் கொள்ளப்பட்டுள்ளன.

## 1.7. ஆய்வு அணுகுமுறைகள்

இவ் ஆய்வில் விளக்கமுறை அணுகுமுறையும், சமுதாயவியல் அணுகுமுறையும், பகுப்பாய்வு முறையும், ஒப்பீட்டு முறை அணுகுமுறையும் உளவியல் அணுகுமுறையும் பின்பற்றப்பட்டுள்ளன.

கபிலரின் பாடற்கருத்துக்களை விளக்கும்போது விளக்கமுறை அணுகுமுறையும், கபிலர் பாடல்களில் காணப்பெறும் உயிரினங்களைப் பகுத்துக் காணும் போது பகுப்பாய்வு அணுகுமுறையும்; தொல்காப்பியக் கோட்பாட்டுடன் கபிலரின் இலக்கியக் கோட்பாட்டை ஒப்பீடு செய்யும் போது ஒப்பீட்டு அணுகுமுறையும்; கபிலர் சங்க இலக்கியப் பாடல்களில்

தலைவன் தலைவி உளப்பாங்கை உயிரினங்கள் வழி விளக்குவதை எடுத்துக் காட்டும் போது உளவியல் அணுகுமுறையும்; மக்கள் வாழ்வியலுடன் உயிரினங்கள் நெருங்கிய தொடர்பு கொள்வதை விளக்குமிடத்து சமுதாயவியல் அணுகுமுறையும் பின்பற்றப்பட்டுள்ளன.

## 1.8. ஆய்வு முன்னோடிகள்

ஆய்விற்கு முன்னோடியாக சங்க இலக்கியங்கள் பற்றிய ஆய்வு நூல்கள் அமைகின்றன. பி.எல்.சாமி அவர்களின் **'சங்க இலக்கியத்தில் விலங்குகள்'** என்ற நூலும், மு.இராஜேஸ்வரியின் **'நற்றிணை குறிஞ்சித் திணையில் விலங்கினங்கள்'** என்ற ஆய்வியல் நிறைஞர் பட்ட ஆய்வேடும் இவ் ஆய்விற்கு முன்னோடிகளாக அமைகின்றன.

## 1.9. ஆய்வுப் பகுப்பு

**'சங்க இலக்கியத்தில் உயிரினங்கள்'** எனும் இவ் ஆய்வேடு நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. இந்த ஆய்வு,

1. ஆய்வு அறிமுகம்
2. தொல்காப்பியரின்இலக்கியக் கோட்பாடு
3. கபிலரின் இலக்கியக் கோட்பாட்டில் உயிரினங்கள்
   - I. இலக்கிய நோக்கில் உயிரினங்கள்
   - II. வருணனை நோக்கில் உயிரினங்கள்
   - III. வாழ்வியல் நோக்கில் உயிரினங்கள்
4. ஆய்வு முடிவுகள்

என நான்கு இயல்களைக் கொண்டு அமைகின்றது.

"ஆய்வு அறிமுகம்" என்ற முதல் இயலில் ஆய்வுப் பொருள், ஆய்வுத் தலைப்பு, ஆய்வு நோக்கம், ஆய்வு கருதுகோள், ஆய்வு எல்லை, ஆய்வுச் சான்றாதாரங்கள், ஆய்வு அணுகுமுறைகள், ஆய்வு முன்னோடிகள், ஆய்வுப் பகுப்பு ஆகிய செய்திகள் இடம் பெறுகின்றன.

"தொல்காப்பியரின் இலக்கியக் கோட்பாடு" என்ற இரண்டாம் இயலில் தொல்காப்பியரின் இலக்கியக் கோட்பாடானது திணைக் கோட்பாடு, உவமைக் கோட்பாடு, மரபுக் கோட்பாடு ஆகியவற்றை அடியொற்றி இனங்காணப்பட்டுள்ளது.

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் ஒன்பது இயல்களும் செய்யுள் இலக்கியத்தின் பாடுபொருள், செய்யுளின் இயல்பு, அமைப்பு, மரபை விளக்குகின்றன என்பதையும், பொருளதிகாரம் வாழ்க்கைக்குரிய இலக்கணமா அல்லது இலக்கியக் கோட்பாடுகளை வெளிப்படுத்தி நிற்கின்றனவா என்பதையும் இவ்வியல் ஆராய்கின்றது. கவிதையின் பாடுபொருளாக வரும் முதல், கரு, உரி எனும் மூன்றனுள் உரியென்பன திணைக்குரிய ஒழுக்கங்கள். இவ்வரையறைகள் புலவர்களால் இயற்றப்படும் செய்யுளுக்கு மட்டும் உரியவையாகும். உவமை, உள்ளுறை, இறைச்சி ஆகியன கவிதையின் மொழியமைப்பால் ஏற்படுவன என்பதையும் இப்பகுதி விளக்குகின்றது.

நிலத்தை அடிப்படையாகக் கொண்டது திணை இலக்கியம். சங்க இலக்கியம் மனித உளவியலை அடிப்படையாகக் கொண்டு அகப்புற

நிகழ்ச்சிகளைக் கருவாக்கி அதில் தோன்றும் சிறு சிறு சிக்கல்களைப் பின்னி புனையும் திணை இலக்கியக் கோட்பாட்டை விரிவாக எடுத்தியம்புகிறது.

அகம், புறம் என்பன பொருள் கருதி பிரிவுப் பட்டுள்ளன. அகத்திணை ஏழனுள் கைக்கிளை ஆண்பாற்குரியது. அன்பின் ஐந்திணை ஆணுக்கும் பெண்ணுக்கும் பத்துவகைப் பொருத்தத்தில் உள்ளடங்கி மேற்கொள்கிற உயர்வான காதல். திணைப் பகுப்பு முறை குறித்தும், 'உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே' என்பதில் இளம்பூரணரின் கருத்து மாறுபட்டு அமைந்துள்ளதையும், நச்சினார்க்கினியர் கருத்து தொல்காப்பியக் கருத்தோடு ஏற்புடையதாக இருப்பதையும் இப்பகுதி விளக்குகின்றது. திணை–ஒழுக்கம்–உரிப்பொருள் ஆகிய அனைத்தும் ஒன்றையே குறித்து வருவதையும் இவ்வியல் தெரிவிக்கின்றது.

மேலும் இவ் இயல், உவமையின் அமைப்பு, பொருள் உத்திகளை மிக நுட்பமாகத் தொல்காப்பியர் கூறியுள்ளதையும், உவமையை அணி எனக் கொள்ளாது பொருளுறுப்பாகக் கொண்டதையும், அணியிலக்கண வளர்ச்சிக்கு உவமயியலின் பங்கு குறித்தும் ஆராய்கின்றது. இயற்கை வருணனைகளில் பெரும்பங்கு வகிப்பன உள்ளுறை, இறைச்சி ஆகியன. அத்தகைய உள்ளுறை உவமையின் இலக்கணம், உள்ளுறை வைத்துக் கூறுதலின் சிறப்பும், பயனும், ஒட்டணி, முரண்குறிப்பு; படிமம், வடமொழித் தொனிக் கோட்பாடு ஆகியன உள்ளுறையை அடிப்படையாகக் கொண்டவை என்பதையும், தொல்காப்பியர் கூறும் இலக்கணம், பிற்கால

இலக்கண நூல்கள் ஆகியவற்றையும் இப்பகுதி தெளிவாக்குகின்றது. மரபியலில் அமைந்திருக்கும் இளமைப்பெயர், ஆண்பாற் பெயர், பெண்பாற் பெயர் ஆகியன விளக்கப்பெறுகின்றன.

**"கபிலரின் இலக்கியக் கோட்பாட்டில் உயிரினங்கள்"** என்ற மூன்றாவது இயல் மூன்று பெரும் பகுதிகளை உள்ளடக்கியுள்ளது.

I. இலக்கிய நோக்கில் உயிரினங்கள்

II. வருணனை நோக்கில் உயிரினங்கள்

III. வாழ்வியல் நோக்கில் உயிரினங்கள்

**"இலக்கிய நோக்கில் உயிரினங்கள்"** என்ற முதல் பகுதி திணை மயக்கம் குறித்த தொல்காப்பியர் கருத்தோடு உயிரினங்கள் வேறொரு நிலத்தில் மயங்கி வரும் நிலையை விளக்குகின்றது.

உவமையாக வரும் உயிரினங்கள் இயற்கை வருணனைகளாக மட்டுமல்லாமல் அவ்வப்பாடலில் கூறப்படும் உரிப்பொருளுக்கு ஏதேனும் ஒருவகையில் உதவுகின்றன. உயிரினங்கள் உவமையாக நின்று பாட்டின் பொருளை தெளிவுறுத்துதலையும், உள்ளுறையில் நின்று பாட்டின் பொருளுக்கு இயைபுடைய மற்றொரு குறிப்புப் பொருளைத் தருதலையும், இயற்கையின் செயலால் நடைபெறும் சிற்றுயிர்களின் அன்புச் செயல்கள் மனிதர்களின் உணர்ச்சிகளைத் தூண்டுவதையும் கபிலர் பாடல்கள் மூலம் விளக்குகின்றன. இயற்கை வருணனையோடு இயைந்த உயிரினங்களை, உவமையில் உயிரினங்கள், உள்ளுறைப் பொருளில் உயிரினங்கள்,

இறைச்சிப் பொருளில் உயிரினங்கள், என்ற மூன்று பகுப்புகளில் இவ்வியல் விளக்கியுள்ளது.

தொல்காப்பியர் மரபியலில் கூறியிருக்கும் இளமைப்பெயர், ஆண்பாற் பெயர், பெண்பாற் பெயர் ஆகியவை கபிலர் பாடல்களில் செல்வாக்குப் பெற்றிருக்கும் திறனை இப்பகுதி புலப்படுத்துகின்றது. கருப்பொருள் மரபு வளர்ந்திருக்கும் நிலையை ஆங்காங்கே சுட்டிக்காட்டுகின்றது.

**“வருணனை நோக்கில் உயிரினங்கள்”** என்ற இரண்டாம் பகுதியில் இலக்கியத்தின் பின்புல வருணனைகள் இலக்கிய நிகழ்வினை வலுப்படுத்துவதாக அமைகின்றமை; இடம், காலம், களத்தினை விளக்குவதற்குப் புலவர்கள் கையாண்ட உத்திகளுள் ஒன்றாக இயற்கை வருணனை அமைகின்றமை; அந்நிலப் பகுதிகளில் வாழும் உயிரினங்களின் உணர்வு, செயல்பாடு, வடிவம் ஆகியவை வருணிக்கப்படும் பொழுது உளவியல் சார்ந்த கருத்தும் வெளிப்படுகின்றமை; பாடுபொருளும் உணர்ச்சியும் ஒருங்கே காணப்படும் தன்மை ஆகியவை விளக்கப்பட்டுள்ளன. வருணனையில் உயிரினங்கள் பெறும் இடத்தை செயல் வருணனை, உடல் வருணனை என இரண்டாகப் பகுத்து இப்பகுதி விளக்குகின்றது. செயல் வருணனைகள் மூலம் விலங்குகள், பறவைகளின் காதலுணர்வு, தாய்மை, போர்க்குணம், உண்ணும் உணவு, இருப்பிடம் ஆகியன குறித்தும் விளக்கப்படுகின்றன.

உடல் வருணனைகள் மூலம் விலங்கு, பறவைகளின் நிறம், வடிவம், அளவு ஆகியவை தெளிவாக விளக்கப்பட்டுள்ளன.

"வாழ்வியல் நோக்கில் உயிரினங்கள்" என்ற மூன்றாம் பகுதியில் மனிதனின் வாழ்க்கை பிற உயிரினங்களுடன் இணைந்து உள்ளதையும், பல விலங்குகள் மனிதனுடைய பகையானவை என்றாலும், மிகப் பெரும்பாலான விலங்குகள் மக்களின் வாழ்க்கைக்கு உறுதுணையாக விளங்குவதையும் இப்பகுதி விளக்குகின்றது. விலங்குகள் உணவாக, தோழனாக, ஊர்தியாக, விரிச்சி பெறுதற்காக, போர்க்காக, பரிசுப் பொருளாக, பலியிடுதற்காக, வணிகப் பொருளாக, பயன்பாட்டுப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் கபிலர் பாடல்கள் மூலம் ஆராய்ந்து விளக்கப் பெறுகின்றது. இலக்கிய நோக்கில் வருணனைக்காக பொருள் புலப்பாட்டிற்காக விலங்கினங்கள் படைக்கப்பட்டிருந்தாலும் வாழ்வியலில் அதன் பயன்பாடு பெரும்பங்கு வகிப்பதை கபிலர் பாடியப் பாடல்களின் சான்றுகளோடு இப்பகுதி மெய்ப்பிக்கின்றது.

"ஆய்வு முடிவுகள்" என்ற நான்காம் இயலில் ஆய்வில் பெற்ற உண்மைகள் தொகுத்துக் கூறப்பெறுகின்றன.

"துணைநூற்பட்டியல்" என்ற பகுதியில் ஆய்விற்கு உதவிய நூல்களும், கட்டுரைகளும், ஆய்வேடுகளும், அகராதிகளும் ஆசிரியர் பெயர் அகர வரிசையில் தரப்பட்டுள்ளன.

**“பின்னிணைப்பு”** பகுதி மூன்று பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

பின்னிணைப்புகள்

1. கபிலர்– சில குறிப்புகள்

2. அட்டவணைகள்

3. புகைப்படங்கள்

1. **“கபிலர் – சில குறிப்புகளில்”** கபிலரின் வாழ்வும் அவர் இயற்றிய பாடல்கள் குறித்த செய்திகளும் இடம் பெறுகின்றன.

2. **‘அட்டவணைகளில்’** உயிரினங்களின் வாழிடம், உணவு, இலக்கிய உத்தி, பயன்பாடு ஆகியன இடம் பெறுகின்றன.

**‘உயிரினங்களின் பெயர் அட்டவணையில்’** உயிரினங்களின் பொதுப் பெயர், மரபுப் பெயர், ஆங்கிலப் பெயர், விலங்கியல் பெயர் ஆகியன இடம் பெறுகின்றன.

3. **‘புகைப்படங்களில்’** கபிலர் பாடல்களில் இடம்பெறும் உயிரினங்களின் புகைப்படங்கள் இடம் பெறுகின்றன.

# இயல்–இரண்டு

# 2. தொல்காப்பியரின் இலக்கியக் கோட்பாடு

# இயல் – இரண்டு

# தொல்காப்பியரின் இலக்கியக் கோட்பாடு

## 2.0. முன்னுரை

இலக்கியம் வாழ்க்கையின் இலக்காக அமைவது; வாழ்வின் இலக்கு எது என உணர்த்துவது; வாழ்வின் இயல்பினை இயம்புவது; இயல்பான வாழ்க்கையும் சிறப்புடையதாக இலங்கச் செய்வது; ஒவ்வொரு தனிமனிதனின் வாழ்வினையும் இலக்கு ஆக்குவது; இலக்கியம் வாழ்வியலோடு தொடர்புடையதாய் மனிதனின் சிந்தனைக்கோ உணர்வுக்கோ கற்பனைக்கோ விருந்தாக அமைவதாய் ஒரு குறிப்பிட்ட வடிவம் கொண்டதாய் அமைவது.

வாழ்வின் குறிக்கோள்களையும் உறுதிப் பொருள்களையும் இலக்கியத்தின் வாயிலாக எடுத்தியம்ப விழையும் கவிஞன் இலக்கியம் அமைக்கும் உத்தியினை அறிந்தவனாக அமைவது அவசியமாகும். தொல்காப்பியர் இலக்கியம் எது எனக் கூறும் போது,

> "நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
> பாடல் சான்ற புலனெறி வழக்கம்" (தொ.பொ:56)

என்கிறார். நாடக வழக்கு என்பது 'சுவைபட வருவன' எனக் கூறுகிறார். தொல்காப்பியம் இலக்கியம் என்பது சுவைபட வருபவை அல்லது சிறந்து நிற்பவை பற்றிக் கூறுவதாக அமைகின்றது. பண்டைத் தமிழ் இலக்கியங்களான சங்க இலக்கியங்கள் இவ்வடிப்படையிலேயே அமைகின்றன. சங்க இலக்கியங்கள் பாடிய புலவர்கள் இலக்கியம்

படைக்கும் உத்தியினை நன்கு அறிந்தவர்களாக இருந்துள்ளனர். தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் இலக்கியங்களின் இயல்பைக் கூறுகிறார். இலக்கியம் என்ன கூறுகிறது என்பதைப் பாடுபொருளாகவும் என்ன அமைப்பில் கூறுகிறது என்பதை வடிவமாகவும் எப்படிக் கூறுகிறது என்பதை உத்தியாகவும் குறிப்பிடுகிறார்.

தமிழ் இலக்கிய மரபின் ஊற்றுக்காலாக இருக்கும் தொல்காப்பியத்தில் கூறப்படும் இலக்கணக் கோட்பாடானது இலக்கியத்தையும் உள்ளடக்கியது என்பதை உணர்த்துதல்; பொருளதிகார திணைக் கோட்பாட்டை அறிந்து கொள்ளுதல்; பொருளியலில் கூறப்படும் உள்ளுறை, இறைச்சிப் பொருள்களை ஆராய்தல்; உவமவியலில் கூறப்படும் உவமை மரபினை விளங்கிக் கொள்ளுதல்; மரபியலில் கூறப்படும் உயிரினப் பாகுபாடு பற்றி விளக்குதல் ஆகியவற்றை விளக்கமாகக் காண்பது இவ்வியலின் நோக்கம் ஆகும்.

> "தொல்காப்பியம் இலக்கியம் படைக்கும் முறையை இலக்கணமாகக் கூறும் நூல். தொல்காப்பியர் இலக்கியத்தின் உருவம், உள்ளடக்கம் ஆகியவை பற்றி நன்கு தெரிந்து கொள்ள மொழி இலக்கணம் வேண்டும் என எண்ணிய நிலையில் இயல்பாக இலக்கியத்தின் ஊடகமாக மொழியின் இலக்கணத்தையும் எடுத்து விளக்கியுள்ளார். வழக்கு மொழிக்கும் செய்யுள் மொழிக்கும்

> உரிய இலக்கணத்தைக் கூறியுள்ளார். செய்யுளின் அல்லது பாவின் இலக்கணத்தையும் கூறி ஒருங்கிணைந்த ஒரு முழு இலக்கணத்தை வகுத்துச் சென்றார் எனக் கருதலாம்."[1]

தொல்காப்பியரின் இலக்கியக் கோட்பாட்டை,

1. நூல் அமைப்பு முறை காட்டும் இலக்கியக் கோட்பாடு
2. இலக்கணக் களங்கள் காட்டும் இலக்கியக் கோட்பாடு
3. இலக்கிய விளக்கம் காட்டும் இலக்கியக் கோட்பாடு

என்ற மூன்று நிலைகளில் ஆராயலாம்.

## 2.1. நூல் அமைப்பு முறை காட்டும் இலக்கியக் கோட்பாடு

தமிழ்மொழியின் அமைப்பினையும், வாழ்வியலோடு பொருந்திய தமிழ் இலக்கியத்தின் அமைப்பு, உத்தி, பொருண்மை ஆகியவற்றையும் விளக்கிக் கூறும் செவ்வியல் இலக்கணம் தொல்காப்பியம் ஆகும். தமிழரின் பேச்சு மொழி, இலக்கிய மொழி மற்றும் பண்பாடு, பற்றிய நூல் தொல்காப்பியம். தமிழறிஞர்கள் தொல்காப்பியத்தைப் போற்றி மதிக்கின்றனர். 'கி.பி. 100 இல் தமிழின் முதல் இலக்கணமாம் தொல்காப்பியம் தோன்றியதாக வெளி நாட்டறிஞர்கள் கூறுவர். சில தமிழறிஞர் தொல்காப்பியம் காலத்தை 5000 ஆண்டுகளுக்கு முற்பட்டது என்றும் கி.மு.500 முதல் கி.பி.100 வரை என்றும் கூறுவர்.[2] தொல்காப்பியர் காலத்தைத் தெளிவாக வரையறை செய்வதில் கருத்து வேறுபாடு உண்டு எனினும் இதுவே நமக்குக் கிடைத்துள்ள முழுமையான முதல் தமிழ் இலக்கண நூல் என்பது தெளிவு. தமிழ் அறிவையும், புலமையையும் பெருக்கிக் கொள்ளத் தொல்காப்பியம் வாயிலாக அமைகிறது.

தொல்காப்பியரின் நூல் அமைப்பு முறை அவர் கொண்ட இலக்கியக் கோட்பாட்டை உணர்த்துகின்றது. இக் கருத்தை,

1. பாயிரம்
2. அதிகாரப் பகுப்பு முறை
3. இயல் அமைப்பு முறை

என மூன்று நிலைகளில் பகுத்து ஆராயலாம்.

### 2.1.1. பாயிரம்

தொல்காப்பியர் எவ்வாறு தொல்காப்பியத்தை உருவாக்கினார் என்பது குறித்து அந்நூலுக்குப் பனம்பாரனார் பாயிரம் கூறியுள்ளார்.

வடவேங்கடந் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறு நல்லுலகத்து
வழக்குஞ் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்துஞ் சொல்லும் பொருளும் நாடிச்
செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு
முந்துநூல் கண்டு முறைப்பட எண்ணிப்
புலந்தொகுத் தோனே போக்கறு பனுவல்
நிலந்தரு திருவிற் பாண்டியன் அவையத்து
அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற்கு அரில்தபத் தெரிந்து
மயங்கா மரபின் எழுத்துமுறை காட்டி
மல்குநீர் வரைப்பின் ஐந்திரம் நிறைந்த
தொல்காப் பியனெனத் தன்பெயர் தோற்றிப்
பல்புகழ் நிறுத்த படிமை யோனே (சிறப்புப்பாயிரம்: பனம்பாரனார்)

என்பது பாயிரம்.

இந் நூலை இயற்றுவதற்கு முன்னர், தொல்காப்பியர் தம் காலத்து அறிஞர்களின் படைப்புகளையும், தமக்கு முற்பட்ட புலவர் பெருமக்கள் படைத்திருந்த இலக்கியங்களையும், அக்கால மக்கள் அன்றாடப் பேச்சில் பயன்படுத்திய வழக்குகள் பலவற்றையும் ஆய்ந்து நூலை இயற்றியுள்ளார் என்பதை அறியமுடிகிறது.

## 2.1.2. அதிகாரப் பகுப்பு முறை

தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என்ற மூன்று அதிகாரங்களைக் கொண்டது. 'எழுத்தும் சொல்லும் யாப்பும் ஆய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே? பொருளதிகாரம் பெறெமேயெனின் இவை பெற்றும் பெற்றிலேம்' என்று பாண்டியன் கூறியதாக இறையனார் களவியலுரை கூறுகிறது.[3] இது பொருளிலக்கணம் கற்பதற்காகவே எழுத்து, சொல் இலக்கணம் கற்பது என்ற பொருளை உணர்த்துகிறது. தொல்காப்பியர் அம்முறையிலேயே எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம் என வைத்துள்ளார். தொல்காப்பியம் முழுவதும் இலக்கியத்திற்கான இலக்கணம் கூறும் நோக்கம் மேலோங்கியுள்ளது.

### 2.1.2.1. எழுத்ததிகாரம்

'எழுத்தென்றது தன்னையே உணர்த்தியும் சொற்கு இயைந்தும் நிற்கும் ஓசை' என்று கூறுகிறார் நச்சினார்க்கினியர். தொல்காப்பியர் ஒலி வடிவமாய் உள்ளதே மொழி என ஒலி வடிவு பற்றி முதலில் கூறுகின்றார். எழுத்து முப்பத்து மூன்று என்று கூறுகிறார். எழுத்ததிகாரத்தில் நூன்மரபு,

மொழி மரபு, பிறப்பியல் ஆகிய மூன்று இயல்களில் எழுத்துகளை அறிமுகப்படுத்துகிறார். பின்வரும் ஆறு இயல்களில் புணர்ச்சி பற்றிக் கூறுகிறார். இலக்கியம் படைப்பதற்கு அடிப்படையாக அமையும் மொழியின் அடிப்படைக் கூறுகள் எழுத்ததிகாரத்தில் முன் வைக்கப்பட்டு உள்ளன எனலாம்.

### 2.1.2.2. சொல்லதிகாரம்

சொல்லதிகாரம் எழுத்துகள் பொருள் தரும் முறையில் சொற்களாகும் வகையைக் கூறுகிறது. இவ்வதிகாரம் தொடர்களில் இடம் பெறும் சொற்களின் வகைகளாகப் பெயர், வினை, இடை, உரிச்சொற்களையும், பெயர்கள் ஏற்கும் வேற்றுமைகளையும் விளக்குகிறது. எச்சவியலில் இவ்வியல்களில் எடுத்துக்காட்டாத எஞ்சியுள்ள கருத்துகள் இடம் பெற்றுள்ளன.

### 2.1.2.3. பொருளதிகாரம்

மொழி நிலையில் எழுத்தும் சொல்லும் இலக்கிய ஆக்கத்திற்கு அடிப்படையாக அமைவன. எனவே தொல்காப்பியரின் எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் இலக்கியத்தின் மொழிக் கூறுகளை ஆராய்கின்றன. மக்கள் வாழ்வியலை மையமாகக் கொண்டு இயற்றப்பெறும் இலக்கியத்திற்குரிய பொருண்மை பொருளதிகாரத்தில் இடம் பெறுகின்றது. இவற்றைப் பொருளதிகாரத்தின் முற்பகுதியில் அகத்திணை, புறத்திணை, களவியல், கற்பியல், பொருளியல் என்ற ஐந்து இயல்களில் தொல்காப்பியர் சுவைபடச் சொல்லியுள்ளார். உணர்ச்சி,

கற்பனை என்பன இலக்கிய ஆக்கத்திற்கு வேண்டப்படும் என்பதை மெய்ப்பாட்டியல், உவமவியல் பகுதிகளில் விளக்குகிறார். செய்யுளியல் என்ற பேரியலில் இலக்கிய வடிவங்களையும், வகைகளையும் ஆராய்ந்து இலக்கணம் கூறியுள்ளார். இலக்கியப் படைப்பிற்குரிய மரபு நிலைகளை மரபியலில் எடுத்துரைக்கிறார். ஆக, தொல்காப்பியரின் இலக்கண நூல் அதிகார வைப்பு முறை, அவரது இலக்கணக் கோட்பாடானது இலக்கியத்தை மையமாகக் கொண்டது என்பதை உணர்த்துகிறது.

### 2.1.3. இயல் அமைப்பு முறை

தொல்காப்பியம் மூன்று அதிகாரங்களையும், இருபத்தேழு இயல்களையும் கொண்டது. எழுத்ததிகாரமும் சொல்லதிகாரமும் தமிழ் மொழியின் இலக்கணமாக அமைவன. பொருளதிகாரம் அக்காலத் தமிழ் இலக்கியம் பற்றிக் கூறும் இலக்கியவியலாக அமைவது. ஆக, இலக்கியத்தின் மொழி நடைக் கூறுகள் எழுத்து, சொல் ஆகிய இரு அதிகாரங்களிலும் கருத்தியல் மற்றும் உத்தி சார்ந்த செய்திகள் பொருளதிகாரத்திலும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

மொழியின் அடிப்படைக் கூறுகளான உயிர், மெய், சார்பு என்ற எழுத்துக்களின் வரிசை, அவை மொழியில் தோன்றும் பாங்கு, பேச்சுறுப்புக்கள் ஒலிகளை வெளிப்படுத்தும் முறை ஆகியனவற்றை எழுத்திலக்கணத்தின் அறிமுகப் பகுதியாகிய நூல் மரபு, மொழி மரபு, பிறப்பியல் ஆகிய மூன்று இயல்களில் கூறியுள்ளார். புணரியல் முதலாக

குற்றியலுகரப் புணரியல் முடிய ஆறு இயல்களில் புணர்ச்சி இலக்கண விதிகளைத் தொகுத்தும் வகுத்தும் இலக்கணம் கூறியுள்ளார்.

சொல்லதிகாரத்தில் ஒலிக்கூறுகளால் உருவாக்கப்படும் சொல்லின் வகைகளையும், அவை தொடர் மொழியில் வழங்குதற்குரிய வழி முறையினையும் விளக்கமாகவும் விரிவாகவும் கூறியுள்ளார். சொல்லதிகாரத்தின் தொடக்கத்தில் தமிழ்மொழியின் தொடர் அமைப்பினைத் தொல்காப்பியர் விரிவாக ஆராய்ந்து விளக்கம் தந்துள்ளார்.

கிளவியாக்கத்தில் அல்வழித் தொடர்களுக்கும், பின்வரும் இயல்களில் வேற்றுமைத் தொடர்களுக்கும், இலக்கணம் கூறியுள்ளார். பெயரியல், வினையியல், இடையியல், உரியியல் ஆகிய பகுதிகளில் தொடர் மற்றும் வாக்கியங்களின் உறுப்பாக அமையும் சொற்களின் இலக்கணத்தை விரித்துரைத்துள்ளார். எஞ்சியவற்றை எச்சவியலில் அமைத்துள்ளார்.

எழுத்தும் சொல்லும் கூறி முடித்த ஆசிரியர் பொருளைப் பற்றி பேசுவதால் பொருளதிகாரம் என்று பெயர் பெற்றது. பொருள் என்பது உறுதிப் பொருளையோ, சொற்கள் தரும் பொருளையோ, சொற்றொடர்கள் உண்டாக்கும் மொழிப் பொருளையோ குறிக்கவில்லை. இலக்கியத்தின் பாடுபொருள் சார்ந்த செய்திகளை விளக்குவதாக அமைந்துள்ளது.

பொருளதிகாரம் இலக்கியப் பாகுபாட்டை விளக்குகிறது. இதில் அகம், புறம் என்னும் இலக்கியப் பொருண்மைகள் விளக்கப்பட்டுள்ளன. அகப்பொருள் இலக்கியத்தின் திணைப் பகுப்பு, துறைப் பகுப்பு, அகப்பொருள் மாந்தரின் பண்புகள் அவர்களது ஒழுகலாறுகள் நிகழ்தற்குரிய சூழல்கள், எந்தெந்தச் சூழலில் யார் யார், யார் யாரிடம் என்ன பேசலாம், பேசக்கூடாது என்னும் கூற்று வரையறைகள் ஆகியன இலக்கணங்களாக இலக்கிய மரபுகளாக முறைப்படுத்திக் கூறப்படுகின்றன. இவ்வாறே புறப்பொருள் மரபுகளும் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

'மேலை நாட்டு இலக்கிய மரபில் தொல்காப்பியப் பொருளதிகாரம் போன்றதோர் கவிதையியல் இதுவரை தோன்றியுள்ளதாகத் தெரியவில்லை'[4] என்ற கருத்து தொல்காப்பியரின் இலக்கிய உணர்வுக்கு சான்றாகும். பாடல் தோற்றத்திற்குத் துணையாகப் பயன்படும் கற்பனைப் பாங்கு, உலகியல் பார்வை, நாடக உத்தி ஆகியன பொருளதிகாரத்தில் இடம் பெற்றுள்ளன. பொருளதிகாரத்தின் முற்பகுதியில் அகத்திணை, புறத்திணை, களவியல், கற்பியல், பொருளியல் ஆகியன கவிதையின் பொருண்மையை விளக்கமாகக் கூறுகின்றன.

செய்யுளியல், உவமவியல், மெய்ப்பாட்டியல், மரபியல் ஆகியன கவிதையின் வடிவமும் உத்திகளும் எவ்வாறு அமைய வேண்டும் என்பதை விரிவாகக் கூறுகின்றன. இவ்வியல்கள் தமிழரின் வாழ்வியல் சார்ந்த

பண்பாட்டுக் கூறுகளை எடுத்துரைக்கும் வாழ்வியல் களஞ்சியமாகவும் அமைகின்றன.

## 2.2. இலக்கணக் களங்கள் காட்டும் இலக்கியக் கோட்பாடு

தொல்காப்பியர் எழுத்ததிகாரம் சொல்லதிகாரங்களில் மொழிக் கூறுகள் பற்றி விளக்குமிடத்து இலக்கிய மொழி, வழக்கு மொழி என்ற இரண்டிற்கும் இலக்கணம் கூறியுள்ளார். இதனை,

1. செய்யுள் வழக்கு
2. உலக வழக்கு

என்ற இரண்டு நிலைகளில் விளக்கலாம்.

### 2.2.1. செய்யுள் வழக்கு

தொல்காப்பியர் எழுத்ததிகாரத்திலும் சொல்லதிகாரத்திலும் மொழி செய்யுளில் பயின்று வரும் முறையைக் குறிப்பிடுகிறார்.

"செய்யுள் இறுதிப் போலி மொழிவயின்
னகார மகாரம் ஈரொற்றாகும்" (தொல். எழுத்து. 51)
"நீட வருதல் செய்யுளுள் உரித்தே" (தொல். எழுத்து. 209)
"முற்படக் கிளத்தல் செய்யுளுள் உரித்தே"(தொல். சொல். 39)

இவை போல் எழுத்ததிகாரத்தில் 214, 235, 238, 259, 262, 289, 306, 317, 357, 481, 483 ஆகிய நூற்பாக்களிலும் சொல்லதிகாரத்தில் 18, 51, 104, 192, 193, 208, 391, 456 ஆகிய நூற்பாக்களிலும் செய்யுள் வழக்குகள் கூறப்படுவதைக் காணலாம்.[5]

### 2.2.2. உலக வழக்கு

"ஆக்கக் கிளவி காரண மின்றியும்
போக்கின் றென்ப வழக்கினுள்ளே" (தொல். சொல். 22)

"ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கினாகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கில் சொல்லாறு அல்ல" (தொல். சொல். 27)

இவை போல் எழுத்ததிகாரத்தில் 480, 483 ஆகிய நூற்பாக்களிலும் கூறப்படுவதைக் காணலாம்.[6]

மேலும், தொல்காப்பியர் எச்சவியலில் செய்யுளுக்குரிய சொற்கள் என சொற்களை இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் எனப் பிரிக்கிறார்.

"இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே" (தொல். சொல். 397)

இயற்சொல் – செந்தமிழ் நிலத்து வழக்கில் உள்ள நிலைபேற்றுச் சொல்

திரிசொல் – ஒரு பொருள் பன்மொழி, பல்பொருள் ஒரு மொழி

திசைச்சொல் – செந்தமிழ் சேர்ந்த பன்னிரண்டு நிலத்தும் வழக்கில் உள்ள சொற்கள்

வடசொல் – சமஸ்கிருதம், பாலி

என இந்த நான்கு வகைச் சொற்களும் செய்யுளில் பயன்பாட்டில் உள்ளவை என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். இதன் மூலம் தொல்காப்பியரின் இலக்கணக் களங்களாக உலக வழக்கு, செய்யுள்

வழக்கு ஆகியவை அமைகின்றமையை அறியலாம். இக்களங்கள் தொல்காப்பியர் இலக்கியத்திற்கும் இலக்கிய வழக்கிற்கும் கோட்பாடு வகுத்தார் என்பதைப் புலப்படுத்துகின்றன.

## 2.3. இலக்கிய விளக்கம் காட்டும் இலக்கியக் கோட்பாடு

தமிழர் வாழ்வின் பண்பாட்டினை அறியும் மூலங்களுள் மொழி சார்ந்த மூலமும் ஒன்று. இவற்றுள்முதல் சான்றாக விளங்குவது தொல்காப்பியம். எழுத்தும் சொல்லும் மொழி இலக்கணத்தைப் பகர்வன. பொருளதிகாரம் வாழ்க்கைக்குரிய இலக்கணத்தைக் கூறுவதென்றால் உவமயியலும், செய்யுளியலும் கூறியிருக்கத் தேவையில்லை. உவமயியலும், செய்யுளியலும் இலக்கியத்தின் வடிவம் பற்றி எடுத்துரைக்கின்றன. வாழ்க்கைக்கு இலக்கணம் கூற வேண்டும் என்பதை விட அவர்கால இலக்கிய ஆக்கத்திற்கான இலக்கணம் கூற வேண்டும் என்பதே தொல்காப்பியரது நோக்கம். எனவே இலக்கியக் கோட்பாடுகளை வெளிப்படுத்தி நிற்பது பொருளதிகாரம் என்பது தெளிவாகும். தொல்காப்பியத்தில் இடம் பெறும் பொருள் இலக்கணக் கூறுகளை,

1. இலக்கியப் பாடுபொருள்
2. இலக்கிய அமைப்பு
3. இலக்கிய உத்தி

என்ற மூன்று நிலைகளில் விளக்கலாம்.

### 2.3.1. இலக்கியப் பாடுபொருள்

கவிதையின் பாடுபொருள் அகம் புறம் என இரு பெரும் கூறுகளாக விளக்கப்பட்டுள்ளது. அவற்றுள்,

"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை யென்ப" (தொல். பொருள். 1)

என்ற நூற்பாவில் அகத்திணையை விளக்கியப்பின் புறத்திணை பற்றி விளக்குமிடத்தும் 'முற்படக் கிளந்த' என அகத்திணை விளக்கத்தைச் சுட்டிப் பின் புறத்திணைகளை விளக்க முற்படுகிறார்.

அகம், புறம் என்னும் இவ்விரண்டு பாடுபொருளுக்கும் ஏற்ற பின்புலங்களான முதல், கரு, உரிப்பொருள் என்ற பாடல் கூறுகளை,

"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை" (தொல். பொருள். 3)

என்ற நூற்பாவில் விளக்கியுள்ளார்.

முதலென்பன நிலமும் காலமும்; கருவென்பன தெய்வம் முதலியன; உரியென்பன திணைக்குரிய ஒழுக்கங்கள். இவ்வரையறைகள் புலவர்களால் இயற்றப்படும் செய்யுளுக்கு உரியவை எனலாம். சில உலகியலுக்கும் ஏற்புடையதாக அமையும். முழுவதும் ஏற்புடையதாக அமையாது. எடுத்துக்காட்டாக குறிஞ்சியாகிய நிலத்தில் குறிஞ்சித் திணையின் உரிப்பொருளாகிய புணர்ச்சி நடைபெறுவதாகச் சொல்லுவது இலக்கிய மரபு. இப்படியே ஒவ்வொரு நிலத்திற்கும் உரிய ஒழுக்கங்களை

இணைத்துக் கவிதைகள் இயற்றப்படும். உலக வழக்கில் மலை நாட்டில் மட்டும் காதலர்கள் ஒன்றுபடுவர் என்று வரையறை கூற முடியாது. வேறு இடங்களில் சந்தித்து ஒன்றுபடுவதும் உண்டு. இஃது உலகியல் வழக்கு. உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது.

இலக்கியத்தில் சுவையை மிகுதிப்படுத்த இலக்கிய ஆசிரியர்கள் தம் கற்பனையால் பல உத்திகளைக் கையாளுவது வழக்கம். அந்த முறையில் புணர்தல் என்ற நிகழ்ச்சிக்கு இயற்கை வளமும் தனிமையும் மிக்க மலை நிலத்தை ஏற்றதாக அமைத்து இலக்கியத்தில் சுவை அமைத்துள்ளனர். மேலும் ஒரு இலக்கிய நிகழ்வானது அந்நிகழ்வை மேலும் மேம்படுத்துவதற்கான பின்னணியில் கூறப்படுவது என்பது எக்காலத்திற்கும் பொதுவான உளவியலாகும்.

> 'நிலமும் பருவப் பொழுதுகளும் இயற்கையும் இவற்றைப் பின்னணியாகக் கொண்ட மனித வாழ்வும் இயைபுபடப் புனையப்படுவதே திணை இலக்கியமாகும். நிலச் சாயலும் அதில் வாழும் உயிரினச் சாயலும் மனித வாழ்வுச் சாயலும் ஓவியமாக படிந்து கிடப்பதே திணை இலக்கியம்'[7]

திணை இலக்கியம் இலக்கிய வகைகளுள் தனிப்பண்புகள் பலவற்றை உடையது.

தமிழ்த்திணை இலக்கியம் தன்னுணர்ச்சிப்பா வகையில் உணர்வையும், காப்பியப்பா வகையில் புனைவியலையும், நாடகப்பா

வகையில் வடிவ அமைப்பையும் ஒரு சேரப் பெற்றது. மனித உளவியலை அடிப்படையாகக் கொண்டு அகப்புற நிகழ்ச்சிகளைக் கருவாக்கி அவற்றில் தோன்றும் சிறு சிறு சிக்கல்களைப் பின்னிப் புனைவது திணை இலக்கியம்.

> ‘புறத்தே ஏற்படும் மாற்றங்கள் பல; அக மாற்றங்கள் மிக மிகச் சில; அன்றும் இன்றும் பாலுணர்வில் மாற்றமில்லை; அதனை விளைவிக்கும் சூழல்களில் மாற்றமுண்டு. எனவே தான் அடிமனநிலைகளையே புனைகின்ற சங்கத் தொகைப் பாடல்கள் இன்றும் நம்மோடு உடன் வாழ முந்துகின்றன.’[8]

திணை இலக்கியத்தின் பொதுமையும் புதுமையும் போற்றத்தக்கன.

## 2.3.1.1. அகம் புறம் பாகுபாடு

‘அகம்’ என்பது உள்ளத்தின் கண் நிகழ்வது. உணர்ச்சிவயின் அறிவதின்றி இவ்வாறெனப் புறத்து எடுத்துரைத்தல் இயலாதது. அது மனத்தினால் அறியும் மாண்புடையது. இதனையே தொல்காப்பியர்,

> “எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது
> தானமர்ந்து வரூஉம் மேவற்றாகும்” (தொல். பொருள். 219)

என்கிறார். அதுவே காதலுணர்வு. இதனையே ‘அகம்’ என்று தமிழ்ச்சொல் குறிப்பிடுகின்றது.

போர் செய்வதும் அறம் செய்வதும் ஆனபயன் பிறர்க்கும் புலனாவதால் இது புறம் எனப்படும்.

அகம், புறம் என்பன பெரும்பான்மை பொருள் கருதிப் பிரிவுபட்டிருக்க வேண்டும்.

"மக்கள் நுதலிய அகன்ஐந் திணையும்

சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்" (தொல். பொருள். 57)

"புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது

அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே" (தொல். பொருள். 58)

என்று அகப்பாடல்களில் சுட்டிக் கூறும் ஒருவரது இயற்பெயர் வராது என்கிறார். இது மக்கள் அனைவரையும் பொதுவாகக் கருதிப் பாடப்பெறுவது. அகப்பாடலே ஆயினும் பெயர் சுட்டப்பட்டால் அது புறமாகிவிடும்.

## 2.3.1.2. தொல்காப்பியரின் அகத்திணைக் கோட்பாடு

"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்

முற்படக் கிளந்த எழுதிணை என்ப" (தொல். பொருள். 1)

கைக்கிளை, அன்பின் ஐந்திணை (குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை) பெருந்திணை என அகத்திணை ஏழாகும்.

## 2.3.1.3. கைக்கிளை

அகத்திணையில் அடங்கிய ஏழு திணைகளில் கைக்கிளை முதலிடம் பெற்றாலும், அதன் இலக்கணம் ஐந்திணை விரிவுக்குப் பின்பே தொல்காப்பியத்தில் கூறப்படுகிறது. கைக்கிளை விரிவு இல்லாதது.

"காமஞ் சாலா இளமை யோள்வயின்

ஏமஞ் சாலா இடும்பை எய்தி

நன்மையும் தீமையும் என்றிரு திறத்தால்

தன்னொடும் அவளொடும் தருக்கியப் புணர்த்துச்

சொல்லெதிர் பெறா அன் சொல்லி யின்புறல்

புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே" (தொல். பொருள். 53)

பருவம் எய்தா இளம்பெண் ஒருத்தியை (பருவம் எய்தினவளாக மயங்கி) ஒருவன் காதல் கொள்கிறான். காதல் துன்பம் கொண்டு நன்மை எனவும் (தனக்குச் சாதகமாகவும்) தீமை எனவும் (தனக்குப் பாதகமாகவும்) அவளைத் தன்னோடு உறவுப்படுத்திச் செறுக்குகிறான். ஆனால் அவளிடமிருந்து எவ்வித மறுமொழியும் கிடைக்கவில்லை என்றாலும் தனக்குத் தானே சொல்லி இன்புறுகிறான். இதுவே கைக்கிளையின் விளக்கமாகத் தொல்காப்பியம் தரும் கருத்து.

## 2.3.1.4. அன்பின் ஐந்திணை

ஒத்த அன்பும், ஒத்த குலனும், ஒத்த வடிவும், ஒத்த குணமும், ஒத்த செல்வமும், ஒத்த இளமையும் ஆகிய அனைத்தும் தலைவன் தலைவி இருவருக்கும் ஒருங்கு அமைவது அன்பின் ஐந்திணையாகும்.

தொல்காப்பியர் விளக்கும் அகம் என்பது அன்போடு ஓர் ஆணுக்கும் பெண்ணுக்கும் பத்துவகைப் பொருத்தத்தில் உள்ளடங்கி மேற்கொள்கின்ற காதல். இது தான் உயர்வான காதல். ஏனையோர் கொள்கின்ற காதல் இழிவானது.

## 2.3.1.5. முதல் கரு உரிப்பொருள் சிறப்பு

அகத்திணைப் பாடல்களின் கருத்தைச் சிறப்பாகக் கூறுவதற்கு உறுதுணையாக விளங்குவன முதல் கரு உரிப்பொருள்கள் ஆகும்.

அன்பின் ஐந்திணை என்று அழைக்கப்படுகின்ற உயர் ஒழுக்கமாகிய உரிப்பொருளைக் கூறுவதற்கு முதல் கருப்பொருள்களாகிய பின்புலம் புலவர்க்குத் தேவையாயிற்று. இவை பின்புல வருணனைக்காகவே கூறப்பெறுகின்றன. பாடல் கூறுபாடுகளைக் குறித்து தொல்காப்பியர்,

"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே,
நுவலுங் காலை முறைசிறந் தனவே
பாடலுட் பயின்றவை நாடுங் காலை" (தொல். பொருள். 3)

என்கிறார். இந்நூற்பாவிற்கு உரை செய்த இளம்பூரணர் ஒரு பாடலில் முதல் பொருளும், கருப்பொருளும், உரிப்பொருளும் ஆகிய மூன்றும் ஒருங்கே வருமிடத்து அப்பாடல் முதல் பொருளால் திணை பெறும் என்கிறார்.

முதல் பொருள் இன்றி கருப்பொருள், உரிப்பொருள் மட்டும் பெற்று வந்தால் அப்பாடல் கருப்பொருளால் பெயர் பெறும் என்கின்றார். முதலும் கருவுமின்றி உரிப்பொருள் மட்டுமே இருந்தால் உரிப்பொருளால் பெயர் பெறும் என்கின்றார். அவர் கருத்துப்படி,

1. முதல் பொருள் கருப்பொருளை விடச் சிறந்தது
2. கருப்பொருள் உரிப்பொருளை விடச் சிறந்தது

என்பதாகும்.

ஆனால் நச்சினார்க்கினியருக்கு இக்கருத்தில் உடன்பாடில்லை. அவர் இந்நூற்பாவிற்கு நேர் முரணான கருத்தினை முன் வைக்கின்றார்.

இவரின் கருத்துப்படி உரிப்பொருளே மற்ற இரண்டு பொருட்களிலும் சிறந்ததாகும். எனவே பாடல்களுக்கு உரிப்பொருளால் திணை வகுக்க வேண்டும் என்பது இவரின் கருத்தாகின்றது.

இருவேறு உரையாசிரியர்களும் நேர் எதிரான கருத்துக்களைக் கொண்டிருப்பதால் திணை வகுப்பு முறை குறித்து சில நூற்பாக்கள் மூலம் ஆராய்ந்தறியலாம்.

"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே" (தொல். பொருள். 15)

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நிலம் பொழுதொடு வாராவாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்" (தொல். பொருள். 21)

"திணை மயக்குறுதலும் கடிநிலை யிலவே
நிலன் ஒருங்கு மயங்குதல் இல்லென மொழிப
புலன் நன்குணர்ந்த புலமை யோரே" (தொல். பொருள். 14)

என்ற மூன்று நூற்பாக்களும் நோக்கத்தக்கன. இவற்றில்,

"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே" (தொல். பொருள். 15)

என்னும் நூற்பாவிற்கு இளம்பூரணர் உரிப்பொருள் அல்லாத முதல்பொருளும் கருப்பொருளும் மயங்கி வரும், உரிப்பொருள் மயங்கி வராது என்று கூறுகிறார்.

நச்சினார்க்கினியர் இவரின் மாறுபட்டு உரிப்பொருள் பெறாதவை கைக்கிளையும், பெருந்திணையும் இவை இரண்டும் பிற திணைகளில் மயங்கி வரும் என உரையெழுதுகின்றார்.

இவ்விரு உரையாசிரியர்களிடையே இந்நூற்பாவிற்கு உரை எழுதுவதில் மாறுபாடுகள் காணப்படுகின்றன. தொல்காப்பியரே,

"திணை மயக்குறுதலும் கடிநிலை யிலவே
நிலனொருங்கு மயங்குதல் இல்லென மொழிப" (தொல். பொருள். 14)

என்று கூறியிருப்பதால் இளம்பூரணர் கருத்து மாறுபட்டு அமைந்துள்ளது.

"எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்" (தொல். பொருள். 23)

எனத் தொடங்கும் நூற்பாவில் கருப்பொருட்கள் மயங்கி வரும் எனக் கூறுகின்றார். இறுதியாக,

திணை மயக்குறுதலும் எனத் தொடங்கும் நூற்பாவில் இரண்டு செய்திகளைக் கூறுகின்றார்.

1. திணை என்பதும், நிலம் என்பதும் வேறானவை என்பதைச் சுட்டுகின்றார். திணை என்பது ஒழுக்கமாகும். இதனை,

"உயர்திணை என்மனார் மக்கட் சுட்டே" (தொல். சொல். 1)

என்னும் அடி உறுதி செய்கின்றது.

அவ்வொழுக்கமாவன கைக்கிளை முதலாகப் பெருந்திணை இறுதியாகச் சொல்லப்பட்ட ஏழுமாகும். எனவே, திணை—ஒழுக்கம்—உரிப்பொருள் ஆகிய அனைத்தும் ஒன்றையே குறித்து வருவதை அறிய முடிகின்றது.

2. இந்நூற்பாக்களின் வழி அறியலாகும் இரண்டாம் கருத்து.

(i) முதல் பொருளில் நிலம் மயங்காது. பொழுது மயங்கும்.

(ii) கரு, உரிப்பொருட்கள் அனைத்தும் மயங்கி வரும்.

இவற்றின் அடிப்படையில் ஆராய்ந்தால் தொல்காப்பியர் கருத்துப்படி ஐந்து நிலத்திலும் அனைத்து உரிப்பொருளும் நிகழும் என்பதாகும்.

### 2.3.1.6. பெருந்திணை

பொருந்தா நிலையில் கூடும் கூட்டம் பெருந்திணை ஆகும்.

"ஏறிய மடல்திறம் இளமை தீர்திறம்
தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்
மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்
செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" (தொல். பொருள். 54)

என்கிறார் தொல்காப்பியர்.

தலைவன் மடல் ஏறுவதும், தலைமகன் முதியவனாகித் தலைமகள் இளையவளாக இருப்பதும், தலைமகள் முதியவளாகித் தலைமகன் இளையவனாக இருப்பதும், இவ்விருவரும் முதுமையில் அறத்தின் மேல் மனம் நிகழ்தலின்றி காமத்தின் மேல் மனம் நிகழ்தலும், தெளிவு ஒழிந்த காமத்தின் கண்ணே மிகுதலும் என இவை யாவும் பெருந்திணைக்குரியதென்பது தொல்காப்பியர் கருத்தாகும்.

### 2.3.1.7. தொல்காப்பியத்தில் புறத்திணைக் கோட்பாடு

புறம்–தொல்காப்பியத்திலும் சங்க இலக்கியத்திலும் புலவர் பெருமக்களால் ஆளப்பெற்றுள்ளது. தொல்காப்பியர் திணை–என்னும் உறுப்பை விளக்குங்கால் அகத்திணையியலில்,

"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்
முற்படக் கிளந்த எழுதிணை என்ப" (தொல். பொருள். 1)

என்றும், செய்யுளியலில்,

"கைக்கிளை முதலா ஏழ்பெருந்திணையும்

முற்கிளந் தனவே முறையி னான" (தொல். பொருள். 486)

என்றும் விளக்குகிறார்.

முறையினால் சொல்லுதலாவது என ஒவ்வொரு அகத்திணைக்கும் உரிய பாடாண், வஞ்சி, வெட்சி, வாகை, உழிஞை, தும்பை, காஞ்சி எனப் புறத்திணைகளை விளக்குவார். இதனால் அகத்தைக் கூறிப் புறத்தைப் பெற வைக்கும் தொல்காப்பியரின் புலப்பாட்டு நெறி நன்கு விளங்கும்.

தொல்காப்பியரின் புறத்திணைப் பகுப்பு அகத்திணைப் பகுப்பின் அடிப்படையிலிருந்தே என எண்ணுமாறு போல, அகத்திணையியலின் இறுதியிலும், புறத்திணையியலின் தொடக்கத்திலும் நூற்பாக்களைத் தருகிறார்.

"புறத்திணை மருங்கின் பொருந்தின் அல்லது

அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே" (தொல். பொருள். 58)

தொல்காப்பியர் அகம், புறம் என இலக்கியத்தின் பாடுபொருளைப் பகுத்து திணை அடிப்படையில் முறைமைப்படுத்தியுள்ளார் என்பது தெளிவாகிறது. அவரது இலக்கியக் கோட்பாட்டில் பாடுபொருள் முக்கிய இடம் பெறுகிறது என்பது தெளிவாகிறது.

## 2.3.2. இலக்கிய அமைப்பு

தொல்காப்பியர் பாடுபொருளுக்குக்கொடுத்த முக்கியத்துவத்தைக் கவிதையின் அமைப்பிற்கும் கொடுத்துள்ளார். கவிதை என்ன கூறுகிறது

என்பது பாடுபொருள் என்றும், அதை எவ்விதம் கூறுகிறது என்பது அமைப்பு என்றும் கூறலாம். இக்கருத்தை,

> "Form in poetry, simply defined, is manner in which a poem is composed distrinct from what the poem is about"

எனப் பிரின்ஸ்டன் (இலக்கியக் கலைக் களஞ்சியம் ப–286) கூறும்.[9] இலக்கிய அமைப்பை,

1. வடிவம்
2. உறுப்புகள்
3. இயைபு

என்ற மூன்று நிலைகளில் ஆராயலாம்.

### 2.3.2.1. வடிவம்

கவிதை வடிவத்தை யாப்பு வடிவம், மொழியமைப்பு வடிவம் என இருவகைப் படுத்தலாம். யாப்பு வடிவம் ஓசையைக் குறிப்பது. மொழி வடிவம் பாடலில் பயின்று வரும். ஒலி, உருபன், சொல், தொடர் போன்றவற்றின் நிலையைக் கூறுவது. உவமைகள், உருவகங்கள், உள்ளுறை, இறைச்சி ஆகியன கவிதையின் மொழியமைப்பால் ஏற்படுவன. இவற்றால் தொல்காப்பியத்தில் தொல்காப்பியர் அக்கால இலக்கியங்களுக்கு வகுத்த இலக்கணம் மூலம் அவர் தம் இலக்கியக் கோட்பாடுகளை வெளிப்படுத்தியுள்ளார் என்பது தெளிவாகிறது.

### 2.3.2.2. உறுப்புகள்

தொல்காப்பியர் செய்யுளியலில் செய்யுள் உறுப்புகளை முதல் நூற்பாவில் 34 என்ற எண்ணிக்கையுடன் தொகுத்துரைத்துள்ளார். தொல்காப்பியர் கூறும் முப்பத்து நான்கு செய்யுள் உறுப்புகளையும் விளங்கிக் கொள்வோமாயின், அவையே தொல்காப்பிய இலக்கியக் கொள்கைகள் என்பது புலனாகும். அந்நூற்பா வருமாறு:

"மாத்திரை, எழுத்தியல் அசைவகை எனாஅ
யாத்தசீரே அடி யாப்பு எனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவியல் எனாஅ
திணையே கைகோள் கூற்றுவகை எனாஅ
கேட்போர் களனே காலவகை எனாஅ
பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
மாட்டே வண்ணமோடு யாப்பியல் வகையின்
ஆறுதலை யிட்ட அந்நா லைந்தும்
அம்மை அழகு தொன்மை தோலே
விருந்தே இயைபே புலனே இழைபெனா அப்
பொருந்தக் கூறிய எட்டொடும் தொகைஇ
நல்லிசைப் புலவர் செய்யுள் உறுப்பென
வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே" (தொல். பொருள். 310)

இவற்றுள் இருபத்தாறினை ஒரு தொகுதியாகவும், எட்டு வனப்புகளை ஒரு தொகுதியாகவும் கூறியிருக்கக் காண்கிறோம்.

## 2.3.2.3. இயைபு

தொன்மையான ஒன்றின் இயைபு 'மரபு' எனக் குறிக்கப்படுகிறது. தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் சொல்லாட்சி மரபுகளை வகைப்படுத்தி விளக்குகிறார்.

தொல்காப்பியர் தம் 'மொழி' இலக்கணக் கூறுகளில் எழுவாய் பயனிலை, இயைபு, அவாய்நிலை, போன்ற தொடரியல் நிலையிலான இயைபுகளை விளக்கியுள்ளார். அதே இயைபு நிலை விளக்கத்தை இலக்கியத்திற்காகப் பொருத்திக் காட்ட ஏதுவாக மரபியல் செய்திகள் அமைந்துள்ளன. மரபியலில் அவர் குறிப்பிடும் வழக்குகள் 'இயைபு' என்ற நிலையில் எடுத்துக் கொள்ளத்தக்கவையாகவே உள்ளன.

இலக்கியத்தில் 'மரபு'என்பது மிகவும் இன்றியமையாததாகும். தொல்காப்பியர் இம்மரபினை நேர்முகமாகவும், மறைமுகமாகவும் வலியுறுத்திச் செல்கிறார். தொல்காப்பியர்,

"வழக்குவழிப் படுதல் செய்யுட்குக் கடனே" (தொல். பொருள். 213)

எனக் கூறுகிறார். உலக வழக்காகிய சமுதாய மரபு இலக்கியத்தின் அடிப்படை மரபாகும் என்பது தெளிவாகிறது.

"வழக்கு எனப்படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி அவர்கட் டாகலான" (தொல். பொருள். 638)

என்பதில் வழக்கு என்று சொல்லப்பட்டது உயர்ந்தோர் வழக்கு என்பதும் இழிந்தோர் வழக்கு எனப்படாது எனவும் கூறுகிறார். இலக்கியத்திற்குரிய மரபு நிலைகளைத் தொல்காப்பியர் விளக்கியுள்ளார்.

### 2.3.2.3.1. சொல் மரபு

“மரபே தானும்

நாற்சொல் இயலான் யாப்புவழிப் பட்டன்று” (தொல். பொருள். 385)

என்பதில் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நால்வகைச் சொற்களால் பாடல் இயற்றுவது பற்றியதே இம்மரபு ஆகும். இதில் சொல் மரபு அன்றி பொருள் மரபும் அடங்கும் என்று பேராசிரியர் கூறுகிறார். ஒரு காலத்து வழங்கும் சொல் பிறிதோரிடத்து வழங்கும் காலத்தானும் இடத்தானும் வேறுபடுவதுடையது. எனவே சொல்லும் பொருளும் மரபுவழிப் படினே விளங்கும் என்பது பேராசிரியர் கருத்தாகும்.

‘மரபுநிலை திரிதல் செய்யுட் கில்லை....’ (தொல். பொருள். 636)

என்ற தொல்காப்பியர் கருத்து, சொல்லாட்சிக்கு மட்டுமன்றி, செய்யுள் வழக்கு அனைத்திற்கும் பொருந்தும்.

“மரபுநிலை திரியின் பிறிது பிறிதாகும்” (தொல். பொருள். 637)

சொல்லாட்சி மரபுகளை ஆண்பால் பெயர்கள், பெண்பால் பெயர்கள், இளமைப் பெயர்கள், புல், மர வகைகளின் உறுப்புப் பெயர்கள் எனப் பலவகைப்படுத்தித் தொல்காப்பியர் விளக்குகிறார். அகத்திணைப் பாடல்களில் கருப்பொருட்களை எடுத்தோதும் முறை இருப்பதால் அதற்கு இம்மரபியல் வழிகாட்டுகிறது. எனவே மரபுநிலை திரிதல் என்ற சொல்லாட்சி மரபை மாற்றியுரைத்தல் என்று பொருள்படும். இலக்கியம் எந்நிலையில் பிரிந்தாலும் பொருள் பிறிது பிறிதாகி விளங்காமல் போகும் என்பதையும் குறிப்பால் உணர்த்துகிறது.

மரபு மீறுதல் என்பது முன்னைய அடிப்படையை வைத்தே செயல்படுவதாகும். மரபில் வளர்ச்சி காட்டுவதே இலக்கியத்தின் தனித்திறன் வெளிப்பாடாகும். மரபு பற்றியும் மரபின் வளர்ச்சி பற்றியும் இவ்வியலில் ஆராய்ந்து அறியப் பெறுகின்றது.

## 2.3.2.3.2. கருப்பொருள் சிறப்பு

முதல் பொருளாகிய நிலத்திலும், பொழுதிலும் கருக்கொள்கின்ற பொருட்கள் கருப்பொருள்கள் ஆகும். கருப்பொருளே உரிப்பொருளுக்கு அடிக்கல். உரிப்பொருள் சிறக்கக் கருப்பொருள் அடிப்படையாக அமைகிறது. இயற்கைப் புனைவிற்குப் பெரிதும் பயன்படுவது கருப்பொருள் ஆகும். ஆதலால் கருப்பொருளுள் சிறப்பாகத் திகழும் விலங்கு, பறவையைப் பற்றித் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள கோட்பாடுகள்,

அ. கருப்பொருள் விளக்கம்

ஆ. கருப்பொருள் மரபு

என இரண்டாகப் பிரித்து ஆராயப் பெறுகின்றது.

## 2.3.2.3.3.கருப்பொருள் விளக்கம்

ஒவ்வொரு நிலத்திலும் தோன்றும் பொருட்களைத் தொல்காப்பியர் அந்நிலக் கருப்பொருட்களாகக் கொண்டார். முதல் பொருளினின்றும் கிளைப்பதாலும் உரிப்பொருளுக்குத் துணையாக நிற்பதாலும் முதல் பொருளுக்கும் உரிப்பொருளுக்கும் இடையே இக் கருப்பொருளைத் தொல்காப்பியர் வைத்தார் எனலாம்.

## 2.3.2.3.4. தொல்காப்பியர் கூறும் கருப்பொருட்கள்

"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை
செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ
அவ்வகைப் பிறவும் கருவென மொழிப" (தொல். பொருள். 20)

இங்குத் தெய்வம், உணவு, மா, மரம், புள், பறை, தொழில், யாழ் என்னும் எண் வகைக் கருப்பொருட்களைத் தொல்காப்பியர் கூறுகின்றார். அவை மட்டுமின்றி அவற்றுடன் பிறவும் உண்டு என்று அவர் கூறினாரேயொழிய, அவை யாவை என்பது பற்றிய விரிவை தரவில்லை. எனவே தொல்காப்பியர் கூறிய கருப்பொருட்கள் எட்டே என்பது இதனின்றும் பெறப்படுகின்றது.

## 2.3.2.3.5. கருப்பொருள் மரபு

மரபு பற்றிய கோட்பாடுகள் தொல்காப்பியரால் எடுத்துக் கூறப்பட்டவைகளாகும். "ஏதேனும் ஒருமுறை முதலில் உருவாகிய பின் வழக்கத்தில் நிலைத்து விடுகிறது. அவ்வாறு வழங்கி வழங்கி நிலைபெற்று விடுகின்ற ஒன்றைத் தான் மரபு என்று குறிக்கின்றோம்" என்று மு.வரதராசன் கூறுகின்றார். இவர் கூற்றுக்கிணங்க இயற்கைக் கூறுகளை உணர்ந்து தெளிந்த ஆற்றலைத் தொல்காப்பியர் நுணுக்கமாக மரபியலில் உணர்த்தியிருக்கின்றார். கருப்பொருள்களுள் விலங்கு, பறவை, மக்கள் ஆகிய மூன்றும் பாடலுள் பயின்று வருகையில் நில மரபுகளை ஏற்றுவரும். அம்மரபுகளை எல்லாம் தொல்காப்பியர் மரபியலில் விளக்குகின்றார். இக் கருப்பொருள் மரபுகளில் விலங்கு, பறவை, மக்கள் ஆகிய மூன்றும் ஆண்பால் பெயர், பெண்பால் பெயர், இளமைப் பெயர்

என்னும் மூவகைப் பெயர்களையும் ஏற்கும். இம்மரபுகளைத் தொல்காப்பியத்தில் கண்டவாறு விளக்குவது பொருத்தமானதாகும். இதற்கேற்ப இப்பகுதியானது,

1. இளமைப் பெயர்
2. ஆண்பாற் பெயர்
3. பெண்பாற் பெயர்

என்னும் முக்கூறுகளில் ஆராயப்பெறுகின்றது.

## 1. இளமைப் பெயர்

விலங்கினத்திலும், பறவையினத்திலும், மக்களினத்திலும் இளமைப் பெயர்கள் அமையும் விதத்தைத் தொல்காப்பியர் கூறியிருக்கின்றார். பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி என ஒன்பது வகையான இளமைப் பெயர்களைத் தொல்காப்பியர் மரபியலில் குறிப்பிடுகின்றார்.

"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்
பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்
றொன்பதும் குழவியோ டிளமைப் பெயரே" (தொல். பொருள். 545)

தொடர்ந்து வரும் நூற்பாக்களில் எவையெவை எந்தெந்த இளமைப் பெயரைப் பெறும் என்பதையும் விளக்குகின்றார்.

### குழவி

"குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை" (தொல். பொருள். 563)

"ஆவும் எருமையும் அதுசொலப் படுமே" (தொல். பொருள். 564)

"கடமையும் மரையு முதனிலை ஒன்றும்" (தொல். பொருள். 565)

"குரங்கும் முசுவும் ஊகமும் மூன்றும்

நிரம்ப நாடின் அப்பெயர்க் குரிய" (தொல். பொருள். 566)

"குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை

கிழவ அல்ல மக்கட் கண்ணே" (தொல். பொருள். 567)

"பிள்ளை குழவி கன்றே போத்தெனக்

கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே" (தொல். பொருள். 568)

என்ற நூற்பாக்களில் 'குழவி' என்னும் இளமைப் பெயர் யானை, ஆ, எருமை, கடமை, மரை, குரங்கு, முசு, ஊகம் ஆகிய விலங்கினங்களின் இளமைப் பெயராகவும், நெல்லும் புல்லுமொழிந்த ஓரறிவுயிர்களின் இளமைப் பெயராகவும் வரும் என்று கூறுகிறார் தொல்காப்பியர்.

**மறி**

"யாடுங் குதிரையும் நவ்வியும் உழையும்

ஓடும் புல்வாய் உளப்பட மறியே" (தொல். பொருள். 556)

எனத் தொல்காப்பியர் 'மறி' எனும் இளமைப் பெயர் ஆடு, குதிரை, நவ்வி, உழை, புல்வாய் (வருடை மான்) ஆகியவற்றிற்குரிய என்று கூறுகின்றார்.

**குருளை**

"நாயே பன்றி புலிமுயல் நான்கும்

ஆயுங் காலைக் குருளை என்ப" (தொல். பொருள். 552)

என்ற நூற்பா நாய், பன்றி, புலி, முயல் ஆகிய நான்கின் இளமைப் பெயர் 'குருளை' யென்று வழங்கும் என்பதை உணர்த்துகிறது.

## பார்ப்பு

"அவற்றுள்

பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" (தொல். பொருள். 548)

"தவழ்பவை தாமும் அவற்றோர் அன்ன" (தொல். பொருள். 549)

"மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்

அவையும் அன்ன அப்பா லான" (தொல். பொருள். 558)

என்ற நூற்பாக்களில் 'பார்ப்பு' எனும் சொல் பறவைகளின் இளமைப் பெயராகவும், ஊர்வனவற்றின் இளமைப் பெயராகவும், குரங்கிற்குரிய இளமைப் பெயராகவும் வரும் என்கிறார் தொல்காப்பியர். இக்காலத்தில் வட்டார வழக்கில் 'பார்ப்பு' என பெண் குழந்தைகளை அழைக்கும் வழக்கமும் காணப்படுகிறது. அஃறிணைப் பொருளுக்குரிய இளமைப் பெயர் காலப்போக்கில் உயர்திணைக்கு வழங்கியுள்ளமை மரபு வளர்ச்சியினைக் குறிக்கிறது.

## பறழ்

"பறழெனப் படினும் உறழாண் டில்லை" (தொல். பொருள். 551)

"குட்டியும் பறழுங் கூற்றவண் வரையார்" (தொல். பொருள். 554)

"மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்

அவையும் அன்ன அப்பா லான" (தொல். பொருள். 558)

என்கிறார் தொல்காப்பியர்.

'பறழ்' என்னும் இளமைப் பெயரைக் குறிக்கும் சொல், மூங்கா, வெருகு, எலி, அணில் ஆகியவற்றிற்கும் நாய், பன்றி, புலி, முயல் ஆகியவற்றுக்கும் குரங்கிற்கும் அமையும்.

**கன்று**

"யானையும் குதிரையும் கழுதையும் கடமையும்
மானோ டைந்துங் கன்றெனற் குரிய" (தொல். பொருள். 559)
"எருமையும் மரையும் வரையார் ஆண்டே" (தொல். பொருள். 560)
"கவரியும் கராகமும் நிகரவற் றுள்ளே" (தொல். பொருள். 561)
"ஒட்டகம் அவற்றோ டொடுவழி நிலையும்" (தொல். பொருள். 562)
"பிள்ளை குழவி கன்றே போத்தெனக்
கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே" (தொல். பொருள். 568)
"நெல்லும் புல்லும் நேரார் ஆண்டே" (தொல். பொருள். 569)

என்ற நூற்பாக்களில் 'கன்று' எனும் இளமைப் பெயர் யானை, குதிரை, கழுதை, கடமை, மான் ஆகிய விலங்குகளுக்கும் எருமை, மரை ஆகியவற்றிற்கும் கவரி, கராம் (முதலை) ஆகியவற்றிற்கும் ஒட்டகத்திற்கும் நெல்லும், புல்லும் ஒழிந்த பிற ஓரறிவுயிர்களுக்கும் உரியது என்பர் தொல்காப்பியர்.

## 2. ஆண்பாற் பெயர்

மக்கள், விலங்கு, பறவையினம் ஆகியவற்றில் ஆண்பால் பெயர்களாகத் தொல்காப்பியர் சிலவற்றைக் குறிப்பிட்டிருக்கின்றார். அவை எருது, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதள், அப்பர், போத்து, கண்டி கடுவன் ஆகும்.

"எருதும் ஏற்றையும் ஒருத்தலும் களிறும்
சேவும் சேவலும் இரலையும் கலையும்
மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்

போத்தும் கண்டியும் கடுவனும் பிறவும்

யாத்த ஆண்பாற் பெயரென மொழிப" (தொல். பொருள். 546)

இவற்றுள் எவையெவை எந்தெந்த ஆண்பால் பெயர் பெறும் என்பதைத் தொடர்ந்து வரும் பதினாறு நூற்பாக்களில் தெளிவுபடுத்துகின்றார் தொல்காப்பியர்.

**களிறு**

'களிறு' என்பது யானையின் ஆண்பாற்கே சிறப்புரிமை உடையது ஆகும்.

"வேழக் குரித்தே விதந்துகளி றென்றல்" (தொல். பொருள். 579)

ஆனால் பன்றியும் களிறென்று கூறுவதற்குரியதென்பதை,

"கேழற் கண்ணும் கடிவரை வின்றே" (தொல். பொருள். 580)

என்கிறது தொல்காப்பியம்.

**ஒருத்தல்**

'ஒருத்தல்' எனும் ஆண்பால் பெயர், புல்வாய், புலி, உழை, மரை, கவரி, கராம், யானை, பன்றி, எருமை ஆகியவற்றிற்கு உரித்து என்று கூறுகின்றார் தொல்காப்பியர்.

"புல்வாய் புலிஉழை மரையே கவரி

சொல்லிய கராமோ டொருத்தல் ஒன்றும்" (தொல். பொருள். 581)

"வார்கோட் டியானையும் பன்றியும் அன்ன" (தொல். பொருள். 582)

"ஏற்புடைத் தென்ப எருமைக் கண்ணும்" (தொல். பொருள். 583)

**கலை**

புல்வாயும், உழையும் (மான்) முசுவும், ‘கலை’, ‘இரலை’ எனும் ஆண்பால் பெயர்களைப் பெறும் என்பர் தொல்காப்பியர்.

“இரலையும் கலையும் புல்வாய்க் குரிய” (தொல். பொருள். 590)

“கலையென் காட்சி உழைக்கும் உரித்தே
நிலையிற் றப்பெயர் முசுவின் கண்ணும்” (தொல். பொருள். 591)

**ஏறு**

‘ஏறு’ எனும் ஆண்பால் பெயர் பன்றி, புல்வாய், உழை, கவரி, எருமை, மரை, பெற்றம் (பசு) சுறா ஆகியவற்றுக்குரியன என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.

“பன்றி புல்வாய் உழையே கவரி
என்றிவை நான்கும் ஏறெனக் குரிய” (தொல். பொருள். 584)

“எருமையும் மரையும் பெற்றமும் அன்ன” (தொல். பொருள். 585)

“கடல்வாழ் சுறவும் ஏறெனப் படுமே” (தொல். பொருள். 586)

**கடுவன்**

“குரங்கினுள் ஏற்றைக் கடுவன் என்றலும்

———————————

முடிய வந்த வழக்கின் உண்மையிற்
கடிய லாகா கடனறிந் தோர்க்கே” (தொல். பொருள். 613)

என்பதில் ‘கடுவன்’ எனும் சொல் ஆண் குரங்கைக் குறிக்கும் ஆண்பால் பெயரெனத் தொல்காப்பியர் கூறுகிறார்.

### போத்து

"பெற்றம் எருமை புலிமரை புல்வாய்
மற்றிவை எல்லாம் போத்தெனப் படுமே" (தொல். பொருள். 587)
"நீர்வாழ் சாதியும் அதுபெறற் குரிய" (தொல். பொருள். 588)
"மயிலு மெழாஅலும் பயிலத் தோன்றும்" (தொல். பொருள். 589)

பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய், முதலை, மயில் ஆகியவற்றின் ஆண்பால் பெயர் போத்து என அழைக்கப் பெறும் என்கிறார் தொல்காப்பியர்.

### வேழம்

'வேழம்' எனும் சொல் ஆண் யானையைக் குறிக்கும் சொல்லாகும்.

"வேழக் குறித்தே விதந்துகளி றென்றல்" (தொல். பொருள். 579)

என வேழத்திற்கு 'களிறு' என்று விதந்து கூறுதல் உரித்து என்கிறார் தொல்காப்பியர்.

## 3. பெண்பாற் பெயர்

பேடை, பெட்டை, பெடை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி என்னும் பதின்மூன்றும் பெண்பாற் பெயர்களாகும் என்று தொல்காப்பியர் கூறுகிறார்.

"பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்
மூடும் நாகுங் கடமையும் அளகும்
மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்
அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே" (தொல். பொருள். 547)

**மந்தி**

குரங்கு, முசு, ஊகம் என்னும் மூன்றினத்தின் பெண்பால் பெயரும் 'மந்தி' என்பதாகும்.

"குரங்கு முசுவும் ஊகமும் மந்தி" (தொல். பொருள். 612)

எனத் தொல்காப்பியர் விதி வகுத்திருக்கின்றார்.

**பிடி**

'பிடி' என்பது யானையினத்தின் பெண்பால் பெயராகும்.

"பிடியென் பெண் பெயர் யானை மேற்றே" (தொல். பொருள். 596)

எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

**பெடை**

ஒட்டகம், குதிரை, கழுதை, மரை, பறவையினம் ஆகியவற்றின் பெண்பால் பெயர்கள் பெடை, பேடை, பெட்டை என்னும் மூன்றுமாகும்.

"ஒட்டகம் குதிரை கழுதை மரையிவை
பெட்டை யென்னும் பெயர்க்கொடைக் குரிய" (தொல். பொருள். 597)
"புள்ளும் உரிய அப்பெயர்க் கென்ப" (தொல். பொருள். 598)
"பேடையும் பெடையும் நாடின் ஒன்றும்" (தொல். பொருள். 599)

**பிணவு**

பன்றி, புல்வாய், நாய் ஆகிய மூன்றினுக்கும் பெண்பால் பெயர் 'பிணவு' என்பதாகும்.

"பன்றி புல்வாய் நாயென மூன்றும்
ஒன்றிய என்ப பிணவென் பெயர்க்கொடை" (தொல். பொருள். 603)
"பெண்ணும் பிணவு மக்கட் குரிய" (தொல். பொருள். 606)

பெண், பிணவு என்பவை மக்கட்குரிய பெண்பால் பெயர்களாக வரும் என்கின்றார் தொல்காப்பியர். 'பெண்' என்பது உலக வழக்கில் பெரிதும் பயின்று வரும் சொல்லாகும்.

**பிணை**

புல்வாய், நவ்வி, உழை, கவரி என்னும் நான்கு இனத்தின் பெண்பாற் பெயர் 'பிணை' என்பதாகும்.

"புல்வாய் நவ்வி உழையே கவரி
சொல்வாய் நாடிற் பிணையெனப் படுமே" (தொல். பொருள். 602)

'மரபியல்' என்னும் இயலில் தொல்காப்பியர் தமிழர்களின் பயன்பாட்டில் மாறாத மரபுச் சொற்களைப் பதிவு செய்திருக்கிறார் என்பதை அறிய முடிகின்றது.

## 2.3.2.3.6. மரபியல் உணர்த்தும் கள ஆய்வுக் கோட்பாடு

நாட்டுப்புறவியல் என்ற துறை தொல்காப்பியரின் மரபியலோடு தொடர்புடையதாக அமைந்துள்ளது. தமிழர்கள் வாழும் பகுதியாக குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகிய நிலப்பகுதிகளைத் தகவல் சேகரிக்கும் களங்களாகத் தேர்வு செய்து, தன் முயற்சியைத் தொடங்கியிருக்கிறார் என்பதனை மரபியலில் கூறப்பட்ட வேறுபட்ட நிலங்களுக்குரிய விலங்குகள், பறவைகள் பற்றிய செய்திகளிலிருந்து உணரலாம்.

தொல்காப்பியர் தரும் செய்தியில் ஆண்பால் பெயர்கள், பெண் பால் பெயர்கள், இளமைப் பெயர்கள் ஆகியனவே சிறப்பான இடத்தைப் பெறுகின்றன. சேகரிக்கின்ற பொழுது அந்நிலத்திற்குரிய அல்லது அந்நிலப் பகுதிகளில் வாழுகின்ற விலங்குகள் பற்றிய தகவல்களையும் பறவைகள் பற்றிய தகவல்களையும், சேகரிப்பதோடு அவற்றின் பல்வேறு நிலைகளில் வழங்கக் கூடிய ஆண்பாற் பெயர்கள், பெண்பாற் பெயர்கள், இளமைப் பெயர்கள் என்று பரந்துபட்ட தகவல்களையும் சேமித்துப் பதிவு செய்த பெருமைக்குரியவர் தொல்காப்பியர். மேலும் இதே போன்று தான் தேர்ந்தெடுத்துக் கொண்ட ஒவ்வொரு களத்திற்கும் சென்று செய்திகளைச் சேகரித்து நமக்குத் தந்துள்ளார். இதனை மரபியலில் உள்ள ஒவ்வொரு நூற்பாவும் உணர்த்துகின்றது.

இவற்றைச் சேகரிக்கின்ற பொழுது தொல்காப்பியர் இரண்டு விதமான சேகரிப்பு முறைகளைப் பயன்படுத்தித் தகவல்களைத் தந்துள்ளார். ஏதேனும் நிகழ்ச்சி நடைபெறுகின்ற போது தான் பார்வையாளராக இருந்து தனக்குத் தேவையான செய்திகள் எவையேனும் கிடைக்கின்றனவா என்று கவனித்துத் தேவையான செய்திகள் கிடைப்பின் அவற்றைச் சேகரிப்பது ஒரு முறையாகும். இம்முறையினையே தொல்காப்பியர் பயன்படுத்தியிருக்கிறார் என்பதனை,

> “பன்றி புல்வாய் உழையே கவரி
> என்று இவை நான்கும் ஏறு எனற்கு உரிய” (தொல். பொருள். 584)

"எருமையும் மரையும் பெற்றமும் அன்ன" (தொல். பொருள். 585)

இரண்டு நூற்பாக்களின் மூலம் உணரலாம்.

தான் சேகரிக்க நினைத்த தகவல் தொடர்பான வினாக்களைத் தகவலாளியிடமே கேட்டு விடைதெரிந்து கொள்ளுதல் ஒரு முறையாகும்.

"கோடு வாழ் குரங்கு குட்டியுங் கூறுப" (தொல். பொருள். 557)

"ஆவும் எருமையும் அதுசொலப் படுமே" (தொல். பொருள். 564)

"புள்ளும் உரிய அப்பெயர்க்கு என்ப" (தொல். பொருள். 598)

"நாயே பன்றி புலிமுயல் நான்கும்
ஆயுங் காலைக் குருளை என்ப" (தொல். பொருள். 552)

என்னும் நூற்பாக்களை நோக்கும் போது என்ப, சொல்லப்படுமே என்னும் சொற்கள் என்று கூறுவார்கள், என்று சொல்லுவார்கள், மக்கள் சொல்லுவார்கள் என்ற பொருண்மையில் அமைந்துள்ளன. கூறுவார்கள், சொல்லுவார்கள் என்ற பொருண்மையுடையவை என்பதனால் தகவலாளியிடம் வினாக்களை எழுப்பி அவற்றின் மூலம் தகவல் சேகரிக்கப்பட்டுள்ளது என்பதை உணர முடிகிறது.

தகவல் சேகரித்த பின்னர் அவற்றை முறையாக வகைப்படுத்தி தகவல்களைப் பதிவு செய்தார். எந்தெந்த உயிர்களுக்கு ஆண்பால், பெண்பால், இளமைப் பெயர்கள் வழங்கப்பட வேண்டும் என்பதனையும் முறையாக வகைப்படுத்தியிருக்கிறார்.

"அவற்றுள்
பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் று இளமை" (தொல். பொருள். 548)

"மூங்கா வெருகு எலி மூவரி அணிலொடு

ஆங்கவை நான்கும் குட்டிக்குரிய" (தொல். பொருள். 550)

என்று கூறி ஆண்பால், பெண்பால், இளமைப் பெயர்கள் எந்தெந்த உயிரினங்களுக்கு வழங்கிட வேண்டும் என்பதனை வரிசையாக வகைப்படுத்தியிருக்கிறார். இவ்வாறு வகைப்படுத்தும் போது ஒரு சொல் பல்வேறு உயிரினங்களுக்கும் பல சொற்கள் ஒரு உயிரினத்திற்கும் வருவதனைத் தெளிவாக உணர முடிகிறது.

இவ்வாறாக மக்கள் பயன்பாட்டில் வழிவழியாக வழங்கப்படுகின்ற ஆண்பாற் பெயர்கள், பெண்பாற் பெயர்கள் ஆகியவற்றைத் தொகுக்க இன்றைய நாட்டுப்புற ஆய்வாளர்கள் பயன்படுத்தும் இடம் தேர்வு செய்தல், சேகரித்தல், வகைப்படுத்தல் என்ற கள ஆய்வுக் கோட்பாடுகளை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் தொல்காப்பியர் கையாண்டிருக்கிறார் என்பதோடு மட்டுமல்லாமல் இன்றைய நாட்டுப்புற கள ஆய்விற்கு விதையூன்றியப் பெருமைக்குரியவர் என்பதும் தெளிவாகின்றது. நாட்டுப்புற இயல் என்ற துறையின் முக்கிய அங்கமாகக் கள ஆய்வுக் கோட்பாடுகளை மரபியல் என்னும் இயல் வழியாகத் தந்துள்ளார் என்பதையும் உணர முடிகிறது.

இங்ஙனமாக மரபு பற்றி விளக்கமாகத் தொல்காப்பியர் குறிப்பிடுவதற்கு முதன்மை நோக்கம் இலக்கிய ஆக்கமே. இலக்கிய ஆக்கத்தில் பயன்படும் சொற்கள் மரபுநிலை திரிதல் கூடாது எனும் நோக்கில் மரபு சார்ந்த செய்திகள் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

### 2.3.3. இலக்கிய உத்தி

தொல்காப்பியர் பொருளதிகாரத்தில் இலக்கியம் படைக்கும் உத்தி முறைகளை விதந்தோதியுள்ளார். தொல்காப்பியரின் இலக்கியக் கோட்பாட்டில் உத்தி பெறும் இடம் மிக நுட்பமானதும் முக்கியமானதுமாகும். தொல்காப்பியரின் இலக்கிய உத்திகளாக,

1. உவமை
2. உள்ளுறை
3. இறைச்சி
4. மெய்ப்பாடுகள்
5. பொருள்கோள்

ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

#### 2.3.3.1. உவமை

ஒரு பொருளை விளக்குவதற்கு அதனோடு ஒத்த தன்மையுடைய பொருளை எடுத்துக்காட்டிக் கூறுவது உவமை எனப்படும். உவமைக்கும் உவமிக்கப்படும் பொருளுக்கும் முழுமையான ஒப்புமை இருக்க வேண்டியதில்லை. செயல், பயன், வடிவம், நிறம் இவற்றுள் ஏதேனும் ஒரு கூறு ஒப்புமையாக அமைந்தாலே ஏற்றுக் கொள்ளப்படும்.

##### 2.3.3.1.1. உவமம்—விளக்கம்

இளம்பூரணர் ‘உவமை என்பது இருபொருளுக்கும் உள்ள ஓர்புடை ஒப்புமை பற்றி வருவது. இதனால் யாதெனின் புலன் அல்லாதன புலனாதலும், செய்யுளுக்கு அலங்காரமாகிக் கேட்டார்க்கு இன்பம் பயத்தலும்’ என்று உவமையின் பயன் பற்றி குறிப்பிடுகின்றார்.

"வினை பயன் மெய் உரு என்ற நான்கே

வகைபெற வந்த உவமைத் தோற்றம்" (தொல். பொருள். 272)

உவமை தொழிலும், பயன் வடிவமும் நிறமும் என்ற நான்கின் அடிப்படையில் பிறக்கும்.

புலி போலப் பாய்ந்தான் (வினை அடிப்படையில் வந்தது)

மழை போலக் கொடுக்கும் கை (பயன் அடிப்படையில் வந்தது)

துடி போலும் இடை (வடிவம் அடிப்படையில் வந்தது)

தளிர் போலும் மேனி (நிறம் அடிப்படையில் வந்தது)

மேலும் இளம்பூரணர் ஐம்புலன்களாலும் மனத்தாலும் அறிந்து உவமை கூறப்படும் என்பதைத் தெளிவாகக் கூறுகிறார்.

பவளம் போல் சிவந்த வாய் (கண்ணால் அறியப்பட்டது)

குயில் போன்ற மொழி (செவியால் அறியப்பட்டது)

வேம்பு போலக் கைக்கும் (நாவினால் அறியப்பட்டது)

தீப்போலச் சுடும் (மெய் தீண்டுதலால் அறியப்பட்டது)

ஆம்பல் போல் மணக்கும் துவர்வாய் (மூக்கினால் அறியப்பட்டது)

"தம்மில் இருந்து தமதுபாத்து உண்டற்றால்

அம்மா அரிவை முயக்கு" (குறள். 1107)

அரிவையைத் தழுவிக் கொள்ளும் போது பெறும் இன்பம், தமது சொந்த வீட்டிலிருந்து தாமே உழைத்து தேடிய பொருளைக் கொண்டு பகுத்துண்ணும் போது பெறும் இன்பம் போன்றது. இது மனத்தாலறியப்பட்ட உவமை ஆகும்.

இவ்வுவமைகள் ஒரு காரணம் கருதி மட்டுமல்லாமல் ஒன்றிற்கு மேற்பட்ட காரணங்கள் கருதியும் அமைதல் கூடும். எப்பொழுதும் எதைப் பற்றி உவமை கூறுகிறோமோ அதன் பண்பில் உயர்ந்ததையே உவமை கூற வேண்டும். 'நாய் போலும் நன்றியறிதல்' என்பதில் நாயின் நன்றியறிதலின் சிறந்த பண்பை எடுத்துக் கொள்ள வேண்டும். இது குற்றமாகாது. ஒன்றிற்கு உவமை கூறும் பொழுது அதன் அழகையோ, பண்பையோ, காதலையோ, வலிமையையோ அல்லது இழிவையோ வெளிப்படுத்த உவமை கூறப்படும்.

உவமையின் பொருளை அதன் மரபு வழியோடு ஒட்டி பொருள் காண வேண்டும். உவமையும் பொருளும் தம்முள் சமமாக இருக்க வேண்டும். உவமையின் அமைப்பு, பொருள் உத்திகளை மிக நுட்பமாகத் தொல்காப்பியர் விளக்குகிறார்.

### 2.3.3.1.2. உவமவியல்—அமைப்பும் கருத்தும்

தொல்காப்பிய உவமவியல் 37 நூற்பாக்களைக் கொண்டது. இவ் இயல் ஐந்து பகுதியாகப் பிரித்து அறியத்தக்கது. முதல் பகுதியாகப் பத்து நூற்பாக்களில் 'உவமையின் இயல்பு' எடுத்துக் கூறப்படுகிறது. இரண்டாம் பகுதியாக வரும் அடுத்த ஏழு நூற்பாக்கள் உவம உருபுகள் பற்றியது. தொல்காப்பியர் முப்பத்தாறும் அதற்கு மேற்பட்டனவுமான உவம உருபுகளைத் தொகுத்துக் கூறுகிறார்.

மூன்றாம் பகுதியில் உவமையை எங்ஙனம் புரிந்து கொள்வது என்பது பற்றி ஐந்து நூற்பாக்களில் விளக்குகிறார்.

உள்ளுறை பற்றியும் அதன் வகை பற்றியும் நான்காம் பகுதியில் ஒன்பது நூற்பாக்களில் எடுத்துரைக்கிறார்.

உவமையில் சிறிது வேறுபட வருவனவும், அடுக்கி வருவனவும் பற்றிய விதிகளை இறுதியில் ஆறு நூற்பாக்களில் விளக்குகிறார்.

தொல்காப்பியர் உவமையை அணி எனக் கொள்ளாது பொருளுறுப்பாகவே கொள்கிறார். பிற்காலத்தில் அணி இலக்கணக் கோட்பாடு வளர்ச்சியடைந்துள்ளதை தண்டியலங்காரத்தின் மூலம் அறியலாம். அணி இலக்கண வளர்ச்சிக்குத் தொல்காப்பியரின் ‘உவமவியல்’ பகுதி பெரும்பங்கு வகிக்கிறது என்பது திண்ணம்.

### 2.3.3.1.3. உள்ளுறை, இறைச்சி

அகப்பாடலுக்கு உரிய உத்தியாக சிறப்பாகக் கூறப்படும் உள்ளுறையும் இறைச்சியும் குறிப்புப் பொருளாகவும் தொனிப் பொருளாகவும் இலக்கியங்களில் இடம் பெறுகின்றன. ஒருவன் தான் நினைத்ததை நினைத்த வண்ணம் கூறுவது வெளிப்படை. அதை விடுத்து, தான் சொல்வது மற்றவர்களுக்குத் தெரியக்கூடாது. யாருக்காகச் சொல்லப்படுகிறதோ அவர்களால் மாத்திரமே உணரப்பட வேண்டும் என்ற பொருளில் உரைப்பது குறிப்பு. இவ்வாறு குறிப்பாய்ப் பேசுவதனைத் தொல்காப்பியர் இரு தலைப்புகளில் அடக்குகின்றார்.

1. உள்ளுறை
2. இறைச்சி

இவ்விரண்டுமே புலவர்களால் கையாளப்படுவது. பாடல்களில் இயற்கை வருணனைகளில் இவ்விரண்டும் அமைந்திருக்கக் காணலாம்.

## 2.3.3.2. உள்ளுறை

தொல்காப்பியர் 'உள்ளுறை' என ஒரு பொருளை எடுத்தோதுகின்றார். அதன் உட்பிரிவுகளுள் ஒன்றே உள்ளுறை உவமை ஆகும். உள்+உறை=உள்ளே உறைவது. பாடலினுள்ளே அதன் உட்பொருளாய்ப் பொருந்தி இருப்பது.

### 2.3.3.2.1. உள்ளுறை வகை

"உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்
கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே" (தொல். பொருள். 238)

உடனுறையும் உவமமும் சுட்டும் நகையும் சிறப்புமெனக் கெடுதல் இல்லாத மரபினை உடைய உள்ளுறை ஐந்து வகைப்படும். உள்ளுறையாவது பிறிதொரு பொருள் புலப்படுமாறு நிற்பதாகும். அது கருப்பொருள் பற்றி வரும்.

### 1. உடனுறையுள்ளுறை

பொதுவாக உடனுறைவது ஒன்றைச் சொல்லி, பிறிதொரு பொருளை உய்த்துணர வைப்பது.

### 2. உவம உள்ளுறை (அ) உள்ளுறை உவமம்

உவமையைக் கூறி, அதனால் உய்த்துணரப்படும் பொருளை குறிப்பால் அறிய வைப்பது.

### 3. சுட்டு உள்ளுறை

சுட்டு என்பது ஒரு பொருளைச் சுட்ட பிறிதோர் பொருள் படுதல். மழையையோ, அருவியையோ இவை போல ஏதேனும் ஒன்றைச் சுட்டிச் சொல்லி அது தலைவனுக்குப் பொருந்துமாறு அமையும் குறிப்பு இது.

### 4. நகையுள்ளுறை

நகையாடலில் பேசி, அங்கதம் தோன்ற வகை மொழியாம் பழிப்பை நாகரிகமாகக் கூறுவது.

### 5. சிறப்புள்ளுறை

சினம், பேதைமை, பொறாமை, வறுமை இவற்றின் மிகுதியடிப்படையில் கூறப்படுவது குறிப்புப் பொருள்.

### 2.3.3.2.2. உள்ளுறை வைத்துக் கூறுதலின் சிறப்பும் பயனும்

உள்ளுறை மூலம் குறிப்புப் பொருளை வெளிப்படுத்துவதால் அது தீமை பயவாதது மட்டுமன்றி, கேட்போர்க்கு அது முடிவற்ற இன்பமும் மகிழ்ச்சியும் தரும்.

மங்கலமல்லாததை மங்கலமாகக் கூறும் மங்கலமொழி, வசை மொழி, தலைவனின் குற்றமற்ற ஆண்மையில் தோன்றிய

குறைபாடுகளைக் கடிந்துணர்வன, இவை யாவும் உள்ளுறை உவமையில் அடங்குவன.

இவ்வுள்ளுறைகள் வருந்துவதற்கில்லை. திருந்துவதற்கே ஆகும்.

### 2.3.3.2.3. உள்ளுறை உவமை இலக்கணம்

பொது உவமம், உள்ளுறை உவமம் என உவமை இருவகைப்படும். இவை இரண்டும் அகப்பாடல்களில் வரும். உள்ளுறை தெய்வம் ஒழிந்த கருப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டு வரும். பொது உவமத்தில் தெய்வமும் உவமையாகும். உள்ளுறை அகப்பாடலுக்கு மட்டுமே உரியது. பொது உவமை அகம், புறம் இரண்டிற்கும் பொதுவாகும்.

பொது உவமம் தானே வெளிப்படையாகப் பொருளுணர்த்தும். மதி போலும் முகம் என்றால் இதில் குறிப்பால் அறிய வேண்டியது என எதுவுமில்லை. உள்ளுறை உவமை என்பது குறிப்பால் அறிய வேண்டிய உட்பொருளை உடையது. வெளிப்படையாகச் சொல்லப்படுவது ஒன்று. அதனோடு ஒத்த பொருளை குறிப்பால் அறிவது ஒன்று. வெளிப்படச் சொன்னதற்கும் உள்ளுறுத்தற்கும் முற்றிலும் பொருந்தி வருமாறு முடிவதே உள்ளுறை உவமமாகும்.

(எ.கா)

“நெற்கொள் நெடுவெதிர்க் கணந்த யானை
முத்தார் மருப்பின் இறங்குகை கடுப்பத்
துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல்” (குறி.பா.வ35–37)

யானை மூங்கிலின் முளைகளை உணவாகக் கொள்ளும். நெல்லைத் தன்னிடத்தே கொண்டுள்ள நெடிதாக வளர்ந்துள்ள மூங்கிலைத் தின்னுதற்கு மேனோக்கி நின்ற களிறு வருத்தம் தீர்தல் பொருட்டு முத்துக்கள் நிறைந்த கொம்பினிடத்தே வளைந்த துதிக்கையை இறக்கிப் போடும் என்று தோழி கூறுகிறாள்.

மலையிடத்தே தங்கி வளர்ந்த மூங்கில் தலைவியின் உயரிய குடியாகவும், மூங்கில் ஈன்ற நெல் தலைவியாகவும், பசி கொண்ட யானை, வேட்கை மிக்க தலைவனாகவும், அவ்யானை மூங்கில் நெல்லிற்கு அணைந்து நின்று முயலுதல், தலைவியை அடையத் தலைவன் இரவுக்குறிக்கண் வந்து முயலுவதாகவும், அதன் கைக்கு அகப்படாத உயரத்தே அந்நெல் இருத்தல், தலைவி இற்செறிக்கப்பட்டிருத்தலாகவும், யானை தன் துதிக்கையைத் தன் கொம்பினிடத்தே இறக்கிப் போடுதல், தலைவியைக் காணப் பெறாது மீள்தலாகவும், முத்துக்கள் நிறைந்த கொம்பு தலைவனுடைய நற்குணங்கள் நிறைந்த உறுதிப்பாடாகவும், அதன் கண் கையின் சோர்வினை அகற்றிக் கோடல், தன் அறிவானே தன் வருத்தத்தைத் தலைவன் ஆற்றிக் கொள்வதாகவும் உட்பொருள் அமைந்துள்ளது. இதில் தோழி உள்ளுறுத்துச் சொல்ல நினைத்த கருத்து வெளிப்படச் சொன்ன உவமையுடன் ஒத்துப்போய், ஒன்றற்கொன்று பொருந்தியிருப்பதே உள்ளுறை உவமையின் சிறப்பாகும்.

### 2.3.3.2.4. உள்ளுறை உவம வகை

உள்ளுறை, உவமை போல வரும் போது, 'உவமப்போலி' என்றும் கூறப்படும். வினை, பயன், உறுப்பு, உரு, பிறப்பு என உள்ளுறை உவமை ஐந்து வகைப்படும்.

### 2.3.3.2.5. உள்ளுறையும், ஒட்டணியும்

சொல்ல வந்ததை மறைத்து, அதனைப் புலப்படுத்த, அதனோடொத்த பிறிதொன்றை உரைப்பது ஒட்டணியாகும். (தண்டியலங்காரம் அணி எண்–10) இது உள்ளுறையை அடிப்படையாகக் கொண்ட அணியேயாகும்.

### 2.3.3.2.6. உள்ளுறையும் படிமமும்

புலவர்கள் பல்வேறு உத்திகளில் உருக்காட்சிகளைப் புலப்படுத்துகின்றனர். அவைகளில் ஒன்று படிமம் ஆகும். ஆங்கிலத்தில் 'symbol' எனும் சொல் படிமத்தைக் குறிக்கும். சங்க இலக்கியத்துள் பல சொற்கள் படிமங்களாக உள்ளன. படிமச் சொற்கள் கருத்துக்களை ஏற்றும், மறைத்தும், புலப்படுத்தியும் வருகின்றன.

சங்க இலக்கியத்துள் முல்லை என்பது ஒரு படிமம். முதலில் இச்சொல் முல்லை என்ற மலரைக் குறித்தது. பின்னர் அம்மலர் மலரும் நிலத்தைச் சுட்டியது. இலக்கிய மரபில் முல்லை 'இருத்தல்' எனும் ஒழுக்கத்தை உணர்த்தியது. அதுவே கற்பு எனும் திண்மையை உணர்த்துவதாயிற்று. முல்லை மலரது வெண்மையும், தூய்மையும், மணம் பரப்பி வாழும் தன்மையும் கற்பின் சிறப்பினை உணர்த்த ஏதுவாயின.

சங்க இலக்கியத்தில் திணைகள் தவிர கவிதைகளின் நோக்கிலேயும் போக்கிலேயும் ஏராளமாகப் படிமங்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன.

இப்படிமங்கள் உள்ளுறையாய் உறையும் நலம் பெற்றவை. திணை உணர்த்தும் கருப்பொருள்கள் புலவர் நாவால் உருக்கொண்டு, வடிவம் எடுத்துப் படிமம் சுட்டிக் குறிப்புப் பொருளாய் விளங்கும்.

கரு + வடிவம் = படிமம் > உள்ளுறை

இத்தகைய படிமத்தை பாடல்களில் வரும் உள்ளுறையோடு குறியிட்டு அறியலாம்.

## 2.3.3.2.7. உள்ளுறையும் வடமொழித் தொனிக் கோட்பாடும்

வாக்கிய முடிவில் அதில் வரும் பொருளையே துணையாகக் கொண்டு தோன்றும் பிறிதொரு பொருளே தொனியாகும். மறைவான தொனிப் பொருளை உணர்த்தவே முதலில் வெளிப்படக் கூறப்படும் வாக்கியப் பொருள் பயன்படுகின்றது. அஃதின்றி, இது இல்லையாயினும் 'தொனிப் பொருளே' சொல்ல வந்த செய்தியாகும். 'தொனி'– போன்றதே உள்ளுறை

## 2.3.3.2.8. உள்ளுறை–இலக்கண விளக்கம்

குறிப்புப் பொருளாய்ச் செய்யுளுள் இடம் பெறுவன இறைச்சியும் உள்ளுறையுமாகும்.

இடைக்காலத்தில் தொனிப் பொருளின் செல்வாக்கால் அத்தொனிக்குரிய விளக்கங்களை இறைச்சி மேலேற்றிக் குழப்பி விட்டனர். இறைச்சி என்பது ஒன்றில் தங்கியிருப்பதாகிய ஒரு பொருள். உள்ளுறை உள்ளே மறைந்து உறைவது ஆகிய ஒரு பொருள். நம் உரையாசிரியர்களே, கால இடையீட்டால் இவை இரண்டையும் ஒன்றற்குரிய உதாரணத்தை மற்றொன்றுக்குக் காட்டியும் விளக்கங்களை மாற்றிக் கூறியும் இடர்ப்படுகின்றனர் தொல்காப்பியர் தெளிவான கோட்பாடுகளை எடுத்துக்காட்டுகிறார்.

## தொல்காப்பியம் மூலம் தரும் விளக்கம்

தொல்காப்பியர் அகத்திணையியலில் உள்ளுறையைப் பற்றிக் கூறுவன.

"உள்ளுறை உவமம் ஏனை உவமமெனத்
தள்ளா தாகும் திணையுணர் வகையே'' (தொல். பொருள். 49)

உள்ளுறைக்கண் வரும் உவமமும், ஒழிந்த உவமமும் என இருவகையுலும் திணையுணர்த்தும் வகை தவறாது வரும்.

"உள்ளுறை தெய்வம் ஒழிந்ததை நிலமெனக்
கொள்ளும் என்ப குறியறிந் தோரே'' (தொல். பொருள். 50)

உள்ளுறையாவது கருப்பொருள்களுள் தெய்வம் தவிர பிறப் பொருள்களை இடமாகக் கொண்டு வரும் என இலக்கணம் அறிந்தோர் கூறுவர்.

"உள்ளுறுத் திதனோ டொத்துப் பொருள்முடிகென

உள்ளுறுத் துரைப்பதே உள்ளுறை உவமம்'' (தொல். பொருள். 51)

வெளிப்படக் கூறும் பொருளோடு உள்ளுறுத்துக் கூறும் பொருளும் ஒத்து முடியுமாறு உள்ளத்தில் ஊன்றி உணர வைப்பது உள்ளுறை உவமமாகும்.

"ஏனை உவமம் தான் உணர் வகைத்தே'' (தொல். பொருள். 52)

இருவகை உவமைகள் உள்ளன. ஒன்று உள்ளுறை உவமம். மற்றது பொது உவமம். அகத்திணைக்கே சிறப்புடைய உள்ளுறை உவமையை முதலில் கூறி மற்றதை ஏனை உவமம் எனக் கூறுகிறார். பொது உவமம் இருக்கும் சொல் தொடரால் தானே உணரும் இயல்புடையது. அகம், புறம் இரண்டிற்கும் உரியது. பவளவாய்–பவளம் போன்ற வாய் எனத் தன் பொருள் உணர்த்தி நிற்கின்றது. தொல்காப்பியர் பொருளியலில் உள்ளுறையைப் பற்றிக் கூறுவன.

"வாயிற் கிளவி வெளிப்படக் கிளத்தல்

தாவின்று உரிய தத்தம் கூற்றே'' (தொல். பொருள். 237)

வாயில்கள் உள்ளுறைக் கூறுதல் கூடாது. தத்தம் கூறு பாட்டினான் வாயில்கள் கூறும் கிளவி வெளிப்படக் கிளத்தல் வேண்டும்.

"உடனுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்

கெடலரும் மரபின் உள்ளுறை ஐந்தே'' (தொல். பொருள். 238)

உள்ளுறை உடனுறை உள்ளுறை, உவம உள்ளுறை, சுட்டு உள்ளுறை, நகை உள்ளுறை, சிறப்பு உள்ளுறை என ஐந்து வகைப்படும்.

"அந்தமில் சிறப்பின் ஆக்கிய இன்பம்

தன்வயின் வருதலும் வகுத்த பண்பே'' (தொல். பொருள். 239)

தலைவன் தன்னை உள்ளுறைகளால் தலைவியும் தோழியும் பிறரும் பலவாறு இழித்தும் பழித்தும் கூறினும் அவை தன்பால் உள்ள அன்பும் இன்பமும் பற்றியனவே என ஏற்றுக் கொள்வான்.

"மங்கல மொழியும் அவையல் மொழியும்

மாறில் ஆண்மையின் சொல்லிய மொழியும்

கூறிய மருங்கின் கொள்ளும் என்ப'' (தொல். பொருள். 240)

மங்கலமல்லாததை மறைத்துத் தலைவனுக்குத் தீங்கு வருமென்று அஞ்சி வாழ்த்திக் கூறுவர் என்றும் அவையில் மொழியை இடக்கரடக்கிக் கூறுவர். அல்லது தலைவன் தம்மை வஞ்சித்தானாகத் திட்டிக் கூறுவர் என்றும் மாறுபாடற்ற ஆண்மையிடத்தே பழிபடக் கூறுவர் என்றும் இவையெல்லாம் ஏற்றுக் கொள்ள வேண்டியவை என்றும் கூறப்பட்டுள்ளது.

## 2.3.3.2.9. உள்ளுறை உவமையின் தன்மை

1. புலவன் தான் கருதிய பொருளை இதனொடு ஒத்து முடிக என பாட்டினுள்ளுறுத்துக் கூறுவது. உவமையும் பொருளும் உய்த்துணர்ந்து கொள்ளப்படுவது.

2. உவமை வெளிப்பட புலப்பட்டு நிற்கும். அதனால் உணர்த்தப்படும் உவமேயப் பொருள் புலப்படாமல் மறைந்து இருக்கும்.

3. புலவன் தான் சொல்லுகின்ற உவமத்தோடு ஒத்துக் கூறக் கருதிய பொருள் வந்து முடியுமாறு அமைந்திருப்பது உள்ளுறை உவமம். படைப்போன் முன்பே திட்டமிட்டுக் கொண்டு படைப்பது இது.

4. புலவன் தான் கருதியதைக் கூறாத வழியும், படிப்போன் உணர்ந்து கொள்ளும் வகையில் சொல், தொடர், அடைமொழி அமைதல் வேண்டும்.

5. கருப்பொருளால் மாந்தரின் உரிப்பொருளைச் சிறப்பிப்பது.

6. உள்ளுறையின் நோக்கம் தலைவனின் தீய ஒழுக்கம், கூடா ஒழுக்கம் இவற்றைத் தவிர்ப்பது என்பதாகும்.

7. உள்ளுறை தலைவி அல்லது தோழியின் கூற்றிலும் செவிலி கூற்றிலும் அமையலாம்.

8. இயற்கைக் காட்சிகள் உள்ளுறையாகப் பயன்படும். அதில் அமைக்கப் பெறும் கருப்பொருட்கள் தலைவனின் நிலம் சார்ந்ததாகக் கூறப்பட்டிருக்கும்.

9. ஒரு பாடல் பல உள்ளுறைகளைக் கொண்டு அமையலாம். ஆனால் அனைத்து உள்ளுறையின் கருத்துகளும் ஒரே ஒரு உட்கருத்தை நோக்கித்தான் பயன்படுத்தப் பெறும்.

10. உள்ளுறையில் தலைவன் திருமணம் செய்து கொள்ளுமாறு தூண்டப் பெறுவான். இல்லையெனில் பரத்தையரது தொடர்பினை நீக்க வேண்டும் என அறிவுறுத்தப் பெறுவான்.

11. உள்ளுறை தலைவனுக்காகவே, தலைவன் காது படவே உரைக்கப் பெறும்.

12. அகப்பாடல் மரபில் பயிற்சியுடையவராலேயே உள்ளுறை உவமைப் பொருளை தெளிவாக உணர முடியும்.

13. உள்ளுறை எனும் தன்மை குறிஞ்சி, நெய்தல் மற்றும் மருதநில பாடல்களுக்குச் சரியாகப் பொருந்தும். ஏனென்றால் பெரும்பாலும் இதில் தான் புலவன் தான் கருதிய பொருளை மறைமுகமாய் கருப்பொருள்களுக்குள்ளே புதைத்து வைக்கிறான்.

14. உள்ளுறை பெரும்பாலும் தலைவனது நடத்தை பற்றியே நகர்ந்து கொண்டிருக்கும். அவனது செய்கை அந்த நிலத்துக் கருப்பொருள்களை ஒத்தோ அல்லது அவனே அக்கருப்பொருள்களின் தன்மையைக் காட்டிலும் சற்றுத் தாழ்ந்தவனாகவோ இருக்கலாம். அவனது இச்செய்கை தலைவிக்கும் அவள் குடியிருக்கும் ஊருக்கும், பெற்றோருக்கும் துன்பம் தரலாம். இது ஒரு முக்கியமான தன்மையாக அமையும்.

15. உள்ளுறை என்பது தலைவனை இடித்துரைப்பது. ஆகையால் இத்தன்மை தோழி, செவிலி அல்லது தலைவியின் கூற்றில்

காணப்படுவதே சிறந்ததாகும். உள்ளுறையில் பயன்படுத்தக்கூடிய பொருள்களைப் பார்த்தால் அவை தலைவனது இருப்பிடத்தைச் சார்ந்ததாகக் குறிப்பிடப்பெறும். அதற்கு உள்ளுறையுடன் கூடிய வரிகளே சான்று. நால்வரை நாட, ஓங்கல் வெற்ப என்பன ஒரு சில. தலைவன் அவன் நாட்டுக் கருப்பொருள்களைப் போலவோ அல்லது அதன் தன்மையிலிருந்து மாறுபட்ட கீழானவனாகவோ சித்தரிக்கப்படுதல் ஆகும்.

### 2.3.3.2.10. பிற்கால இலக்கண நூல்கள் கூறும் உள்ளுறை

தொல்காப்பியருக்குப் பின் எழுந்த இலக்கண நூல்களுக்குக் கால இடைவெளி அதிகம். தொல்காப்பியரின் சிந்தனைகளைச் சுருக்கியும், பல கோட்பாடுகளைத் தொல்காப்பியத்தோடு மட்டுமே விடப்பட்டும் எடுத்தாளப்பட்டன.

### நாற்கவிராச நம்பியின் அகப்பொருள்

"உவமைப் பொருளும் இறைச்சிப் பொருளும் என்று
இருவகைப் பொருளும் எய்தும் அகப்பாட்டினுள்
உள்ளுறை உவமம் வெளிப்படை உவமம் என
எள்ளரும் உவமம் இருவகை உடைத்தே" (ந.அக. 235)

"அவற்றுள்
உள்ளுறை உவமம் உய்த்துணர் வகைத்தாய்ப்
புள்ளொடும் விலங்கொடும் பிறவொடும் புலப்படும்" (ந.அக. 236)

"வெளிப்படை உவமம் வினை பயன் மெய் உரு
வெளிப்பட நின்று விளங்குவ தாகும்" (ந.அக. 238)

தொல்காப்பியக் கருத்தைத் திருப்பிச் சொல்வது இது. ஆயினும் உள்ளுறை உவமையை மட்டும் கூறி, ஏனைய உள்ளுறைகளை விட்டு விட்டதும் பிற மரபுகள் பலவும் கைவிடப்பட்டமையும் காணலாம். மாறனலங்காரத்திலும் உள்ளுறை உவமை மட்டுமே கூறி, உள்ளுறை அதன் வகை முதலியவற்றை விட்டு விட்டமையை அறியலாம்.

## வீரசோழியம்

வடமொழிச் செல்வாக்கை மிகுதியும் ஏற்ற வீரசோழியம் இதனைச் சுருக்கணி என்று கூறுகிறது.

> "வேட்டொழிவ தல்லால் விளைஞர் விளைவயலுள்
> தோட்ட கடைஞர் சுடுநந்து—மோட்டாமை
> வன்புறுத்து மீதுடைக்கும் வச்சத்து இளங்கோவை
> இன்புறுத்த வல்லாமோ யாம்'' (வீ.சோ. 153)

தொகை மொழி எனினும் சுருக்கம் எனினும் ஒக்கும். உள்ளுறை உவமையை சுருக்கு என்றும் தொகை மொழி என்றும் முதலில் விளக்கும் உரையாசிரியர் பின்னர் ஒட்டணி விளக்கத்திற்குப் போகின்றார். வீரசோழிய ஆசிரியர் சுருக்கணியை விளக்கும் பின்னைய செய்யுளில்,

> "வீவில் கவிதான் கருது பொருளை வெளிப்படுத்தற்கு
> ஒவியமே சுருக்காம் மறை சொல்லின் உரைத்திடினே'' (வீ.சோ. 166)

சுருக்கு என்னும் அலங்காரம் கவி தன்னால் கருதப்பட்ட பொருளை மறைத்து, அதனை வெளிப்படுத்தற்குத் தக்க பிறிதொன்றனைச் சொல்வது.

## தண்டியலங்காரம்

ஒன்றைச் சொல்லி பிறிதொன்றை உணர்த்துவதை ஒட்டணி என்றனர்.

"கருதிய பொருள்தொகுத்து அதுபுலப் படுத்தற்கு

ஒத்தொன்று உரைப்பின் அஃது ஒட்டென மொழிப'' (வீ.சோ. 52)

கவி தன்னால் கருதப்பட்ட பொருளை மறைத்து, அதனை வெளிப்படுத்தற்குத்தக்க பிறிதொன்றனைச் சொல்லின் அது ஒட்டென்னும் அலங்காரமாம். இதனை உவமப்போலி எனவும் பிறிது மொழிதலணி எனவும் நுவலா நுவற்சி எனவும் சுருக்கணி எனவும் பலவாறு கூறியுள்ளனர். எனவே முன்னதன் மரபு வளர்ச்சியும், மாற்றமுமே ஒட்டணியாற்று எனக் கூற இடமுள்ளது.

## தொன்னூல் விளக்கம்

"ஒட்டுஎனத் தன்பொருள் உரையாது உவமை

சுட்டலில் அப்பொருள் தோன்ற இயம்பலே'' (தொ.வி. 344)

## முத்துவீரியம்

"எண்ணிய பொருள்மறைத் தேயது புலப்பட

வேறொடு பொருளை விளம்புவ தொட்டே'' (மு.வீ. 1230)

## சந்திராலோகம்

குறித்து ஒரு பொருளைக் கூறற்குரியது.

"மற்றொரு பொருள்மேல் வழங்கல் குறிப்பு

நவிற்சி அணி என நாட்டினர் புலவர்'' (சந். 113)

### குவலயாநந்தம்

ஒருவர் குறித்து உரைக்கின்றதையே மற்றொருவர் குறித்தது

> "உரைசெயில் பேரும் குறிப்பு நவிற்சி; மற்றோர் செயில், வாய்
>
> தருசொல் அருந்திடு காளாய்! களமர்கள் சார்வர் அதை
>
> ஒருவுவை என்பது இலக்கியம் தேர்எட்ட ஊர் அரசே'' (குவ.146)

தண்டியலங்காரம், மாறனலங்காரம், இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்து வீரியம், சாமிநாதம் யாவும் ஒட்டு என்றே இவ்வணியைக் கூறும். வீரசோழியம் சுருக்கு எனவும் சந்திராலோகமும் குவலயாநந்தமும் குறிப்பு நவிற்சி என்றும் சுட்டுகின்றன. எனவே இங்ஙனம் எல்லாம் பிற் காலத்தவர்கள் கூறும் ஒட்டணி அகம் புறம் அனைத்திற்கும் பொதுவான ஒன்று.

## 2.3.3.3. இறைச்சி

### 2.3.3.3.1. இறைச்சி சொற்பொருள்

இறைச்சி–கருப்பொருள் என பழைய உரையாசிரியர்கள் கூறுவர்.

> "அகப்பாடல்களில் கூறுப்பெறும் முதல், கரு, உரி மூன்றனுள் முதல், நிலம், பொழுது இரண்டையும், உரி மக்களின் வாழ்வு நிலையையும் கரு அந்நிலப் பகுதியின் இயற்கைச் சூழல், மரம், செடி,கொடி, உணவு, விலங்குகள், பறவைகள் மக்களின் தொழில்கள் என இவற்றைக் குறிக்கும். இறைச்சி எனும் சொல் இவற்றுள் ஒரறிவுயிர் முதல் பறவை, விலங்குகளைச் சிறப்பாகக் குறித்தது.

இன்று அவற்றின் 'ஊனை'–இறைச்சி என்று கூறுகின்றோம். இஃது இழிபொருட்பேறு. அதாவது உயர்ந்த பொருளில் வழங்கிய சொல், அதனோடொட்டிய தாழ்ந்த பொருளைக் குறிக்கக் காலப்போக்கில் மாறுவது. காலப்போக்கில் முன்பு இச்சொல் பறவை, விலங்கினம் போன்றவற்றின் அன்பு, அவற்றிடையேயும் காணப்படும் தன்னியல்பான காதல் செயல்கள் இவற்றைக் குறித்தது."[10]

குறிஞ்சி, முல்லை முதலான நில அடிப்படையில் தோன்றும் சாத்தன், சாத்தி, குறத்தி போன்ற இயற்பெயர்களின் ஈறுகள் உயர்திணைக்குரிய இறுதி நிலைகளே ஆகும். எனினும் இறைச்சி என்பது உயர்திணையைக் குறிக்காமல் அஃறிணையையே குறிக்கும்.

"இறைச்சிப் பொருள்வயின், செய்யுளுள் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி(கள்) உயர்திணைச் சுட்டா'' (தொல். சொல். 681)

## 2.3.3.3.2. இறைச்சி உணரும் விதம்

இறைச்சி அகப்பாடலில் ஒரு குறிப்புப் பொருளைத் தரும். அதனை உய்த்துணர வல்லார்க்குத் தெரியும்.

"ஒடுங்கா எழில் வேழம் வீழ்பிடிக்கு உற்ற
கடுஞ்சூல் வயாவிற்கு அமர்ந்து, நெடுஞ்சினைத்
தீம்கண் கரும்பின் கழை வாங்கும் 'உற்றாரின்
நீங்கலம்' என்பான் மலை'' (குறி. கலி. 40)

மடியாத அழகுடைய களிற்று யானை ஒன்று, தன் அன்புப் பெண் யானைக்குத் தலைச்சூலால் உண்டான வயாநோய்க்கு மனம் பொருந்தி இனிய கண்ணிலே தோன்றிய நெடிய கிளைகளையுடைய கருப்பங்கோலை முறித்து நிற்கும் என்பது பாடலின் பொருள். தலைவன் முயன்று வரைந்து கொண்டு நம் வயாவிற்குத் தன் மனம் பொருந்தி நாம் விரும்புவனவற்றைத் தந்து மனக்குறை தீர்ப்பான் என்பது குறிப்பு.

அகப்பாடல்களில் இறைச்சி பெரிதும் பயன்படும் இடங்கள், பாலை வழியிடையே காணப்படும் கருப்பொருள்களும் அவற்றின் தன்னியல்பான காதல் செயல்களுமேயாம். இவை தலைவன் விரைவில் திரும்புவான் எனத் தலைவியை ஆற்றுவிக்கவும், தலைவன் திரும்பும் போது தேர்ப்பாகனை விரைவில் செலுத்துமாறு கூறுவதற்கும் பயன்படும். தலைவன் இடையில் திரும்பி விடுவான் என எண்ணியும் இது புனையப்படும். விலங்குகளின் தன்னியல்பான குடும்ப உறவு, காதலுறவு போலும் செயல்களில் ஈடுபடும். இவை அவற்றைப் பார்க்கும் இளையவளுக்குக் காதலுணர்வை– பாலுணர்வைத் தூண்டும்.

'வீழ்நர்க்கு இறைச்சியாய்' (கலி. 8)

'இன்புற்றார்க்கு இறைச்சியாய் இயைவதே செய்தாய்' (கலி. 148)

என இரண்டு இடங்களில் இச்சொல் காம உணர்வுத் தூண்டல் என்ற பொருளிலேயே வருகிறது.

### 2.3.3.3.3. இறைச்சி–இலக்கண விளக்கம்

'இறைச்சி தானே உரிப்புறத் ததுவே' (தொல். பொருள். 225)

இறைச்சிப் பொருளென்பது உரிப்பொருளின் புறத்தாகித் தோன்றும் பொருள் என்றவாறு என இளம்பூரணர் கூறுகிறார்.

'இறைச்சி தானே பொருட்புறத் ததுவே'

என நச்சினார்க்கினியர் பாடம் கொண்டார். செய்யுளில் சொல்ல வந்த பொருளின் புறத்தே புலப்பட்டு செய்யுள் சிறக்குமாறு செய்வது இறைச்சி. இறைச்சி என்பது கருப்பொருள்களின் அன்புணர்வு. பறவை விலங்குகளின் காதல் வாழ்வு. பறவை விலங்குகளின் ஊனை (மாமிசத்தை) இன்றும் இறைச்சி என்பர். முற்காலத்தே இறைச்சி என்றால் விலங்கு, பறவை, போன்ற உயிரினங்களைக் குறித்தது. இன்று அவற்றின் ஊனை மட்டுமே இறைச்சி என்பது இழிபொருட்பேறு. அதாவது உயர்ந்த பொருளுடைய சொல், காலப்போக்கில் தாழ்ந்த பொருளைத் தருவது.

"மக்களின் காதல் ஒழுக்கங்கள் உரிப்பொருள். பிற உயிரினங்களின் காதற் செயல்கள் உரிப்புறத்தன. மாந்தர் தம் காதலைப் புனைவது உரிப்பொருள்" பிற உயிரினங்களின் காதலைச் சித்தரிப்பது இறைச்சிப் பொருள் என தமிழண்ணல் கூறுகிறார்.[11] எங்கெங்கு உயிரினங்களின் அன்பு வாழ்வு சுட்டப்படுகிறதோ, அங்கெல்லாம் 'இறைச்சி' உளது. இறைச்சிகள் உரிப்பொருளைச் சார நின்று அதற்கு உதவவே செய்கின்றன.

"இறைச்சியில் பிறக்கும் பொருளுமாருளவே

திறத்தியல் மருங்கில் தெரியு மோர்க்கே" (தொல். பொருள். 226)

பொருளின் திறத்து ஆராய்ந்து பார்த்தால் இறைச்சியில் இருந்து பொருள் பிறக்கும்.

பிறிதொரு பொருளுக்கு உபகாரப்படுவது உள்ளுறையுவமை; கருப்பொருள் தன்னுள்ளே தோன்றும் பொருள் இறைச்சி. உவமையும் உட்குறிப்பாய் அமைந்த பொருளும் முழுவதும் ஒத்து முடிவது உள்ளுறை. அங்ஙனம் முற்ற உணர்த்தாது, வேறோர் பொருளைக் குறிப்பாய்த் தோற்றுவிப்பது இறைச்சி.

"அன்புறு தகுவன இறைச்சியிற் சுட்டலும்

வன்புறை யாகும் வருந்திய பொழுதே" (தொல். பொருள். 227)

அன்பு மிகுந்த செயல் இயற்கையில் காணப்படும் போது அது இறைச்சி பொருள் உணர்த்தும்.

காதலர் இருவரிடையே அன்பு மிகுவதற்குக் காரணமாகிய செயல்களை இறைச்சிப் பொருளில் சுட்டிக் கூறுதலும் தலைமகள் பிரிவால் வருந்திய நிலைமைக்கண் வற்புறுத்தும் குறிப்பினதாகும்.

பொருளியலில் மூன்று நூற்பாக்கள் இறைச்சி பற்றிக் கூறுகின்றன. இரண்டாவது நூற்பா அவ்விறைச்சிப் பொருள் தன்னுள்ளே பிறிதொரு பொருள் பயப்பனவும் உள என்றது. மூன்றாவது நூற்பா அது தானும் பெரிதும் உயிரினங்களிடையே காணப்படும் அன்பை மிகுவித்தற்குக் காரணமான செயல்களையே சித்தரிப்பதாகும் என்றது.

பிற உயிரினங்களின் வாழ்க்கையில் பிரிதல் உண்டு. அவலம் உண்டு. பொதுவான வாழ்வு நிலைகள் சிற்சில உண்டு. மக்கள் வாழ்வு போன்ற பிற உயிரினங்களின் செயல்கள் எல்லாம் இறைச்சிப் பொருளேயானாலும், அவற்றுள் அன்பை மிகுவிக்கும் செயல்களே அக இலக்கியத்தில் பெரிதும் இடம் பெறுகின்றன. சொல்லதிகாரம் பெயரியலில்,

"இறைச்சிப் பொருள்வயின் செய்யுளுள் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா
நிலத்துவழி மருங்கில் தோன்ற லான" (தொல். சொல். 193)

இயற்பெயர்கள் என்பன நில அடிப்படையில் தோன்றும். உயர்திணை ஈறு அமைந்த விரவுப்பெயர்கள் வனபறழ்குமரி, கடுவன் எனும் (அன், இ) உயர்திணை ஈறுகள் பெற்றிருப்பினும் உயர்திணையைச் சுட்டாமல் அஃறிணையையே குறிக்கும். இறைச்சிப் பொருளுக்கும் விலங்கினம் பறவையினம் போன்ற கருப்பொருள்களுக்கும் உள்ள தொடர்புண்மை இதனாலும் உறுதிப்படுகிறது.

## 2.3.3.3.4. கற்பியல் – தலைவி கூற்றில் இறைச்சி

"புணர்ந்துடன் போகிய கிழவோள் மனையிருந்து
இடைச்சுரத்து இறைச்சியும் வினையும் சுட்டி
அன்புறு தக்க கிளத்தல் தானே
கிழவோன் செய்வினைக்கு அச்சமாகும்" (தொல். பொருள். 146)

இடைச்சுரத்தில் உள்ள பறவை, விலங்குகளின் காதல் செய்கைகளை இறைச்சியில் கூறுதல் மரபாகும் என்பதை உணர்த்துகிறது.

## 2.3.3.3.5. இளையோர் கூற்றில் இறைச்சி

"ஆற்றது பண்பும், கருமத்து வினையும்,
ஏவல் முடிபும், வினாவும் செப்பும்
ஆற்றிடைக்கண்ட பொருளும், இறைச்சியும்,
தோற்றம் சான்ற அன்னவை பிறவும்
இளையோர்க்குரிய கிளவி என்ப'' (தொல். பொருள். 168)

ஆற்றிடைக் கண்ட பொருளும் இறைச்சியுமாவது வழியிடைக் கண்ட உயிரினங்களின் காதல் செய்கைகளையே குறிக்கிறது.

## 2.3.3.3.6. பிற்கால இலக்கண நூல்கள் கூறும் இறைச்சிப் பொருள்

"கருப் பொருட் பிறக்கும் இறைச்சிப் பொருளே'' (நா.ந. 239)

"கருப்பொருள் களனாக் கட்டுரை பயின்ற
பொருட்புறத் தனவாம் இறைச்சிப் பொருளணி'' (மாறனலங்காரம்)

தொல்காப்பியர் கருத்தையே திரும்பக் கூறுகின்றன. மாறனலங்கார ஆசிரியர் இறைச்சியை ஓரணியாகக் குறிக்கின்றார். பாட்டினுள் கூறப்படும் பொருளின் புறத்தே தோன்றும் பிறிதொரு பொருள் என்று விளக்கம் தருகின்றார்.

## 2.3.3.3.7. இறைச்சி விளக்கம்

1. இறைச்சி என்பது கருப்பொருள். கருப்பொருள்களுள்ளும் ஓரறிவுயிர் முதல் ஐந்தறிவுடையனவரை இதனால் குறிக்கப்படுகின்றன. அவற்றுள்ளும் பறவை, விலங்கினங்களே சிறப்பாகக் குறிக்கப்படுகின்றன.

2. இறைச்சி என்பது கருப்பொருள்களின் செயல்பாட்டைக் குறித்தது. அவற்றின் இயக்கத்தைச் சுட்டியது. பறவை, விலங்குகளின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் குறிக்கவும் பயன்பட்டது. அவற்றின் பாலுணர்வு வெளிப்பாடுகளை, அன்பை வெளிப்படுத்தும்–மிகுவிக்கும் காட்சிகளைச் சுட்டப் பெரிதும் இடனாயிற்று.

3. இறைச்சி என்பது மாந்தர் தம் காதல் உணர்வுக்கு இயைபுப் பின்னணியாக அல்லது எதிர்ப் பின்னணியாக அமைந்து அவ்வுணர்வைத் தூண்டும் ஒன்றாக வளர்ந்தது.

4. 'இறைச்சி' என்பது இதனால் பிறிதொரு பொருளையும் உணர்த்துவதாகியது. அதற்குக் குறிப்புப் பொருள் தரும் சிறப்பும் இருப்பதனால், இறைச்சி என்றாலே குறிப்புப் பொருள் என அதன் கருத்து வளர்ந்தது.

5. பறவை, விலங்குகளின் அவலம், கடமை, பாசம் போல்வன பலவும் பொதுவாக இறைச்சி எனப்படுமாயினும், அவற்றின் அன்பு உணர்வைப் பற்றியே பெரிதும் பாடிப்பாடி இறைச்சி என்றால் அவ்வுயிரினங்களின் அன்பு நிகழ்ச்சிகள் என்று கருதப்பட்டது. இறைச்சி அன்பு, காதல், பாலுணர்வுடன் நெருங்கிய தொடர்புடையதாயிற்று.

6. இன்று பாலுணர்வுத் தூண்டல்களுக்குத் திரைப்படம், சுவரொட்டிகள், விளம்பரங்கள் போல புறத்தூண்டல்கள் எவையும் சங்க காலத்தில்

இல்லை. பாலுணர்வுத் தூண்டல்களுக்குப் பயன்பட்டவை இவ்வியற்கைக் காட்சிகளே.

7. வழியிடைக் காணும் காட்சிகளே இறைச்சியில் மிகுதி.

8. இறைச்சி அகப்பாடலுக்கு மட்டுமே உரியது. அவ்வவ் திணைக்குரிய கருப்பொருள்களின் அடிப்படையிலே வருவது. தலைமகனது நாட்டிற்கும் ஊர்க்கும் அடையாகி வருவது. தலைவன், தலைவி, தோழி, இவர்களின் கூற்றுக்களில் அவர்கள் கண்ட இயற்கைக் காட்சிகளைப் பற்றியதாய், அவரவர் நிலைக்கேற்ப அமைவது.

9. இறைச்சி 'பொருட் புறத்தது' எனப் பாடமாகவும் 'நேயம்' எனவும் 'உள்ள பொருள் ஒன்றனுள்ளே கொள்வதோர் பொருள்' எனவும் 'கூற வேண்டுவதோர் பொருளின் புறத்தே புலப்பட்டு அதற்கு உபகாரப்படும் பொருள் தன்மையுடையது' எனவும் இது போல வரும் விளக்கங்கள் எல்லாம் வடமொழித் தொனியுணர்வோடு எழுதப்பட்ட கருத்துக்களாகும். இவை இறைச்சியோடு ஒப்பிடக்கூடிய கருத்துக்களேயன்றி, இறைச்சிக்கே பொருளாகாது. இவ்விரு விளக்கங்களும் ஒன்றாகிக் குழம்பியதற்கு இவ்வொற்றுமையே காரணமாகும்.

10. மாந்தன் தொடக்க காலத்தில் விலங்குகளுடன் விலங்காக வாழ்ந்த போது, அவ்விலங்குகளிடமிருந்த சில பாலுறவுகளைக் கண்டான். அவை மனித வாழ்வில் உள்ளது போன்ற காதலுணர்வு, குடும்ப உறவு,

செயல்கள் இருப்பதாகச் சங்க இலக்கியம் சித்திரம் தீட்டுகிறது. இவற்றுள் சில உண்மையாக இருக்கலாம். உலகில் பிறந்த உயிர்களுக்கு இவை பொதுவான பண்பாக அமையும்.

### 2.3.3.3.8. உள்ளுறை– இறைச்சி வேறுபாடு

1. உள்ளுறை தெய்வம் நீங்கிய பிற கருப்பொருள்களை இடனாகக் கொண்டு வரும். இறைச்சி என்பதே கருப்பொருள் தான். அது சிறப்பாக உயிரினங்களின் செயல்பாடுகள் அன்புணர்வுகள் பற்றியது.

2. இரண்டும் அகப்பாடல்களுக்கே உரியன. கருப்பொருளை இடமாகக் கொண்டு பிறப்பன. குறிப்பால் பொருள் தருவன.

3. உள்ளுறை ஒன்றைக் கூறி, அதன் வழியாகப் பிறிது ஒன்றை உணர்த்துவது. உவமையைக் கூறி உவமிக்கப்படும் பொருளை உணர்த்துவது போன்றது அது. அதிலும் இதற்கு இது என்று நிரலே ஒப்புமையுடைய ஒவ்வொன்றையும் பொருத்திப் பார்க்கவேண்டும்.

புலியேறு—தலைவன் நெடும்புதல் கானம். தலைவியின் குடிமடப்பிடி. தலைவி அஃதீன்ற குழவி—தலைவியின் பெண்மை நலம் இப்படிப் பார்ப்பது அதன் மரபு. இது வசையும், நசையும் பற்றியதாக தலைவனைப் பழிப்பது போல இருக்கும். தலைவனை மறைமுகமாக கடிந்து திருத்த அது பயன்படும்.

4. இறைச்சி சிற்றுயிர்களின் அன்புப் பொழிவு. காதல் செயல்களை அடிப்படையாகக் கொண்டது. பாடலைப் படிக்கும் போது அதனுள் சொல்ல வந்த செய்தி இருக்காது. படித்து முடித்தபின் தோன்றுவதே இறைச்சிப் பொருள். அதுவும் ஒட்டு மொத்தமான பொருளே. இதில் 'அன்புறுதற்கு ஏற்புடையனவே' இடம் பெறும். தலைவியை ஆற்றுவித்தல். தலைவன் தலைவியைக் காண விரைதல், தலைவனின் அன்பு மிகுதியை நினைதல் இதில் இடம் பெறும்.

5. உள்ளுறைப் பொருளை முற்றிலும் உணர்ந்தாலே பாட்டுப் பொருளை முற்றிலும் அறிந்ததாகும்.

இறைச்சி, மரபுவழி திறனறிவு மிக்கவர்களால் அறியப்படும். அங்ஙனம் அறியாவிடினும் சொல்ல வந்த செய்தியில் குறைவுபடாது.

## 2.3.3.4. மெய்ப்பாடுகள்

செய்யுளைப் படிப்போர்க்கு உய்த்துணர வேண்டாது வெளிப்படையாகப் பொருளை உணருமாறு கூறுவது மெய்ப்பாடு. தொல்காப்பியம் செய்யுளியல் முதல் நூற்பாவில் செய்யுளுறுப்புகளைக் கூறும் போது இருபதாவது உறுப்பாக மெய்ப்பாட்டைக் கூறுகிறார்.

"பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ" (தொல்.பொருள்.310)

என்பதில் மெய்ப்பாடு பாட்டுப் பொருளை உணர்ந்து படித்து இன்புறுவதைக் குறிக்கிறது. தொல்காப்பியர்,

"உய்த்துணர்வு இன்றித் தலைவரு பொருண்மையின்

மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்" (தொல்.பொருள்.505)

என்கிறார் பாட்டின் சொல் தொடரைக் கேட்டதுமே அதன் பொருள் கண்கூடாகி விட வேண்டும். அது தான் பாட்டின் மெய்ப்பாடு.

## 2.3.3.4.1. மெய்ப்பாடு உணர்தல்

"கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்

உணர்வுடை மாந்தர்க்கு அல்லது தெரியின்

நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"

(தொல்.பொருள்.271)

மாந்தர்கள் ஒருவர் மெய்ப்பாட்டின் வழி மற்றொருவர்தம் உளக்கருத்தை அறிவதென்பது கண்ணாலும் செவியாலும் அறிந்தறிந்து பழக்கப்பட்ட உணர்வுடைய மாந்தர்க்கே எளிதாகும். மற்றவர்க்கு நினைத்தற்கும் இயலாத ஒன்றாகும்.

இவள் நெற்றி இளம்பிறை போலும் என்பது கண்ணால் உணர்ந்து சுவைத்தது, இளம்பிறை கண்டோர்க்கே பாட்டுப் பொருள் கொள்ள எளிதாகும்.

## 2.3.3.4.2. பொது மெய்ப்பாடுகள்

அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவான மெய்ப்பாடுகள் மெய்ப்பாட்டியலின் முதல் 12 நூற்பாக்களால் கூறப்படுகின்றன. அடிப்படையான மெய்ப்பாடுகள் எட்டு. நகை, அழுகை, இளிவரல்,

மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை. இவை ஒவ்வொன்றும் நான்கு நான்கு காரணம் பற்றிப் பிறக்கின்றன.

இவை யாவும் உலகில் மிக இயல்பாகத் தோன்றும் மெய்ப்பாடுகள். செய்யுளுறுப்பாகிய இம் மெய்ப்பாடுகள் இலக்கியங்களின் பொருள் புலப்பாடு பற்றியதாக உள்ளது.

## 2.3.3.5. பொருள்கோள்

செய்யுள் தொடர்களில் பொருளைப் புரிந்து கொள்ளுதற்குப் பயன்படும் பொருள் கொள்ளும் முறையினைத் தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என்று பொருள் கொள்ளும் முறையினை நான்காகக் கூறுகிறார் தொல்காப்பியர்.

"நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான் கென்ப மொழிபுணர் இயல்பே'' (தொல். சொல். 398)

என்பது நூற்பா. சொல்லதிகாரத்தில் எச்சவியலில் கூறப்பட்டிருக்கும். பொருள்கோள் இலக்கியங்களின் பொருளைப் புரிந்து கொள்ளும் நோக்கிலேயே கூறப்பட்டுள்ளது என்பது தெளிவாகிறது.

தொல்காப்பியரின் இலக்கியக் கோட்பாடுகளை அவரது நூல் அமைப்பு முறை, அவர் வகுத்துக் கொண்ட இலக்கணக் களங்கள், அவரது இலக்கிய விளக்கம் ஆகியவற்றிலிருந்து அறிந்து கொள்ளலாம். பிற இலக்கண நூல்களிலிருந்து 'தொல்காப்பியம்' எனும் இலக்கண நூல் வேறுபட்டு அமைவதை அவர் தம் நூல் வழித் தெளியலாம். பிற இலக்கண

நூல்கள் வாக்கியத்தின் உறுப்புகளுக்கு இலக்கணம் கூறுவதுடன் நின்று விடுகின்றன. ஆனால் தொல்காப்பியர் மொழி என்பதற்குப் பரந்துபட்ட எல்லை வகுத்துக் கொண்டு இலக்கணம் கூறியுள்ளார். அவர் தம் இலக்கணத்தில் இலக்கியமும், இலக்கியம் படைக்கும் உத்திகளும், இலக்கியத்தின் பாடுபொருளும், இலக்கிய வடிவமும் இடம் பெறுகின்றன. இவ்விளக்கங்களின் வழியாகத் தொல்காப்பியரின் இலக்கியக் கோட்பாட்டை அறிந்து கொள்ள முடிகிறது.

# குறிப்புகள்

1. ச.அகத்தியலிங்கம், 'தொல்காப்பியத்தின் தோற்றமும் ஏற்றமும்' தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள் (கருத்தரங்க கட்டுரைகள்) ப.1

2. டாக்டர். ப. அன்பு, 'மா.பொ.சி.யின் இலக்கிய நூல்கள்–ஒரு மதிப்பீடு, ப.11

3. இரா. திருமுருகன், 'தொல்காப்பிய இலக்கண உருவாக்கக் கோட்பாடுகள்' ஆய்வுக்கட்டுரை, ப.32

4. முனைவர். அ.அ. மணவாளன், 'இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள்', ப.61

5. "பலவற் றிறுதி நீடுமொழி உளவே
செய்யுள் கண்ணிய தொடர்மொழி யான" (தொல். எழுத்து. 214)
"குறியதன் இறுதிச் சினைகெட உகரம்
அறிய வருதல் செய்யுளுள் உரித்தே" (மேலது. 235)
"இன்றி யென்னும் வினையெஞ் சிறுதி
நின்ற இகரம் உகரம் ஆதல்
தொன்றியல் மருங்கின் செய்யுளுள் உரித்தே" (மேலது. 238)
"அன்றுவரு காலை ஆவா குதலும்
ஐவரு காலை மெய்வரைந்து கெடுதலும்
செய்யுள் மருங்கின் உரித்தென மொழிப" (மேலது. 259)
"ழகர உகரம் நீடிடன் உடைத்தே
உகரம் வருதல் ஆவயினான" (மேலது. 262)

"செய்யுள் மருங்கின் வேட்கை என்னும்
ஐயென் இறுதி அவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுதல் என்மனார் புலவர்
டகாரம் ணகார மாதல் வேண்டும்'' (மேலது. 289)

"விண்ணென வரூஉங் காயப் பெயர்வயின்
உண்மையும் உரித்தே அத்தென் சாரியை
செய்யுள் மருங்கின் தொழில்வரு காலை'' (மேலது. 306)

"இலமென் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலும் உரித்தே செய்யுளான'' (மேலது. 317)

"பொன்னென் கிளவி யீறுகெட முறையின்
முன்னர்த் தோன்றும் லகார மகாரம்
செய்யுள் மருங்கின் தொடரிய லான'' (மேலது. 357)

"லனவென வரூஉம் புள்ளி யிறுதிமுன்
உம்முங் கெழுவும் உளப்படப் பிறவும்
அன்ன மரபின் மொழியிடைத் தோன்றிச்
செய்யுள் தொடர்வயின் மெய்பெற நிலையும்
வேற்றுமை குறித்த பொருள்வயி னான'' (மேலது. 481)

"கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர்'' (மேலது. 483)

"இனச்சுட் டில்லாப் பண்புகொள் பெயர்க்கொடை
வழக்கா றல்ல செய்யு ளாறே'' (தொல். சொல். 18)

"பலவயி னானு மெண்ணுத்திணை விரவுப் பெயர்
அஃறிணை முடிபின செய்யு ளுள்ளே" (மேலது. 51)

"கு ஐ ஆன்என வருஉம் இறுதி
அவ்வொடுஞ் சிவணுஞ் செய்யு ளுள்ளே" (மேலது. 104)

"ஆஓ ஆகும் பெயருமா ருளவே
ஆயிடன் அறிதல் செய்யுள் உள்ளே" (மேலது. 192)

"இறைச்சிப் பொருள்வயின் செய்யுளுள் கிளக்கும்
இயற்பெயர்க் கிளவி உயர்திணை சுட்டா
நிலத்துவழி மருங்கின் தோன்ற லான" (மேலது. 193)

"பாலறி மரபின் அம்மூ வீற்றும்
ஆஓ ஆகுஞ் செய்யு ளுள்ளே" (மேலது. 208)

"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே" (மேலது. 391)

"செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந் தறியப் பிரிந்தணர் காட்டல்" (மேலது. 456)

6. "இரண்டுமுத லொன்பான் இறுதி முன்னர்
வழங்கியல் மாவென் கிளவி தோன்றின்
மகர அளபொடு நிகரலு முரித்தே" (தொல். எழுத்து. 480)

"கிளந்த அல்ல செய்யுளுள் திரிநவும்
வழங்கியல் மருங்கின் மருவொடு திரிநவும்
விளம்பிய இயற்கையின் வேறுபடத் தோன்றின்
வழங்கியல் மருங்கின் உணர்ந்தனர் ஒழுக்கல்
நன்மதி நாட்டத் தென்மனார் புலவர்" (மேலது. 483)

7. தமிழண்ணல், ‘சங்க இலக்கிய ஒப்பீடு’ ப.28

8. மேலது, ப.29

9. ச.அகத்தியலிங்கம், ‘தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்’ (ஆய்வுக்கட்டுரை), ப.16

10. தமிழண்ணல், ‘தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள்’, பக். 65–66

11. மேலது, ப.91

# இயல் – மூன்று



# கபிலரின் இலக்கியக் கோட்பாட்டில் உயிரினங்கள்

## இயல்—மூன்று

# 3. கபிலரின் இலக்கியக் கோட்பாட்டில் உயிரினங்கள்

**I.** இலக்கிய நோக்கில் உயிரினங்கள்

**II.** வருணனை நோக்கில் உயிரினங்கள்

**III.** வாழ்வியல் நோக்கில் உயிரினங்கள்

# இயல் – மூன்று

## கபிலரின் இலக்கியக் கோட்பாட்டில் உயிரினங்கள்

தொல்காப்பியம் தமிழில் கிடைத்துள்ள தொன்மையான நூல். சங்க இலக்கியங்கள் தொல்காப்பியத்திற்குப் பின் எழுந்தவை என்பது அறிஞர்கள் கூற்று. இந்நிலையில் தலைச்சங்க காலத்து இலக்கியங்களின் பாடுபொருள் தொல்காப்பிய இலக்கணத்திற்கு ஏற்றதாக அமைந்திருக்கலாம். சங்க இலக்கியங்கள் இதன் கால எல்லையில் தோன்றியிருந்தாலும் இவற்றிற்கு முன்னைய மரபு ஒன்று இருந்திருத்தல் வேண்டும். சங்க இலக்கியப் புலவர்களுள் ஒருவரான கபிலர் பயன்படுத்திய இலக்கிய உத்தி தொல்காப்பியர் காலத்திற்கு முன்னும் இருந்ததாகக் கருதலாம். 'இலக்கியம் கண்டு இலக்கணம் இயம்பலே மரபு' என்னும் கூற்று இதனை வலியுறுத்துவதாக அமைகின்றது.

தமிழ் இலக்கணத்தில் இலக்கியக் கொள்கைகளையும் ஒரு பிரிவாக எடுத்துக் கொண்டு விளக்கும் போக்குத் தொல்காப்பியரிடம் காணப்படுகிறது. எழுத்து, சொல், பொருள் என அவர் மூன்று பகுதிகளிலும் இலக்கிய மொழி, இலக்கியப் பாடுபொருள், இலக்கிய உத்தி, பேச்சு மொழி ஆகியவை பற்றி விளக்கியுள்ளார்.

தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு கபிலரின் பாடல்களில் இடம் பெறும் உயிரினங்களை விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும். கபிலர் பாடல்களில் இடம் பெறும் உயிரினங்களை,

1. இலக்கிய நோக்கில் உயிரினங்கள்
2. வருணனை நோக்கில் உயிரினங்கள்
3. வாழ்வியல் நோக்கில் உயிரினங்கள்

என்ற மூன்று அடிப்படைகளில் ஆராயலாம்.

# I. இலக்கிய நோக்கில் உயிரினங்கள்

3.1.1. திணை அடிப்படையில் உயிரினங்கள்

3.1.1.1. குறிஞ்சித் திணை உயிரினங்கள்

3.1.1.2. முல்லைத் திணை உயிரினங்கள்

3.1.1.3. நெய்தல் திணை உயிரினங்கள்

3.1.2. உவமை அடிப்படையில் உயிரினங்கள்

3.1.2.1. உவமையில் உயிரினங்கள்

3.1.2.2. உள்ளுறைப் பொருளில் உயிரினங்கள்

3.1.2.3. இறைச்சிப் பொருளில் உயிரினங்கள்

3.1.3. மரபு அடிப்படையில் உயிரினங்கள்

3.1.3.1. இளமைப் பெயர்

3.1.3.2. ஆண்பாற் பெயர்

3.1.3.3. பெண்பாற் பெயர்

# I. இலக்கிய நோக்கில் உயிரினங்கள்

கபிலர் பாடல்களில் உயிரினங்கள் பன்முக நோக்கில் பயன்படுத்தப்பட்டுள்ளன. இலக்கிய நோக்கில் உயிரினங்களை,

1. திணை அடிப்படையில் உயிரினங்கள்
2. உவமை அடிப்படையில் உயிரினங்கள்
3. மரபு அடிப்படையில் உயிரினங்கள்

எனும் மூன்று நிலைகளில் ஆராயலாம்.

## 3.1.1. திணை அடிப்படையில் உயிரினங்கள்

சங்க அகப்பாடல்களில் இயற்கை நிலையான கருப்பொருட்கள் திணை நிலப் பாகுபாட்டிற்குப் பெரிதும் உதவி உள்ளன. ஐவகை நிலப் பாகுபாட்டின் விளக்கத்திற்கு அந்தந்த நிலங்களிலே காணப்பட்ட மரம், செடி, கொடி, பூ, புள், விலங்கினம் என்பன பெரிதும் உதவின.

இயங்கும் தன்மையுடைய பறவைகளும், விலங்குகளும் அகப்பாடல்களிலே சில நுண்ணிய உணர்வுகளைப் புலப்படுத்துவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

மனித உணர்வுகளிலே ஏற்படும் மாற்றங்களைச் சுட்டபறவை, விலங்குகளின் இயல்புகள் உவமை நிலையிலும், உள்ளுறை, இறைச்சிப் பொருள் நிலையிலும் புலவர்களால் பயன்படுத்தப்பட்டுள்ளன.

கபிலர் பாடல்களில் இடம் பெறும் உயிரினங்களைத் திணை அடிப்படையில்,

1. குறிஞ்சித் திணை உயிரினங்கள்
2. முல்லைத் திணை உயிரினங்கள்
3. நெய்தல் திணை உயிரினங்கள்

என்ற மூன்று அடிப்படைகளில் விளக்கலாம்.

### 3.1.1.1. குறிஞ்சித்திணை உயிரினங்கள்

தொல்காப்பியர் உயிரினங்களை இந்த நிலத்திற்கு இந்த உயிரினம் என்று பிரித்துக் காட்டவில்லை.

நம்பியகப் பொருள் அகத்திணைப் பாடல்களுக்குரிய கருப்பொருள்களை வகுத்துக் காட்டுகிறது. அவற்றுள் ஒவ்வொரு திணைக்குரிய பறவை, விலங்கு பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன.

#### 3.1.1.1.1. நம்பியகப் பொருள் குறிக்கும் விலங்குகள்

“குறத்தியர் கிளிமயில் மறப்புலி குடாவடி
கறையடி சீயம் சிறுகுடி அருவி” (ந.அக.20)

என்ற நூற்பா வரிகளில் குறிஞ்சித்திணைக்குரிய விலங்குகளாக புலி, கரடி, யானை, சிங்கம் ஆகியன இடம் பெறுகின்றன.

#### பறவைகள்

“குறத்தியர் கிளிமயில் மறப்புலி குடாவடி” (ந.அக.20)

என்ற பாடல் வரி கிளி, மயில் ஆகியன குறிஞ்சித்தணைக்குரிய பறவைகள் என்பதை உணர்த்துகின்றன.

### 3.1.1.1.2. கபிலர் பாடல்களில் இடம் பெறும் விலங்குகள்

கபிலரின் குறிஞ்சித்திணைப் பாடல்களில் நம்பியகப் பொருளில் குறிப்பிடும் விலங்குகளும், குறிக்கப்படாத விலங்குகளும் இடம் பெறுகின்றன.

**விலங்கு பற்றியவை**

1. "நெற்கொள் நெடுவெதிர்க் கணந்த யானை" (குறி.பா.35)

2. "குறுங்கை இரும்புலிக் கோல்வல் ஏற்றை" (ஐ.கு.நூ.216)

3. "மென்தினை மேய்ந்த தறுகட் பன்றி" (ஐ.கு.நூ.261)

4. "மந்திக் கணவன் கல்லாக் கடுவன்" (ஐ.கு.நூ.274)

5. "செருஉறு குதிரையின் பொங்கி, சாரல்" (குறுந். 385)

6. "வழைவளர் சாரல் வருடை நன்மான்" (குறி.கலி.50)

7. "புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு" (அக.நா.158)

8. "சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா" (நற்.359)

9. "துணைபுணர் ஏற்றின் எம்மொடு வந்து" (குறி.பா. 235 வரி)

10. "முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட" (அக.நா. 182)

11. "ஏதில் குறுநரி பட்டடற்றால்" (குறி.கலி. 65)

12. "குருமயிர்ப் புருவை நசையின் அல்கும்" (ஐ.கு.நூ.238)

போன்ற இலக்கிய வரிகள் மூலமாக குறிஞ்சித்திணையில் யானை, புலி, பன்றி, குரங்கு, குதிரை, மான், நாய், பசு, ஏறு, முள்ளம்பன்றி, நரி, மறி ஆகிய விலங்குகள் இடம் பெற்றமை அறியப்படுகின்றது.

**பறவை பற்றியவை**

1. "ஐவனச் சிறுகிளி கடியும் நாட" (ஐ.கு.நூ.285)

2. "புனவர் கொள்ளியின் புகல் வரும் மஞ்ஞை" (ஐ.கு.நூ.295)

3. "மயில்கள் ஆலக்குடிஞை இரட்டும்" (ஐ.கு.நூ.291)

4. "ஏங்குவயிர் இசைய கொடுவாய் அன்றில்" (குறி.பா.வ. 219)

5. "துளிநசை வேட்கையான் மிசைபாடும் புள்ளின், தன்" (குறி.கலி.10)

இவ்வரிகளின் மூலம் கிளி, மயில், பேராந்தை, அன்றில், வானம்பாடி ஆகிய பறவைகள் கபிலரின் குறிஞ்சித் திணைப் பாடல்களில் இடம் பெற்றமை அறியப்படுகின்றது.

**பிற உயிரினங்கள்**

1. 'வண்டுபடு கூந்தல் தண்தழைக் கொடிச்சி' (ஐ.கு.நூ.256)

2. 'அருமணி அவிர்உத்தி அரவுநீர் உணல்செத்து' (குறி.கலி. 45)

3. 'ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்' (குறுந்.25)

4. 'கொடுந்தாள் முதலையும் இடங்கரும் கராமும்' (குறி.பா.வ.258)

இவ்வரிகள் மூலம் குறிஞ்சித்திணைப் பாடல்களில் வண்டு, பாம்பு, மீன் ஆகிய உயிரினங்களும் இடம் பெற்றமை உணரப்படுகின்றது.

## 3.1.1.2. முல்லைத் திணை உயிரினங்கள்

கபிலரின் முல்லைத் திணைப் பாடல்களில் முல்லைத் திணைக்குரிய உயிரினங்கள் இடம் பெற்றுள்ளன. அது மட்டுமன்றி பிற திணைக்குரிய உரினங்களும் முல்லைத் திணைக்குரிய உயிரினங்களாக இடம் பெற்றுள்ளன.

### 3.1.1.2.1. நம்பியகப் பொருள் குறிக்கும் விலங்குகள்

"கான வாரணம் மான்முயல் பாடி" (ந.அக.22)

என்ற நூற்பா வரி மான், முயல் ஆகியன முல்லைத் திணைக்குரிய விலங்குகள் என்பதை உணர்த்துகின்றது.

**பறவைகள்**

"கான வாரணம் மான்முயல் பாடி" (ந.அக.22)

என்ற நூற்பா வரி காட்டுக்கோழி முல்லைத் திணைக்குரிய பறவையென குறிக்கிறது.

### 3.1.1. 2.2. கபிலர் பாடல்களில் இடம்பெறும் உயிரினங்கள்

**விலங்கு**

"எல்லுமுயல் எறிந்த வேட்டுவன் சுவல" (நற். 59)

என்ற நற்றிணைப் பாடல் வரியில் முயல் இடம் பெறுகின்றது.

**பிற உயிரினங்கள்**

"உடும்பு கொலீஇ வரிநுணல் அகழ்ந்து" (நற். 59)

"நெடுங் கோட்டுப் புற்றத்து ஈயல் கெண்டி" (நற். 59)

என்ற பாடல் வரிகளில் உடும்பு, ஈயல் ஆகியன இடம் பெறுகின்றன.

### 3.1.1.3. நெய்தல் திணை உயிரினங்கள்

நெய்தல் திணைக்குரிய விலங்கு சுறாமீன். கபிலர் பாடலில் கொழுமிய மீன்கள் குறித்த செய்தியே இடம் பெறுகின்றது.

### 3.1.1.3.1. நாற்கவிராச நம்பி குறிக்கும் விலங்கு

"சுறவம் பாக்கம் பெறலரும் பட்டினம்" (ந.அக.24)

என்பதில் விலங்காக சுறாமீன் குறிப்பிடப்படுகிறது.

**பறவை**

"அளவர் அளத்தியர் அலைகடற் காக்கை" (ந.அக.24)

என்ற பாடல் வரி நெய்தலுக்குரிய பறவையாக சிறுவெண்காக்கையைக் குறிக்கிறது.

## 3.1.1.3.2. கபிலர் பாடல்களில் இடம் பெறும் விலங்கு

"களிற்றுச்செவி அன்ன பாசடை மயக்கி" (குறுந்.246)

இப்பாடல் வரியில் யானை நெய்தல் திணையில் இடம்பெறுகின்றது.

**பறவை**

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை" (குறுந்.246)

என்ற பாடல் வரி காக்கையை உணர்த்துகிறது.

**பிற உயிரினங்கள்**

"எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொழுதி" (நற். 267)

"நெய்த்தலைக் கொழுமீன் அருந்த, இனக்குருகு" (நற். 291)

என்ற பாடல் வரிகளில் நண்டு, மீன் ஆகியவை இடம் பெறுகின்றன.

**நம்பியகப் பொருளில் குறிப்பிடப்படாத சில உயிரினங்கள்**

நம்பியகப் பொருளில் குறிப்பிடப்படாத சில உயிரினங்கள் கபிலர் பாடல்களில் இடம் பெறுகின்றன.

## குறிஞ்சி நில உயிரினங்கள்

பன்றி, குரங்கு, மான், நாய், காட்டுப்பசு, மறி, முள்ளம்பன்றி, நரி, ஏறு ஆகிய விலங்குகளும் பேராந்தை, அன்றில் வானம்பாடி பறவைகளும், வண்டு, பாம்பு, மீன், முதலை போன்ற உயிரினங்களும் கபிலர் பாடல்களில் குறிஞ்சித்திணையில் இடம் பெறுகின்றன.

## முல்லை நில உயிரினங்கள்

உடும்பு, ஈயல் ஆகிய உயிரினங்கள் முல்லைத்திணைப் பாடல்களில் இடம்பெறுகின்றன.

## நெய்தல் நில உயிரினங்கள்

யானை, நண்டு, மீன் ஆகியன நெய்தல் திணைப்பாடல்களில் இடம் பெறுகின்றன.

மேற்கூறியவை அனைத்தும் நம்பியகப் பொருளில் குறிக்கப்படாததும், ஒரு திணைக்குரியன மற்றொரு திணையில் இடம் பெற்றதும் ஆகும்

“எந்நில மருங்கிற் பூவும் புள்ளும்
அந்நில பொழுதோடு வாரா வாயினும்
வந்த நிலத்தின் பயத்த வாகும்” (தொ.பொருள்.21)

என்ற தொல்காப்பியர் கருத்திற்கேற்ப மேற்கூறப்பட்ட உயிரினங்கள் வந்த நிலத்தின் கருப்பொருளாகவே கொள்ளப்பெறும். மேலும் விலங்குகள், பறவைகள் ஆகியன இடம் பெயரத்தக்கன. ஆகையால் ஒரு திணைக்குரிய உயிரினங்கள் பிற திணைகளில் இடம் பெறுகின்றன. சில பாடல்களில் உவமைக்காகவும் மாறி வருவதுண்டு.

இவ்வகையில் கபிலர் பாடல்களில் இடம் பெறும் கருப்பொருள்களாகிய உயிரினங்கள் திணை சாராமல் வேறொரு நிலத்தில் மயங்கிவரும் மயக்கத்தையும் இப்பகுதி ஆராய்கிறது.

குறிஞ்சி நிலமாகிய மலைப்பகுதியில் உள்ள வேங்கைப் பூவினை மானினங்களின் கூட்டங்கள் மேய்ந்து மகிழும் கானக நாட்டின் தலைவன். இக்கருத்தமைந்த பாடல் வரிகள் பின்வருமாறு.

"பெருவரை வேங்கைப் பொன்மருள் நறுவீ

மான் இனப் பெரும் கிளை மேயல் ஆரும்" (ஐ.கு.நூ–217)

என்ற குறிஞ்சித் திணைப்பாடலில் முல்லை நிலத்திற்குரிய மான் இடம் பெற்றுள்ளதை இப்பாடல் வரி உணர்த்துகிறது. குறிஞ்சிக் கலியிலும் மான் பற்றிய செய்தி இடம் பெறுகிறது.

"வருடைமான் குழவிய வளமலை நாடனைத்

தெருளத் தெரி இழாய் – – – – – –" (குறி.கலி. 43)

என்ற வரிகளில் அகன்ற மலைப் பாறையின் மேல் இருக்கின்ற கருங்குரங்கைக் கண்டு அஞ்சி வருடைமானின் குட்டி மலைச்சரிவெல்லாம் ஓடியமை எடுத்துக் காட்டப்படுகிறது. இப்பாடல் பகுதி குறிஞ்சித் திணையில் மான் விலங்கு குறிப்பிடப்பட்டுள்ளதை உணர்த்துகிறது. இது போன்று சில பாடல்களில் உவமைக்காகவும் திணைக்குரிய விலங்கு மாறி வருவதும் உண்டு. உதாரணமாக,

"நுண்பொறி மான்செவி போல், வெதிர்முளைக்

கண்பொதி பாளை கழன்று உகும் பண்பிற்றே" (குறி.கலி. 43)

என்ற பாடல் வரியின் மூலம் அறியலாம்.

குறிஞ்சி நிலத்திற்குரிய விலங்குகளுள் ஒன்று யானை. உவமையின் பொருட்டு நெய்தல் திணைப் பாடலில் யானை இடம் பெற்றுள்ளது.

"களிற்றுச்செவி அன்ன பாசடை மயக்கி
பனிக்கழி துழவும் பானாள், தனித்து ஓர்" (குறுந். 246)

என்ற பாடல் பகுதியில் நெய்தல் நிலத்தில் உள்ள நெய்தலின் இலைகள் யானைக் கன்றின் செவியைப் போல உள்ளதாக உணர்த்துகிறது. இங்கு உவமை காரணமாக யானை நெய்தல் திணைப் பாடலில் இடம் பெறுகிறது.

இவற்றினின்றும் கபிலர் பாடல்களில் விலங்குகள் அந்நிலத்தொடும் பொழுதொடும் சில இடங்களில் வரவில்லையாயினும் வந்த நிலத்தின் பொருளாகக் கூறப்படுவதை அறிய முடிகிறது. இவ்வாறு வருவன திணை மயக்கம் அல்ல என்று இளம்பூரணர் கூறுகிறார்.

### 3.1.2. உவமை அடிப்படையில் உயிரினங்கள்

சங்கப்பாடல்கள் நிலப்பின்னணியால் திணை வகுக்கப்படுபவை. பெரும்பாலும் அந்தந்த நிலத்துள்ள கருப்பொருள்களே அந்நிலத் தொடர்புடைய திணைப் பாடல்களில் இடம் பெறும். உவமை, உள்ளுறை, உள்ளுறையிலொன்றாகிய உள்ளுறையுவமை, இறைச்சி எல்லாமே அவ்வத்திணையில் அதனதன் நிலத்திற்கும் பொழுதிற்குரிய கருப்பொருள்களாலேயே அமையும். இவ்வாறு வரும் இவை அடையாய், உவமையாய்ப் பாடலில் இடம் பெறும். இவ்வாறு வருவன வெறும் இயற்கை வருணனைகளாக மட்டுமல்லாமல், அவ்வப் பாடலில் கூறப்படும்

உரிப்பொருளுக்கு ஏதேனும் ஒருவகையில் உதவுகின்றன. உவமையாக நின்று பாட்டின் பொருளைத் தெளிவுறச் செய்கின்றன. ஏதேனும் ஓர் உள்ளுறையாய் நின்று பாட்டின் பொருளுக்கு இயைபுடைய மற்றொரு குறிப்புப் பொருளைத் தருகின்றன. அங்ஙனம் பொருள் தரும் போது முற்றிலும் உவமை வடிவமாக நின்றும் ஒன்றுக்கு ஒன்று என உவமிக்கப்பட்டு, உட்பொருளைத் தந்து பாட்டுப் பொருள் நிறைவுறவும் உதவுகின்றன. பாடலில் இயற்கையின் செயலால் நடைபெறும் சிற்றுயிர்களின் அன்புச் செயலைக் குறித்து, அப்பாடலில் வரும் மக்களின் உரிப்பொருளுக்குத் துணையாக, மனிதர்களின் உணர்ச்சியைத் தூண்டுவனவாக அமைகின்றன.

இங்ஙனம் இயற்கை நிகழ்ச்சிகளை மனித உணர்வோடு இயைத்துப் பேசுகின்ற இடங்கள் பல கபிலர் பாடல்களில் காணப்படுகின்றன. மனிதர்களுக்குப் பின்னணியாகவும் மனித வாழ்க்கைக்கு, மனித உள்ளுணர்வுகளுக்குப் பின்னணியாகவும் இயற்கை விளங்குகிறது. இயற்கை வருணனையோடு இணைந்த உயிரினங்களை உவமப் பொருளில் கையாள்வதையும், உள்ளுறை, இறைச்சிப் பொருளில் கையாள்வதையும்,

1. உவமையில் உயிரினங்கள்
2. உள்ளுறைப் பொருளில் உயிரினங்கள்
3. இறைச்சிப் பொருளில் உயிரினங்கள்

என மூன்று பிரிவாகப் பிரித்து விளக்கப் பெறுகின்றது.

### 3.1.2.1. உவமையில் உயிரினங்கள்

உவமப் பொருளில் உயிரினங்களைக் கையாள்வதை விலங்குகள், பறவைகள், பிற உயிரினங்கள் என வகைப்படுத்தி ஆராய்ந்தறியலாம்.

### 3.1.2.1.1. விலங்குகள்

கபிலரது பாடல்களில் விலங்கினங்கள் உவமைக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவை வருமாறு.

1. கரடி
2. காட்டுப்பூனை
3. குதிரை
4. குரங்கு
5. நாய்
6. காளை
7. பன்றி
8. புலி
9. மான்
10. யானை

**1. கரடி**

**வினை உவமம்**

தலைவன் வரும் வழியின் துன்பத்தைக் கூறும் போது பாம்பு உறைகின்றதும் ஈரமான துளையுடையதுமான புற்றினை மேகம் சூழுமாறு போலச் சூழ்ந்து இரை தேடும் கரடியினம் அகழ்ந்து பெயர்க்கும்.

"------------அரவின்

ஈர்அளைப் புற்றம், கார்என முற்றி,

இரைதேர் எண்கினம் அகழும்" (நற். 336)

என கரடி சுற்றத்துடன் இரைதேடும் தன்மை உவமிக்கப்படும் பொருளாகவும், மேகம் சூழ்வது உவமையாகவும் பயன்படுத்தப்பட்டு உள்ளன.

## 2. காட்டுப்பூனை

### மெய் உவமம்

மரபாகி உவமையாகி வழங்கிய ஒன்றைப் பொருளாக்கிப் பொருளை அதற்கு உவமையாக மாற்றியமைக்கும் பாங்கும் இலக்கிய ஆசிரியரிடம் பொருந்துவதுண்டு. கபிலரும் சில காட்சிகளை அமைக்கும் போது இவ்வுவமை மாற்றத்தைத் தருகின்றார்.

"பிள்ளை வெருகின் முள்ளெயிறு புரையப்

பாசில் முல்லை முகைக்கும்" (புற.நா.117)

புறநானூற்றில் வேள் பாரியது நாட்டில் மலர்ந்துள்ள முல்லை மலரைச் சிறப்பிக்கக் காட்டுப்பூனையின் கூரிய பல் உவமையாக்கப்பட்டுள்ளது. இக்காட்சியில் மலராகிய மரபு உவமை பொருளாகவும், பூனையின் பல் ஆகிய பொருள் உவமையாகியும் இடம்பெறுகின்றன. இவ்வாறு மறுதலையாகத் தரும் நிலை சூழலுடன் பொருந்தும் வண்ணம் அமைப்பது கபிலரின் தனிச்சிறப்பாகும்.

## 3. குதிரை

### வினை உவமம்

குதிரையின் விரைவுத்தன்மை மூங்கில்கள் அசைவதற்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

“பலவில் சேர்ந்த பழம்ஆர் இனக்கலை
சிலைவிற் கானவன் செந்தொடை வெரீஇ,
செருஉறு குதிரையின் பொங்கி, சாரல்
இருவெதிர் நீடுஅமை தயங்கப் பாயும்” (குறுந்.385)

பலாமரத்தில் உள்ள கருங்குரங்குகள், குறவன் வில்லிலிருந்து புறப்பட்டு வரும் அம்பிற்கு அஞ்சி மலைச்சாரலில் வளர்ந்துள்ள பெரிய மூங்கில்கள் போர் உற்ற குதிரையைப் போல உயர எழுந்து அசையுமாறு பாயும் என விளக்க உவமையாகி விரைந்த செயற்பாட்டினை உணர்த்துகின்றன. இதில் குதிரை போல் மூங்கில், மூங்கில் போல் குரங்குகள் என உவமைக்கு உவமை அமைந்துள்ளது. குரங்குகள் குதிரை, மூங்கில் போல் பாய்கின்றன என்பது அறியத்தக்கது.

### மெய் உவமம்

குதிரையின் தலைக்கு அந்தணச் சிறார்களின் குடுமித் தலை உவமையாக அமைந்துள்ளதை,

“பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற–
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே” (ஐ.கு.நூ.202)

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

## 4. குரங்கு

### மெய் உவமம்

அவரைக் காய்களை வயிறார உண்ட பெண் குரங்கு, வணிகர் கையாளும் பையைப் போலப் பருத்துக் காணப்படும் எனக் குரங்கின் தோற்றம் உவமிக்கப்படு பொருளாக அமைந்துள்ளது.

"அவரை அருந்த மந்தி பகர்வர்
பக்கின் தோன்றும் நாடன் வேண்டின்" (ஐ.கு.நூ.271)

### உரு உவமம்

மலைப்பக்கத்தில் மைபட்டது போன்ற கரிய முகத்தையுடைய ஆண் குரங்கு மரக்கொம்பின் வலியறியாமல் பாய்ந்து மரக்கொம்பு முறிய கீழே விழுந்தது.

"மைப்பட்டன்ன மாமுக முசுக்கலை
ஆற்றப் பாயாத் தப்பல் ஏற்ற" (குறுந்.121)

என்ற வரிகளில் குரங்கின் கரிய முகத்திற்கு கரிய மை உவமையாக அமைந்துள்ளது.

### வினை உவமம்

கரிய விரல்களைக் கொண்ட மந்தியின் இயல்பாகவே ஏறுதல் தொழிலில் வன்மை பெற்ற வலியகுட்டி, பெரிய மூங்கிலின் ஈரமுடைய கோலின் மேல் ஏறி இருந்து, காண்பார்க்கு அது சிறிய கோலைக் கொண்டு வானத்தே ஊறும் மதியை அடிப்பது போலத் தோன்றும்.

"கருவிரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு
இருவெதிர் ஈர்ங் கழைஏறி, சிறுகோல்
மதிபுடைப்பது போல் தோன்றும் நாட" (ஐ.கு.நூ.280)

என்ற வரிகளில் ஐய உவமை அமைந்துள்ளது.

**5. நாய்**

**வினை உவமம்**

தலைவியின் தந்தை புலிக்கூட்டத்தைப் போன்ற நாய்கள் தொடர்ந்து வர வேட்டையாடுதல் தொழிலைச் செய்பவன்

"புலிக்கணத் தன்ன நாய் தொடர் விட்டு" (அக.நா.158)

என நாய்கள் உவமிக்கப்படும் பொருளாகவும் புலிகள் உவமையாகவும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**உரு உவமம்**

வெகுளும் இயல்புடையதும், வாளின் முனை போன்ற கூரிய பற்களையும் வளைந்த நகத்தினையும் உடையதுமான நாய்கள் என்பதில் வாளின் முனை பல், நகம் இரண்டிற்கும் உவமையாக்கப்பட்டுள்ளது.

"முளைவாள் எயிற்ற வள்ளுகிர் ஞமலி" (குறி.பா.வ. 131)

என இரண்டு பொருளுக்கு ஒரு உவமை கூறியுள்ளது சிறப்பாகும்.

**6. காளை**

**வினை உவமம்**

அயலிடத்துப் பசுவினைக் கண்ட ஏறு போல் தலைவன் தலைவியை நோக்கி வந்தான்.

"ஆகாண் விடையின் அணிபெற வந்தெம்" (குறி.பா.வ.136)

எனக் காளையும் பசுவும் தலைவன் தலைவிக்கு உவமையாகக் கூறப்பட்டுள்ளன. இங்கு ஒப்பிணை உவமை அமைந்துள்ளது. தொடர்புபடுத்தக் கூடிய வேறுபட்ட இரு பொருட்கள் தொடர்பும் உறவுமுடைய இருவருக்கு உவமையாகும் போது இவ்வகை உருவாகின்றது. கபிலரின் உவமை ஆட்சி பொருத்தமுடையதாக அமைந்துள்ளது.

## மெய் உவமம்

தலைவனின் வலிமையுடைய தோளிடத்துக் கிடக்கின்ற மாலையானது காளையின் திமிலின் கண் கிடக்கும் கயிற்றினைப் போன்று இருந்தது.

'ஏந்துகுவவு மொய்ம்பின் பூச்சோர் மாலை,

ஏற்றுஇமிற் கயிற்றின், எழில்வந்து துயல்வர" (அக.நா. 248)

எனத் தலைவன் தோளுக்குக் காளையின் திமிலும் அவன் மார்பில் கிடந்தசையும் மாலைக்குத் திமிலின் மேல் கிடக்கும் கயிறுகளும் ஒப்பிணை உவமைகளாக அமைந்துள்ளன.

## 7. பன்றி

## வினை உவமம்

வெள்ளத்தினைத் தறுகண்மையுடைய பன்றி அஞ்சாது கடந்து செல்வது போலத் தலைவன் அச்சம் தரும் அரிய நீர்த்துறையினைத் தாண்டி வருவான்.

"கடுங்கண் பன்றியின் நடுங்காது துணிந்து,

நாமஅருந் துறைப் பேர்தந்து, யாமத்து

ஈங்கும் வருபவோ ?– – – – – – –" (அக.நா.18)

எனத் தலைவனின் அச்சமின்மைக்குப் பன்றியின் செயல் உவமையாக்கப்பட்டுள்ளது.

## மெய் உவமம்

இளம்பிறை போன்ற கொம்பினைக் கொண்ட ஆண் பன்றி.

"இளம்பிறை அன்ன கோட்ட கேழல்" (ஐ.கு.நூ. 264)

எனப் பன்றியின் சினைப் பொருளுக்கு இளம்பிறை உவமையாக்கப்பட்டு உள்ளது.

## உரு உவமம்

களங்கனி போன்ற கரிய நிறத்தையுடைய பெண் பன்றி.

"களங்கனி அன்ன பெண்பால் புணரும்" (ஐ.கு.நூ.264)

எனக் களங்கனியின் நிறம் பன்றிக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

தினைக்கதிரை, பொன்னுரை காண உதவும் கட்டளைக் கல்போலும் கருநிறம் கொண்ட பன்றி வயிறு நிரம்ப உண்ணும்.

"நன்பொன் அன்ன புனிறு தீர்ஏனல்

கட்டளை அன்ன கேழல் மாந்தும்" (ஐ.கு.நூ.263)

எனக் கட்டளைக்கல்லின் கரிய நிறம் பன்றிக்கு உவமையாக அமைந்து உள்ளது.

## 8. புலி

### வினை உவமம்

மழை பொழிதற்குத் திரண்டெழுந்த மேகம் முழங்கும் இயற்கை பற்றிய மரபு உண்மையை, புலி தான் கொல்லக் கருதிய யானை தப்பியமையால் சினம் மிக்கு எழுந்து மேகம் முழங்குவதுபோல் முழங்கும் என உவமிக்கிறார் கபிலர். இதனை,

"களிறுகோட் பிழைத்த கதம்சிறந்து எழுபுலி
எழுதரு மழையின் குழுமும்" (ஐ.கு.நூ.218)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

### மெய் உவமம்

கொடுங்கண்களையுடைய புலியின் பாதம் போல வாழைக் குலைகளிலே வளைந்த காய்கள் தொங்குகின்றன.

"கடுங்கண் உழுவை அடிபோல வாழைக்
கொடுங்காய் குலைதொறூஉம் தூங்கும் இடும்பையால்"
(குறி.கலி.43)

எனப் புலியின் பாதம் வாழைக்குலைக்கு உவமையாக அமைந்துள்ளது.

### உரு உவமம்

வேங்கை மரத்தினது கருமையான புறவிதழையுடைய பூக்கள் பாறையின் மீது பரந்து கிடப்பது பெரும்புலியினது வரியைக் கொண்ட முதுகை ஒத்திருக்கும்.

"அரும்பு அற மலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட்டு ஒள்வீ தாய துறுகல்
இரும்புலி வரிப்புறம் கடுக்கும்" (புற.நா.202)

என வேங்கைப் பூக்களின் நிறத்திற்குப் புலியின் நிறம் உவமையாக்கப்பட்டுள்ளது. வேங்கை மரத்தின் பூங்கொத்துகளைப் போன்ற தோற்றமுடையது புலி.

"வேங்கையஞ் சினைஎன விறற்புலி முற்றியும்" (குறி. கலி.46)

எனப் புலியின் நிறத்திற்கு வேங்கைப் பூக்களின் நிறம் உவமையாக்கப்பட்டுள்ளது.

## 9. மான்

### மெய் உவமம்

தலைவியின் கண்கள் மானின் கண்களைப் போலக் காண்போரை மயக்கும் அழகினை உடையது.

"மாதர்கொள் மான்நோக்கின் மடநல்லாய்–நிற்கண்டார்" (குறி.கலி.56)

என மானின் கண்கள் தலைவியின் கண்ணிற்கு உவமையாக அமைந்துள்ளது.

## 10. யானை

### வினை உவமம்

மேகங்கள் கீழ்த்திசைக் கடலிடத்து நீரை முகந்து கொண்டு செல்வது படைக்கலன்களையுடைய சேனையின் கண்ணே யானைகளின் அணிவகுப்புப் போன்று தோன்றியது.

"குணகடல் முகந்த கொள்ளை வானம்

பணைகெழு வேந்தர் பல்படைத் தானைத்

தோல்நிரைத் தனைய ஆகி, வலன்ஏர்பு" (அக.நா.278)

என இயற்கையின் இயல்புக் காட்சியைப் போர்ச் சாயலுடன் படைத்துள்ளார் கபிலர்.

## மெய் உவமம்

புலியைக் கொன்ற யானையின் காது முறம் போன்று அமைந்துள்ளது என்பதை,

"முறஞ்செவி வாரணம் முன்குளகு அருந்தி" (குறி.கலி.42)

"முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று" (குறி.கலி.52)

என்ற அடிகள் எடுத்துரைக்கின்றன.

யானைக்கன்றின் செவியைப் போல நெய்தலின் இலைகள் விளங்கும் என்பதை,

"களிற்றுச்செவி அன்ன பாசடை மயக்கி" (குறுந். 246)

என்ற அடியால் அறியலாம். அழகிய மலையில் வேங்கை மலர்கள் அழகாக மலர்ந்திருப்பது போல காட்டுயானை முகத்தில் புள்ளிகள் விளங்கும்.

"ஆம்இழி அணிமலை அலர்வேங்கைத் தகைபோல,

தேமூசு, நனைகவுள், திசைகாவல் கொளற்கு ஒத்த" (குறி.கலி.48)

தன் தலையிலும் உடலிலும் தானே புழுதியை வாரி இறைத்துக் கொள்ளும் அதன் உடலில் உள்ள புழுதி முற்றிலுமாகக் கழுவப் பெற்றமை போல, பெரு மழை பெய்து துறுகல்லின் மாசெல்லாம் அகன்றது.

"மாசறக் கழீஇய யானை போலப்

பெரும்பெயல் உழந்த இரும்பிணர்த் துறுகல்" (குறுந்.13)

என்ற அடிகள் யானையின் தோற்றம் மலையிலுள்ள துறுகல்லிற்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

"களிறு மென்று இட்ட கவளம் போல,

நறவுப் பிழிந்து இட்ட கோதுடைச் சிதறல்" (புற.நா.114)

என்ற அடிகளில் யானை மென்று போட்ட உணவினது சக்கையானது. மதுப்பிழிந்து போட்ட சக்கையிலிருந்து ஒழுகும் முற்றத்தையுடைய பறம்பு மலைக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

### 3.1.2.1.2. பறவையினங்கள்

கபிலரது பாடல்களில் பறவையினங்கள் சிலவும் உவமைக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன. அவை வருமாறு,

1. கிளி
2. நாரை
3. மயில்
4. வானம்பாடி
5. புறா

### 1. கிளி

### வினை உவமம்

வரையாது கொடுப்பவனின் வள்ளன்மை கருதிவரும் பரிசிலர் போலப் பலவாகிய சுற்றத்தோடு திணைப் பயிரை வந்து உண்ணும் பசிய கிளிகள் என்பதை,

"வரையோன் வண்மை போலப் பலவுடன்

கிளையோடு உண்ணும் வளைவாய்ப் பாசினம்" (நற்.376)

என்ற அடிகள் உணர்த்துகின்றன.

தலைவி பேசும் மொழி கிளி ஓசை போல் அமைந்துள்ளது எனப் பல இடங்களில் கூறப்பட்டுள்ளன.

"இசையின் இசையா இன்பாணித்தே

கிளி, 'அவள் விளி' என, விழல் ஒவாவே" (குறுந்.291)

"கொடிச்சி இன்குரல் கிளி செத்து, அடுக்கத்துப்

பைங்குரல் ஏனற்படற் தரும்கிளி எனக்" (ஐ.கு.நூ.289)

"ஏனல்அம் காவலர் ஆனாது ஆர்த்தொறும்,

கிளி விளி பயிற்றும் – – – – – – " (அக.நா.12)

என்ற பாடல் வரிகளில் தலைவியின் மொழிக்குக் கிளியோசை உவமையாக அமைந்துள்ளதை அறியலாம்.

## 2. நாரை

### மெய் உவமம்

மீனை அருந்துவதற்காக நாரையின் கூட்டம், குவிந்த வெள்ளிய மணல் மேட்டில் ஏறியிருப்பது, அரசர்களின் காலாட்படையின் கூட்டம் போல் விளங்கும்.

"நெய்த்தலைக் கொழுமீன் அருந்த, இனக்குருகு

குப்பை வெண்மணல் ஏறி, அரைசர்

ஒண்படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும் (நற்.291)

என்ற பாடல் வரிகளில் நாரையின் கூட்டத்திற்கு காலாட்படை உவமையாக்கப்பட்டுள்ளது.

**உரு உவமம்**

ஆரல்மீனின் வருகையை, உண்பதற்காகப் பார்த்திருக்கும், தினையின் அடியைப் போன்ற, சிறிய, பசிய கால்களையுடைய நாரை என்பதை,

"தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே" (குறுந்.25)

என்ற பாடல் வரிகள் எடுத்துரைக்கின்றன.

**3. மயில்**

**வினை உவமம்**

குறவனின் அன்பிற்குரிய இளமகளாகிய கொடிச்சி அழகிய மயில் போன்ற அசைந்த நடையை உடையவள்.

"அணிமயில் அன்ன அசைநடைக் கொடிச்சியை" (ஐ.கு.நூ.258)

என மயிலின் நடை உவமையாக்கப்பட்டுள்ளது.

தலைவி அச்சத்தால் நாணம் மறந்து விரைந்தோடி தலைவனை அணுகி தெய்வமேறின மயிலைப்போல நடுங்கி நின்றாள் என்பதை,

"சூருறு மஞ்ஞையின் நடுங்க வார்கோல்" (குறி.பா.வ.169)

என்ற அடி உணர்த்துகிறது.

தலைவன் இரவுக்குறியிடத்தே வரும் வழியின் துன்பத்தை எண்ணுந்தோறும் ஆற்றாது வலையிற்பட்ட மயில் போல தலைவி கலங்கி நிற்பாள்.

"வலைப்படு மஞ்ஞையின் நலஞ்செலச் சாஅய்
நினைத்தொறும் கலுழுமால் இவளே.." (குறி.பா.வ.250, 251)

என்ற வரிகளில் தலைவிக்கு வலையிற்பட்ட மயில் உவமை பொருளாக அமைந்துள்ளது.

பின்னல் அவிழ்ந்தமையால் பிரிந்தகன்ற கூந்தலையுடையவளாய், மலையினின்றும் இறங்கி வரும் மயிலைப் போன்று, தளர்நடை நடந்து தலைவி பரணில் இருந்து இறங்கி வந்தாள்.

"பின்னுவிடு நெறியின் கிளைஇய கூந்தலள்,
வரைஇழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி,
மிடைஊர்பு இழிய, கண்டனென், இவள்" (அக.நா.158)

என மயிலின் நடை தலைவியின் நடைக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

## மெய் உவமம்

தலைவியின் சாயல் மயிலைப் போன்று அமைந்துள்ளது என்பதை,

"தோகை மாட்சிய மடந்தை" (ஐ.கு.நூ.293)

என்ற வரி உணர்த்துகிறது.

## உவமை–பொருள் மாற்றம்

வேங்கை மரத்தின் பெரிய கிளையில் அமர்ந்துள்ள மயில் பெண் போலத் தோற்றமளிக்கும் என்பதை,

"விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை
பூக்கொய் மகளிரின் தோன்றும் நாட" (ஐ.கு.நூ.297)
"எரிமருள் வேங்கை இருந்த தோகை
இழைஅணி மடந்தையின் தோன்றும் நாட" (ஐ.கு.நூ.294)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

குறப்பெண்ணின் கூந்தலைப் போல மயில் தன் அழகிய தோகையை விரிக்கும்.

"கொடிச்சி கூந்தல் போலத் தோகை
அம்சிறை விரிக்கும் பெருங்கல் வெற்பன்" (ஐ.கு.நூ.300)

எனவும் கூறி உவமை–பொருள் மாற்றத்தைத் தருகின்றார் கபிலர். மரபாக உவமையாகி வழங்கிய ஒன்றைப் பொருளாக்கிப் பொருளை அதற்கு உவமையாக மாற்றி அமைத்துள்ளார். இக்காட்சிகளில் மயிலாகிய மரபுவமை, பொருளாகவும், பெண் ஆகிய பொருள் உவமையாகியும் இடம்பெறுகின்றன.

ஒரு பொருளுக்கு உவமை கூறுமிடத்து உவமையொன்றால் அறுதியிட்டுக் கூறமுடியாதவாறு பொருளை மேலும் சிறப்படையச் செய்கிறார். தலைவியின் சாயலைப் போன்ற சாயலைத்தான் பெறுவது மயிலுக்கும் அரியதாகும் என்பதை,

"தன்போல் சாயல் மஞ்ஞைக்கும் அரிதே" (ஐ.கு.நூ.299)

என்கிறார். பெண்ணின் சாயலுக்கு மயில் உவமையாக கூறுவது இயல்பு. மயிலும் இத்தகையச் சாயலைப் பெறுவது அரிது எனப் பொருளை மேலும் சிறப்பித்துள்ளார்.

### 4. வானம்பாடி

#### வினை உவமம்

மழைத்துளி வேண்டி வானை நோக்கிப் பாடிக் கொண்டிருக்கும் வானம்பாடி போல, தலைவி தலைவனின் வரவை எதிர்பார்த்துக் காத்துக் கிடந்தாள்.

"துளிநசை வேட்கையால் மிசைபாடும் புள்ளின் தன்
அளிநசை ஆர்வுற்ற அன்பினேன் யானாக" (குறி.கலி.46)

என வானம்பாடியின் செயல் தலைவியின் செயலுக்கு உவமையாகி ஒப்பிணை உவமை அமைந்துள்ளது. மழைத்துளி தலைவனுக்கும், மழையை விரும்பும் வானம்பாடி தலைவனை விரும்பும் தலைவிக்கும் உவமையாக அமைந்துள்ளது.

### 5. புறா

#### மெய் உவமம்

தலைவியின் மடப்பம் அமைந்த பேரெழில் புறாப் போன்று உள்ளது என்பதை,

'தூதுணம் புறவுஎனத் துதைந்த நின்எழில் நலம்' (குறி.கலி.56)

என்ற வரி எடுத்துரைக்கிறது.

### 3.1.2.1.3. பிற உயிரினங்கள்

விலங்குகள், பறவைகள் தவிர பிற உயிரினங்களான பூச்சியினம், நீர் வாழ்வன ஆகியவையும் கபிலர் பாடல்களில் உவமையில் இடம் பெற்றுள்ளன. அவை வருமாறு :

1. வண்டு
2. மீன்
3. பாம்பு
4. நண்டு

## 1. வண்டு

### வினை உவமம்

யாழ் வல்லோன் வருடிய நரம்பு போலே இசை பாடும் பெடை வண்டு.

"கைகவர் நரம்பின் இம்மென இமிரும்

மாதர் வண்டொடு சுரும்பு நயந் திறுத்த" (குறி.பா.வ.147,148)

என யாழின் இசை வண்டின் இசைக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

தொடர்புபடுத்தக்கூடிய வேறுபட்ட இருபொருட்கள் தொடர்பும் உறவுமுடைய இருவருக்கு உவமையாக ஒப்பிணையாக அமையும்.

காந்தளின் தேனை உண்ணும் வண்டினைப் போல தலைவன் தலைவியின் கவினைக் கவர்ந்து கொண்டவன்.

"நறுந்தண் சிலம்பின் நாறுகுலைக் காந்தள்

கொங்கு உண் வண்டின் பெயர்ந்து புறமாறி, நின்

வன்புடை விறற் கவின் கொண்ட

அன்பிலாளன் வந்தனன், இனியே" (ஐ.கு.நூ.226)

என வண்டின் செயல் தலைவனின் செயலுக்கு உவமையாக்கப்பட்டு உள்ளது. தலைவி மலராகவும், மலரின் தேனை வண்டு சுவைத்தப்பின் மலரை விட்டு விலகுவது தலைவன் தலைவியை விட்டு விலகுதலாகிய பின்னிலையும் இவ்வுவமையிணையில் அமைந்திருக்கின்றன.

### உரு உவமம்

பெண்கள் கையிலே கடகம் பூட்டியிருப்பது போல காந்தள் முகையின் மேல் தும்பி அமர்ந்து, அது மலர்வதை நோக்கிக் காத்திருக்கிறது என்பதை,

"தகையவர் கைச்செறிந்த தாள்போலக் காந்தள்
முகையின்மேல் தும்பி இருக்கும்" (குறி.கலி.43)

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

'கட்டளை அன்ன மணி நிறத்தும்பி'

என்ற பாடல் வரி தும்பியின் ஆழ்ந்த கருநிறத்தையும், இடையிடையே அதன் சிறகுகளில் உள்ள பொன்னிற கோடுகளையும் குறிக்கின்றன.

### 2. மீன்

### வினை உவமம்

மீனினம் உண்டு உமிழும் நீர் போல, இவள் கண்களிலிருந்து இடைவிடாது நீரும் வழிந்து கொண்டே இருக்கின்றது.

"கயல்உமிழ் நீர்போலக் கண்பனி கலுழாக்கால்" (குறி.கலி.53)

என்ற வரியில் மீன் உமிழும் நீர் தலைவியின் கண்ணீருக்கு உவமையாக்கப்பட்டுள்ளது.

## 3. பாம்பு

### மெய் உவமம்

தலைவியின் கூந்தலில் சூடியிருக்கும் பூவோ நுண்மையான நூலால் கட்டப்பட்டுக் கருவழலைப் பாம்பின் மீது விளங்கும் ஆரல்மீனின் வடிவினதான வெண்கோட்டைப் போல விளங்குகிறது.

"விரிநுண்ணூல் சுற்றிய ஈரிதழ் அலரி
அரவுக்கண் அணிஉறழ் ஆரல்மீன் தகையொப்ப" (குறி.கலி.64)

இங்கு ஒரு பொருளுக்கு உவமை கூறுமிடத்து, ஒரு உவமை கூறி அமைந்துவிடாது உவமைப் பொருளுக்கும் உவமையொன்று அமைத்துக் கூறியுள்ளார். பூவிற்குப் பாம்பின் மேல் உள்ள வெண்கோடு உவமை ஆக்கப்பட்டுள்ளது. வெண்கோட்டிற்கு ஆரல்மீன் உவமையாக்கப்பட்டு உள்ளது.

## 4. நண்டு

### மெய் உவமம்

மணற்குவியலில் நொச்சியின் கரிய அரும்பு போன்ற கண்ணையுடைய நண்டின் பெரிய இனமாகிய கூட்டம், மகளிர் காயவைத்த தினையைத் துழாவும் கைவிரல் போல் நறுமணம் கமழும் ஞாழல் மலர்களைக் காலால் வரித்துக் கோலம் செய்யும்.

"நொச்சி மாஅரும்பு அன்ன கண்ண
எக்கர் ஞெண்டின் இருங்கிளைத் தொழுதி,

இலங்கு எயிற்று ஏளர் இன்நகை மகளிர்
உணங்குதினை துழவும் கைபோல், ஞாழல்
மணம்கமழ் நறுவீ வரிக்கும் துறைவன்" (நற்.267)

என நண்டின் கால்களுக்கு பெண்களின் கைவிரல் உவமையாக அமைந்துள்ளது.

## 3.1.2.2. உள்ளுறைப் பொருளில் உயிரினங்கள்

புலவன் இலக்கியத்தை அளிக்கும் முறையிலுள்ள பல கூறுகள் உத்தியாகக் கருதத்தக்கன. வருணனை, கற்பனை போன்றவற்றைக் கூறலாம். நோக்கம் கருதியும், பயன் எதிர்பார்த்தும், நயம் விரும்பியும், நிறைவு விரும்பியும் இவை கையாளப்படும் போது உத்தியாகக் கொண்டு ஆய்வதற்குத் தகுதி பெறுகின்றன.

பின்புல வருணனை உத்திக்கு இடனாதலை அகப்பாடல்கள் காட்டுகின்றன. கால இடக்குறிப்பு தருவதோடு உள்ளுறை, இறைச்சிக்கும் இது களனாகிறது. கபிலர் பாடல்களில் இயற்கையைப் பற்றிய வருணனைகளில் உயிரினங்களின் அதிகாரத்தன்மை காணப்படும். அதன்மூலம் தலைவனது தவறு உணர்த்தப் பெறும். உள்ளுறையில் அமைந்த உயிரினங்கள் பற்றிய செய்தியை,

1. விலங்கினங்கள்
2. பறவையினங்கள்
3. பிற உயிரினங்கள்

என மூன்றாகப் பகுத்து ஆராயலாம்.

### 3.1.2.2.1. விலங்கினங்கள்

கபிலர் பாடல்களில் உள்ளுறையாக அமையும் விலங்கினங்களை,

1. ஆடு
2. குரங்கு
3. பசுக்கன்று
4. பன்றி
5. புலி
6. மான்
7. யானை

என்ற அடிப்படைகளில் ஆராயலாம்.

### 1. ஆடு

### ஆட்டின் காதல்

தன் காதலனாகிய நீண்ட கொம்புடைய வலிய ஆட்டுக்கடாய், மறியிடம் வருவதைத் தவிர்த்து பிற ஆடுகளை விரும்பி போய்விடுகிறது. நிறம் மிகுந்த மயிர்த்தொகுதியையுடைய மறி, அது தன்னை நாடி வரும் என்ற ஆசையினால் உயிர் தங்கியிருக்கும் என்றது தலைவன் வரவுகளில் குறித்த வண்ணமே வாராது மாறி நீடித்தாலும் தலைவனைக் காணலாம் என்னும் ஆசையாலே தலைவி உயிர் வாழ்கிறாள் என்னும் உள்ளுறையை உணர்த்துகிறது. தலைவியின் காதலுணர்வைக் கூற மறியின் காதல் உணர்வு எடுத்துரைக்கப்படுகிறது.

"வார் கோட்டு வயத்தகர் வாராது மாறினும்,
குரு மயிர்ப் புருவை நசையின் அல்கும்
மாஅல் அருவித் தண் பெருஞ் சிலம்ப!

நீ இவண் வரூஉம் காலை,

மேவரும் மாதோ, இவள் நலனே–தெய்யோ" (ஐ.கு.நூ.238)

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

## 2. குரங்கு

கனி வகைகளும் பிறவும் மிகுதியாகக் கிடைக்கும் மலைப்பக்கத்தே வாழும் குரங்குகளை ஐங்குறுநூற்றில் 'குரக்குப் பத்து' எனும் தலைப்பில் கபிலர் பத்துப் பாடல்களைப் பாடியுள்ளார். பத்துப் பாடல்களும் உள்ளுறைப் பொருள் கொண்டு அமைந்துள்ளன.

### குரங்கின் உணவு

ஐங்குறுநூற்றில் குரங்கின் உணவு பற்றிய செய்தியை அடிப்படையாகக் கொண்டு உள்ளுறைப் பொருள் அமைகின்றது.

"அவரை அருந்த மந்தி பகர்வர்

பக்கின் தோன்றும் நாடன் வேண்டின்" (ஐ.கு.நூ. 271)

அவரைக் காய்களை வயிறார உண்ட பெண்குரங்கு, வணிகர் பையைப் போலப் பருத்துக் காணப்படும் மலைநாடன் என்றது தலைவனுடைய செல்வத்தை விதந்து கூறியது.

தலைவியின் தமர் தலைவனது கேண்மைச் சிறப்பை அறியாது ஏனோர் போலக் கருதி மகட்கொடையை மறுத்தனர் என உள்ளுறையாக அமைகிறது.

"கருவிரல் மந்திக் கல்லா வன் பறழ்

அருவரைத் தீம் தேன் எடுப்பி, அயலது

உருகெழு நெடுஞ் சினைப் பாயும் நாடன்" (ஐ.கு.நூ.272)

கரிய விரல்களைக் கொண்ட மந்தியினது இளங்குட்டி, தேன் பருகும் விருப்பம் இருப்பினும் அதனை எடுத்துண்ணும் வழி தெரியாத மடமையுடையதாய், ஆற்றலுடையதாயினும் போதிய அறிவின்றித் தேனிறாலில் உள்ள ஈக்களை ஒதுக்கி உண்ண அறியாது ஈக்களை எழுப்பி விட்டுப் பின்னர் அவற்றுக்கு அஞ்சிப் பின்னும் கேடு தரும் உயர்ந்த கிளை மேல் பாயும்.

தலைவன் இரவில் வரும் துன்பம் அறியாது குறி பிழைத்து, அல்ல குறிப்பட்டு, தாய் முதலியோர்க்குத் தன் வரவை அறிவித்துப் பின் அவர் ஆரவாரம் கேட்டு அச்சம் மிகுந்த காட்டின் வழியே ஓடினான் என உள்ளுறைப் பொருள் அமைகின்றது.

மந்தி விலக்குவது இரவுக்குறி விலக்கிய குறிப்பாகவும், மந்தியின் குட்டி தலைவனாகவும், தேனீ சுற்றத்தாராகவும், குட்டி உயர்ந்த கிளையில் பாய்ந்தது தலைவன் பெயர்ந்து சென்றதாகவும் உள்ளுறை அமைகிறது.

"அத்தச் செயலைத் துப்பு உறழ் ஒண் தளிர்

புண் தலை மந்தி வன்பறழ் ஆரும்

நல் மலை நாட! நீ செலின்" (ஐ.கு.நூ.273)

மென்மையான தலையைக் கொண்ட மந்தியின் வலிய குட்டி வழிக்கண்ணுள்ள அசோக மரத்தின் பவழம் போன்ற ஒளிமிக்க

தளிர்களை விரும்பியுண்ணும் மலைநாட்டிற்குத் தலைவன். மந்தி அசோகந்தளிர் முற்றி நிறம்மாறும் முன்பே உண்டாற் போல, தலைவனும் தலைவியைப் பருவத்தே மணந்து வாழ வேண்டும் என்ற குறிப்புப் பொருள் அமைகின்றது.

"கல் இவர் இற்றி புல்லுவன ஏறிக்
குளவி மேய்ந்த மந்தி துணையொடு
வரை மிசை உகளும் நாட ! நீ வரின்" (ஐ.கு.நூ.279)

மலையினைத் தன் வேரால் பற்றிக் கொண்டு வளரும் இற்றி மரத்தைப் பற்றிக் கொண்டு மந்தியும், கடுவனும் காட்டு மல்லிகையின் தளிர்களை மேய்ந்து மலை மீது துள்ளிக் குதித்து விளையாடுவதற்கு இடமான நாட்டின் தலைவன்.

கல்போன்ற கனிவற்ற சிந்தையுடைய சுற்றத்தாரைப் பற்றுக் கோடாகக் கொண்டு வாழும் தோழியை உறுதுணையாகக் கொண்டு தலைவனும் தலைவியும் ஒருவரையொருவர் தலைப்பட்டு இன்புற்றிருந்தனர். இனி அவர்கள் மணந்து கொண்டு தலைவன் இல்லத்தே சென்று நல்லற வாழ்க்கை வாழ வேண்டும் என்னும் கருத்து உள்ளுறைப் பொருளாகிறது.

## குரங்கின் அச்சம்

"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்,
ஒண்கேழ் வயப்புலி குழுமலின், விரைந்து உடன்
குன்று உயர் அடுக்கம் கொள்ளும் நாடன்" (ஐ.கு.நூ.274)

மந்தியின் கணவனான, இயல்பாகவே குரங்குச் சாதிக்குரிய திறன்கள் யாவும் படைத்த ஆண்குரங்கு, ஒள்ளிய நிறம் படைத்த வலிமையுடைய புலி முழங்குவதால் மிக விரைந்து உயர்ந்த மலைப்பக்கத்திற்குத் தப்பிச் செல்லுதற்கு இடனான மலைக்குத் தலைவன் என்றது.

வேற்று வரைவு வரும் எனத் தலைவி படைத்து மொழிந்ததைக் கேட்டு அஞ்சி தலைவன் திருமணத்திற்கான பொருளீட்டச் சென்றான் என்பது உள்ளுறைப் பொருளாகிறது. புலியால் ஏற இயலாத உயரத்தினைக் குரங்கு ஏறும்.

## குரங்கின் விளையாட்டு

"குரங்கின் தலைவன் குரு மயிர்க் கடுவன்
சூரல்அம் சிறுகோல் கொண்டு, வியல் அறை
மாரி மொக்குள் புடைக்கும் நாட" (ஐ.கு.நூ.275)

குரங்கின் தலைவனாகிய கடுவன், சிறிய பிரப்பங்கோலைக் கையில் எடுத்துக் கொண்டு அகன்ற பாறையில் மழையாலுண்டான மொக்குகளை அடிக்கின்ற நாட்டிற்குத் தலைவன்.

தாமே நொடிப்பொழுதில் அழிந்தொழியும் மொக்குகளைக் குரங்கு கோல் கொண்டு புடைத்து மிக விரைவில் அழித்தது போன்று தலைவனை விரும்பிய தலைவியின் நலன் வரையாமலே அழிகின்றது. இதனை தலைவன் இடையிட்ட ஒழுக்கத்தாலே மேலும் அழிக்கின்றான் என்ற உள்ளுறைப் பொருளை உணர்த்துகிறது.

## குரங்கின் காதல்

"குறவர் முன்றில் மா தீண்டு துறுகல்
கல்லா மந்தி கடுவனோடு உகளும்" (ஐ.கு.நூ.277)

குறவர்கள் முற்றத்தில் விலங்குகள் உராய்ந்து உடல் திணவைப் போக்கிக் கொள்ள உதவுமாறு கிடக்கும் கல்லின் மேல் மந்தி, தன் காதலனாகிய கணவனோடு துள்ளித் திரியும் மலைக்குத் தலைவன்.

கல்லாமையை உடைய மந்தி கூடக் குறவர்க்கு அஞ்சாது அவர் முற்றத்திலே தன் கடுவனோடு பிரிவில்லாது துள்ளி விளையாடுகின்ற நாடனாகியும் இதற்குத் தக ஒழுகாமல் தலைவியை வருத்துகின்றான் என உள்ளுறைப் பொருள் உணர்த்துகிறது.

"கல்லாக் கடுவன் கணம்மலி சுற்றத்து
மெல்விரல் மந்தி குறைகூறும் செம்மற்றே
தொல்எழில் தோய்ந்தார் தொலையின், அவரினும்
அல்லற் படுவான் மலை" (கு.கலி.40)

கல்லாத கடுவன், மந்தியின் திரண்ட சுற்றத்தாரிடத்தே சென்று, மெல்லிய விரலையுடைய மந்தியை எனக்குத் தரவேண்டும் என்று தன் குறையைச் சொல்லும் தன்மையினை உடையது.

நம் தெய்வ வழிபாட்டால் களவொழுக்கம் ஒழிந்து நம்மை வரைந்து கொள்ளத் துணிந்து, நம் சுற்றத்தாரிடத்தே தன் குறை கூறுவன் என்பது உள்ளுறையாகும்.

**3. பசுக்கன்று**

"சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா
அலங்கு குலைக் காந்தள் தீண்டி, தாது உக,
கன்று தாய் மருளும் குன்ற நாடன்" (நற்.359)

சிறிய கொம்பினையுடைய பசு மலையில் மேய்ந்து கொண்டிருந்தது. அசையும் குலையுடைய காந்தள் மலரை அது தீண்டியதால் காந்தளின் தாது உதிர்ந்தது. அத்தாதினைத் தன் மேல் உதிர்த்தது தன் தாய் என்று அறியாமல் அப்பசுவின் கன்று மயங்கியது.

தலைவன் தழையுடை கொண்டு வருவதைக் கண்டு நாணம் மிகுதியாக மயங்கினாள் என உள்ளுறை உணர்த்துகிறது.

**4. பன்றி**

**பன்றியின் உணவு**

பன்றியின் உணவு பற்றிய செய்தி ஐங்குறுநூற்றில் இடம்பெறுகின்றது.

"மென் தினை மேய்ந்த தறுகட் பன்றி
வன் கல் அடுக்கத்துத் துஞ்சும் நாடன்" (ஐ.கு.நூ.261)

மென்மையானத் தினையை மேய்ந்த அஞ்சாமையுடைய பன்றி, வன்மையான கல் அடுக்கத்தின் பக்கம் உறங்கும்.

தலைவன் தான் விரும்பின காம இன்பத்தை நுகர்ந்து இனிது உறங்குகிறான். தன் தலைமைப் பண்புக்கு ஏற்ப விரைவில் வரைவிற்குரியன செய்யவில்லை என்பது உள்ளுறை.

"சிறுதினை மேய்ந்த தறுகட் பன்றி
துறுகல் அடுக்கத்துத் துணையொடு வதியும்
இலங்குமலை நாடன் வரூஉம்" (ஐ.கு.நூ.262)

சிறிய தினையை மேய்ந்த அஞ்சாமை மிகுந்த ஆண் பன்றி கல் அடுக்கிய மலையில் தன் துணையோடு தங்கியிருக்கும்.

களவொழுக்கத்தில் வரும் இன்பத்தை மட்டும் நுகர்ந்து வரையாது காலம் நீட்டிக்கிறான் தலைவன் என உள்ளுறைப் பொருள் உணர்த்துகிறது.

"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
துறுகல் அடுக்கத்து வில்லோர் மாற்றி
ஐவனம் கவரும் குன்ற நாடன்" (ஐ.கு.நூ.267)

சிறிய கண்களையும், கடுஞ்சினத்தையும் உடைய ஆண் பன்றி, மலைப் பக்கத்தில் வில்லேந்திப் புனம் காக்கும் மலைவாழ்நரை ஏமாற்றி மலை நெல்லை உண்ணும்.

தலைவன் களவில் காவலரை வென்று பெறும் இன்பமே விரும்புவான் என்பது உள்ளுறை.

## பன்றியின் அன்புணர்வு

"தாஅய் இழந்த தழுவரிக் குருளையொடு
வளமலைச் சிறு தினை உணீஇ, கானவர்
வரை ஒங்கு உயர் சிமைக் கேழல் உறங்கும்" (ஐ.கு.நூ.268)

தம் தாயை இழந்த நெருங்கிய வரிகளை உடல் மேல் கொண்ட குருளையொடு சென்று வளமுடைய மலையில் சிறிய தினையை உண்டு கேழல் உயர்ந்த மலைப்பகுதியில் உறங்கும்.

இத்தகைய பேரன்புடைய கேழலை உடைய நாட்டுத் தலைவன் தலைவியைத் தனியே விடுத்துப் பிரிந்து போவது தகாது என உள்ளுறைப் பொருள் உணர்த்துகிது.

## பன்றியின் வடிவம்

ஐங்குறுநூற்றில் பன்றியின் வடிவம் பற்றிய செய்தியை அடிப்படையாகக் கொண்டு உள்ளுறை அமைகிறது.

> "நன் பொன் அன்ன புனிறு தீர் ஏனல்
> கட்டளை அன்ன கேழல் மாந்தும்" (ஐ.கு.நூ.263)

பொன் போன்ற நன்கு முற்றிய தினைக்கதிரைப் பொன்னுரை காண உதவும் கட்டளைக் கல் போலும் கருநிறம் கொண்ட பன்றி உண்டு வாழும்.

தலைவன் நாட்டில் வாழும் விலங்குகளும் தமக்கு வேண்டுவன குறைவின்றிப் பெற்று இன்பம் நுகரும் நாடன் என்பது உள்ளுறை.

> "இளம்பிறை அன்ன கோட்ட கேழல்
> களங் கனி அன்ன பெண்பால் புணரும்" (ஐ.கு.நூ.264)

இளம்பிறை போன்ற கொம்பினை உடைய பன்றி களாப்பழம் போன்ற கருநிறம் கொண்ட தன் பிணவினைப் புணர்ந்து இன்புறும் நாட்டிற்குத் தலைவன்.

தலைவன் தனக்கு வேண்டிய இன்பத்தைத் தலைவியை மணந்து கொண்டு நுகர்தல் வேண்டும் என உள்ளுறை அமைகிறது.

“சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தலொடு
குறுக்கை இரும்புலி பொரூஉம் நாட” (ஐ.கு.நூ.266)

சிறிய கண்களையும் பெருஞ்சினத்தையும் உடைய ஆண் பன்றி, குறுகிய முன்னங்கால்களையுடைய பெண் புலியோடு போரிடற்கு இடனான நாட்டிற்குத் தலைவன்.

தலைவன் தனக்கு நிகர் அல்லாதவர் வந்து மகட்பேசிய பொழுதும் அதனை நீக்காமல் அவர்கட்கு இடம் கொடுத்தான் என்பது உள்ளுறைப் பொருளாகின்றது.

## பன்றியின் உழவுச்செயல்

ஐங்குறுநூற்றில் பன்றியின் உழவை அடிப்படையாகக் கொண்டு உள்ளுறை அமைகிறது.

“கேழல் உழுதெனக் கிளர்ந்த எருவை
விளைந்த செறுவின் தோன்றும் நாடன்” (ஐ.கு.நூ.269 )

பன்றி உழுதமையால் ஓங்கியெழுந்த கோரைப்புற்கள் நெல்வயல் போன்ற தோற்றத்தைக் கொடுத்தது.

தலைவன் தன்னை காமவேட்கை வாட்டியதனால், அவ்வேட்கையைத் தீர்த்துக் கொள்ளுவதற்காகத் தோழியிடம் பணிவாக

நடந்து கொண்டு நல்லவன் போல் தோன்றினான் அல்லாமல் அவன் உண்மையில் நல்லவன் அல்லன் என்பது உள்ளுறைப் பொருளாகிறது.

“கிழங்கு அகழ் கேழல் உழுத சிலம்பில்

தலை விளை கானவர் கொய்தனர் பெயரும்” (ஐ.கு.நூ.270)

கிழங்குகளை அகழ்ந்தெடுக்கும் பன்றிகள் தம் கொம்பினால் உழுத புழுதியில் தாம் விதைத்து விளைவித்த தினையின் முதல் விளைச்சலை கானவர் கொய்து செல்வர்.

தலைவன் தலைவியிடம் விதைத்த அன்பு விதையானது காதலாம் பயிராகி நன்கு விளைந்தது. அதன் முதல் விளைவாகிய திருமணத்தை இனி தலைவன் நிகழ்த்தி தலைவியை இல்லத்திற்குக் கொண்டு போவான் என்பது உள்ளுறைப் பொருளாகிறது.

## பன்றியின் வீரம்

“வயநாய் எறிந்து, வன்பறழ் தழீஇ,

இளையர் எய்துதல் மடக்கி, கிளையொடு

நால்முலைப் பிணவல் சொலிய, கான் ஒழிந்து,

அரும்புழை முடுக்கர் ஆள்குறித்து நின்ற

தறுகட் பன்றி நோக்கி, கானவன்

குறுகினன் தொடுத்த கூர்வாய்ப் பகழி

மடைசெலல் முன்பின்தன் படைசெலச் செல்லாது,

அருவழி விலக்கும்எம் பெருவிறல் போன்ம்’ என

எய்யாது பெயரும் குன்ற நாடன்” (அக.நா.248)

அஞ்சாமையுடைய ஆண் பன்றி வேட்டை நாயை எதிர்த்து விரட்டியது. தன்னை நோக்கி வேடர்கள் நெருங்கி வருவதைத் தடுத்தது. பெண் பன்றி தன் குட்டிகளுடன் தப்பிப் போகும்படிச் செய்தது. பின்னர் காட்டிலிருந்து வெளி வந்து நுழைதற்கரிய வாயிலையுடைய ஒரு முடுக்கின் கண் வேட்டையாடும் ஆட்களை எதிர்பார்த்து நின்றது. அப்பன்றியைக் கண்ட வேடன் தன் வில்லில் தொடுத்த அம்பினை அப்பன்றியின் மேல் எய்யாது மீண்டான். அத்தகைய நாட்டினையுடையவன் தலைவன் என்பதில், இற்செறிக்கப்பட்ட தலைவிக்கு ஏற்படும் துன்பத்தைத் தலைவன் போக்க வேண்டும் என்ற உள்ளுறைப் பொருள் அமைகின்றது.

### பன்றி இறைச்சி

"பிணர் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு
கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்
கல்அதர் அரும் புழை அல்கி, கானவன்,
வில்லின் தந்த வெண் கோட்டு ஏற்றை,
புனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி" (நற்.336)

சொர சொரப்பான பிடரியையுடைய ஆண் பன்றி, தோலால் வற்றிவிட்ட முலையையுடைய பெண் பன்றியுடன் சென்று தினைக்கதிரை அளவின்றித் தின்னும். அதனையறிந்த கானவன் வில்லினால் அம்பெய்து ஆண் பன்றியைக் கொல்வான். தான் கொன்ற பன்றியை மனைவியிடம் தருவான். அவளும் அப்பன்றியை அறுத்துத் தன் குடியினர் அனைவருக்கும் முறையுடன் பகுத்துத் தருவாள். இத்தகைய மலைக்குத் தலைவன். தலைவனும் தலைவியும் மணந்து இல்லறம் நிகழ்த்தும் போது,

பகைப்புலம் சென்று பகைவரை வென்று பொருள் ஈட்டித் தலைவியிடம் தர அவளும் தெய்வம், விருந்து, சுற்றம் என முறையே பகிர்ந்து கொடுத்து இன்புற வேண்டும் என்பது உள்ளுறைப் பொருளாகிறது.

**5. புலி**

**புலியின் உணவு**

ஐங்குறுநூற்றில் புலியின் உணவு பற்றிய செய்தியை அடிப்படையாகக் கொண்டு உள்ளுறைப் பொருள் அமைகின்றது.

> "குறுங்கை இரும் புலிக் கோள் வல் ஏற்றை
> நெடும் புதல் கானத்து மடப்பிடி ஈன்ற
> நடுங்கு நடைக் குழவி கொளீஇய, பலவின்
> பழம்தூங்கு கொழு நிழல் ஒளிக்கும் நாடற்கு" (ஐ.கு.நூ.216)

குறுகிய முன்னங்கால்களையுடைய வலிய ஆண் புலி நெடிது வளர்ந்த புதல்கள் நிறைந்த காட்டில் பெண் யானை ஈன்ற நடுங்கும் தன்மையையுடைய இளங்கன்றினைப் பற்றித் தின்னுவதற்காகப் பெரிய பலாமரத்தின் நிழலின் கண் பதுங்கியிருக்கும் மலைக்குத் தலைவன்.

புலியேறு தலைவனுக்கும், நெடிது வளர்ந்த புதல் நிறைந்த காடு தலைவியின் குடிக்கும், பெண் யானை தலைவிக்கும், இளங்கன்று தலைவியின் பெண்மை நலத்திற்கும், பழம் அவன் இனிய வஞ்சக மொழிக்கும் உவமைகளாக அமைந்தன.

தலைவன் தன் வஞ்சனையாலே தலைவியின் பெண்மையைக் கவர்ந்த தன்மை உள்ளுறைப் பொருளாக அமைகிறது.

"களிறு கோட் பிழைத்த கதம் சிறந்து எழுபுலி
எழுதரு மழையின் குழுமும்
பெருங்கல் நாடன் வரும்கொல் ?—அன்னாய்!" (ஐ.கு.நூறு. 218)

தான் கொள்ளக் கருதிய ஆண் யானை தப்பியமையால் சினம் மிகுந்து எழுந்த புலி, மழை பொழிவதற்குத் திரண்டெழுந்த முகில் முழங்குவது போல் முழங்கும் நாட்டின் தலைவன்.

நம் சுற்றத்தார் மகட்கொடை மறுத்தலினால் தலைவன் முன்னினும் ஊக்கம் சிறந்து தலைவியைப் பெறும் முயற்சியில் வெற்றி பெறுவான் என்பது உள்ளுறைப் பொருளாகிறது.

## புலியின் காம மயக்கம்

"வெறி செறித்தனனே, வேலன்—கறிய
கல் முகை வயப்புலி, கழங்கு மெய்ப்படூஉ
புன்புலம் வித்திய புனவர் புணர்த்த
மெய்ம்மை அன்ன பெண்பாற் புணர்ந்து,
மன்றில் பையுள் தீரும்
குன்ற நாடன் உறீஇய நோயே" (ஐ.கு.நூ.246)

மலையிடத்தே புன்செய் கொல்லையில் தினைப்பயிரை வளர்த்த குறவர் விலங்குகள் புகுந்து அழிவு செய்யா வண்ணம் மெய்ப்புலி போலச் செய்தமைத்த பொய்ப்புலியை, வலிய புலியின் ஏறு கூடிப் புனத்திடையே உள்ள மன்றில் கிடந்து தன் வருத்தம் நீங்குவதற்கு இடமான மலையை உடையவன்.

தலைவன் வரைந்து கொண்டு மெய்யான இன்பத்தை நுகரக் கருதாமல், களவுப் புணர்ச்சியிலேயே நிறைவடைகின்றான் என்பதை உள்ளுறுத்துகிறது.

### புலியின் பகை உணர்வு

"இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்
பெருங்கை யானைக் கோள்பிழைத்து, இரீஇய
அடுபுலி வழங்கும் ஆர்இருள் நடுநாள்
தனியை வருதல் அதனினும் அஞ்சுதும்" (அக.நா.118)

கருநிறப் பிடியோடும் கன்றோடும் கூடிய அகன்ற வாயினையும் பெரிய கையினையும் உடைய ஆண் யானையைத் தன் இரையாகக் கொள்ளுதலினின்று தப்ப விடுத்து, அதனால் பகை உணர்ச்சியுடன் ஓரிடத்தே கூட்டமாக மறைந்திருக்கும்படி செய்த கொல்லும் புலி உலவித் திரியும்.

தலைவன் தலைவியை மணந்து கொள்ளாமல் பிழைத்தமையால் அவள் எங்கும் செல்ல முடியாமல் இற்செறிப்புக்கு உள்ளானாள் என்பது உள்ளுறை உவமையாக அமைந்துள்ளது.

## 6. மான்

### மானின் உணவு

"பெருவரை வேங்கைப் பொன் மருள் நறுவீ
மான் இனப் பெரும் கிளை மேயல் ஆரும்" (ஐ.கு.நூ.217)

உயர்ந்த மலைப்பகுதியில் உள்ள வேங்கை மரத்தின் பொன்னிறமான நறுமணமிக்க மலர்களை மானினங்களின் கூட்டங்கள் மேய்ந்து மகிழும்.

தலைவனும் தலைவியும் மணந்து கொண்டு இல்லறம் நிகழ்த்தும் பொழுது அவர்களின் கிளையாகிய பலரும் தலைவன் மனையில் உள்ள பெருஞ்செல்வத்தை நுகர்வர் என்பது உள்ளுறைப் பொருளாகிறது.

## 7. யானை

குறிஞ்சித் திணைக்கே உரித்தான சிறப்புடைய யானையைப் பற்றிய செய்திகள் உள்ளுறை உவமையில் இடம் பெறுகின்றன.

### யானையின் போர்க் குணம்

"முளை வளர் முதல மூங்கில் முருக்கி,
கிளையொடு மேய்ந்த கேழ்கிளர் யானை,
நீர்நசை மருங்கின் நிறம்பார்த்து ஒடுங்கிய,
பொருமுரண் உழுவை தொலைச்சி, கூர்நுனைக்
குருதிச் செங்கோட்டு அழிதுளி கழாஅ,
கல்முகை அடுக்கத்து மென்மெல இயலி,
செறுபகை வாட்டிய செம்மலொடு அறுகால்
யாழ்இசைப் பறவை இமிர, பிடிபுணர்ந்து,
வாழைஅம் சிலம்பில் துஞ்சும் நாடன்" (அக.நா.332)

மலையில் மூங்கில்களைத் தன் இனத்துடன் தின்ற களிறானது நீர் வேட்கை காரணமாக நீர்த்துறையருகே சென்றது. அதன் வருகையை எதிர்பார்த்துத் தாக்குவதற்குப் பதுங்கியிருந்த போர்க்குணம் வாய்ந்த

புலியினைப் போரிட்டுக் கொன்றது. குருதி படிந்த தன் கொம்பினைக் கழுவி வாழை மரங்களையுடைய மலையில் துயிலும்.

தலைவன் அலர்கூறும் பெண்டிரின் வாயை அடக்கி, களவொழுக்கத்தால் ஏற்பட்ட மாசு தீரத் தலைவியை மணந்து சுற்றத்தாரும் பிறரும் கொண்டாடுமாறு செல்வம் மிக்க தன் மனையில் தலைவியொடு இன்பம் துய்த்திருப்பான் என்பதை உள்ளுறைப் பொருளாகக் கொண்டு அமைந்தது.

> "பொருங் களிற் றினத்தொடு, வீங்க எருத்து எறுழ் முன்பின்
> இரும்புலி மயக்குற்ற இகல்மலை நல் நாட" (குறி.கலி.48)

யானைத் திரளோடு வீங்கின கழுத்தையும் மிக்க வலிமையினையும் உடைய பெரிய புலி மாறுபாட்டின் காரணத்தால் போர் செய்தற்குரிய மலைக்குத் தலைவன்.

மிக்க வலிமையும் செல்வச் செருக்கும் உடையத் தலைவனை விரும்பியதால் சுற்றத்தாருடனே ஊரில் உள்ளார் தலைவியை அலர்கூறிப் பகைக்கின்றனர் என்பது உள்ளுறை.

> "முறம்செவி மறைப் பாய்பு முரண் செய்த புலிசெற்று
> மறம்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
> குறங்கு அறுத்திடுவான் போல், கூர்நதி மடுத்து, அதன்
> நிறம் சாடி முரண் தீர்ந்த நீள்மருப்பு எழில் யானை,
> மல்லரை மறம் சாய்த்த மால்போல், தன் கிளை நாப்பண்,
> கல்உயர் நனஞ்சாரல், கலந்து இயலும் நாட" (குறி.கலி.52)

யானை மாறுபாடு செய்த புலியைச் சினந்து தாக்கியது. துரியோதனனைக் கொன்ற பீமசேனன் போலத் தன்னுடைய கூரிய கோட்டினது நுனியாலே குத்திக் கொன்றது. பின்னர் தன் சுற்றத்திற்கு நடுவே சென்று கலந்தது அந்த யானை. அத்தகைய மலைநாடன்.

களவொழுக்கம் இடமாக அலர் கூறிய அயலாரைச் சினந்து தலைவன் வரைந்து கொண்டால் அயலாரைத் தாம் வென்று, தலைவன் சுற்றத்தாருடன் பொருந்தி இருந்து இல்லறம் நடத்தலாம் என்பது உள்ளுறை.

யானையின் போர்க்குணம், வெற்றிப் பெருமிதம், காதலுணர்வு ஆகியவை தலைவனுக்கு உணர்த்தப்படுகின்றன. சில யானைகள் போரில் இறப்பதும் உண்டு.

> "புலியொடு பொருத புண் கூர் யானை
> நற்கோடு நயந்த அன்பு இல் கானவர்
> விற் சுழிப்பட்ட நாமப் பூசல்
> உருமிடைக் கடிஇடி கரையும்
> பெருமலை நாடனை, 'வரூஉம்' என்றோளே" (நற்.65)

புலியுடன் போரிட்டு புண்மிக்க யானையின் நல்ல தந்தத்தை விரும்பிய கானவர் அம்பை செலுத்தினர். அந்த அம்பு பட அச்சத்தில் எழுப்பிய பேரொலி மலையில் சென்று மோதும்.

காமநோய் பெருகுதலால் வருந்திய தலைவியை மேலும் வருத்தியது அலர்மொழி. அவ்வலரை பொறுத்திராது தலைவி வருந்திட

அவ்வருத்தத்தைத் தலைவன் உணர்ந்து விரைவில் வருவான் என உள்ளுறை அமைகிறது.

## யானையின் அச்சம்

மதம் பொருந்திய வேழங்கள் உருவத்தால் பெரியவாயினும், தம்மினும் உருவத்தில் சிறிய புலிகளைக் கண்ட காலத்தும், காணாத பொழுதும் அஞ்சி நடுங்கும்.

"குறவர் ஊன்றிய குரம்பை புதைய
வேங்கை தாஅய தேம் பாய் தோற்றம்
புலி செத்து, வெரீஇய புகர்முக வேழம்,
மலைபடு சிலம்பில் கழை பட, பெயரும்
நல் வரை நாட! நீ வரின்,
மெல்லியல் ஒரும் தான் வாழலளே" (அக.நா.12)

குறவர் ஊன்றியுள்ள குடிசையின் கூரையில் வேங்கைப் பூக்கள் உதிர்ந்து கிடக்கிறது. அத்தோற்றம் புள்ளிகளையுடைய புலியின் உருவம் போல் தோன்றுகிறது. அதைக் கண்ட யானை அதனைப் புலியென்றுக் கருதி அஞ்சி தனக்கு உணவாகிய மூங்கில் முறியப்பாய்கிறது.

இந்நிலை தலைவன் அஞ்சத்தகாத தலைவியின் உறவினரைக் கண்டு அஞ்சி வரைய முயலாது இருக்கின்றான். அதனால் தலைவி இறந்து படும்படியாயிற்று எனத் தோழி வரைவு நீட்டிக்கும் தலைவனிடம் யானையின் அச்சத்தைக் கூறி உள்ளுறைப் பொருளாகத் தலைவனின் அச்சத்தை உணர்த்துகிறாள்.

## யானையின் சினம்

"இருங்கேழ் வயப் புலி வெரீஇ, அயலது
கருங்கால் வேங்கை ஊறுபட மறலி,
பெருஞ் சினம் தணியும் குன்ற நாடன்" (நற்.217)

புகழ்மிக்க வாழ்பவரின் செல்வம் பொலிவு பெறுவது போலக் காணுந்தோறும் விரைந்த நடையையுடைய களிற்று யானை பொலிவுடன் தோன்றும். அத்தகைய யானை, தன்னை எதிர்க்க இயலாமல் புலி அஞ்சி ஓடியதால், தன் சினத்தை பக்கத்திலுள்ள வேங்கை மரத்தில் மோதித் தணித்துக் கொள்ளும்.

தலைவி கொண்ட புலவிக்குத் தலைவன் அஞ்சி அகலுகின்றான். அதனால் அவன் கொண்ட பரத்தமையை இகழ்ந்து கூறிச் சினம் தணிவாள் என்பதை உள்ளுறுத்துகிறது. இங்கு யானையின் சினம் தலைவியின் சினத்திற்கு உள்ளுறையாகக் கூறப்படுகிறது.

"உறுபுலி உரு ஏய்ப்பப் பூத்த வேங்கையைக்
கறுவுகொண்டு அதன் முதல் குத்திய மதயானை
நீடு இருவிடர் அகம் சிலம்பக் கூய், தன்
கோடு புய்க்கல்லாது, உழக்கும் நாட! கேள்" (குறி.கலி.38)

மிகுதியை உடைய புலியினது வடிவை ஒத்த வேங்கைப்பூ மிகுதியாக மலர்ந்துள்ள மரத்தை, புலியெனக் கருதிய மதயானை, வேங்கை மரத்தின் அடிப்பகுதியிலே குத்திய தன் கொம்பை வாங்கமாட்டாதே வருத்தமுற்று நீண்ட பெரிய முழைஞ்சிடம் எல்லாம் எதிர் ஒலிக்கும்படி கூப்பிடும் மலைநாடன்.

களவில் தலைவன் பெறுகின்ற இன்பமே பெரிதென எண்ணி வரைவு கடாதலைத் தான் நுகர்கின்ற இன்பத்திற்கு மாறாகக் கருதி மாறுபட்டு வந்தான். களவொழுக்கத்திற்கு இடையீடு நேரும்போது வருந்தி, தோழி கூற்றை நன்று என்று கருதி நீக்கமாட்டாது வருந்துவதாக உள்ளுறை உவமை அமைந்துள்ளது.

"விறல்மலை வியல் அறை, வீழ்பிடி உழையதா,
மறம்மிகு வேழம், தன் மாறுகொள் மைந்தினான்
புகர் நுதல் புண் செய்த புய்கோடு போல,
உயர்முகை நறுங்காந்தள் நாள்தோறும் புதிது ஈன" (குறி.கலி.53)

மலையிடத்து, தான் விரும்பிய பெண் யானையைத் தன்னிடத்தே கொண்டிருந்தது களிறு. வீரம் மிக்க அந்தக் களிறு, தனக்கு மாறாகிய மற்றொரு யானையை, தனது ஆற்றலால் அதன் புள்ளியை உடைய நுதலைப் புண்ணாக்கிக் கொம்பினால் குத்தி வாங்கியது. அதன் குருதி தோய்ந்த கொம்பு போல உயர்ந்த முகையினை உடைய காந்தள், நாள்தோறும் புதிய பூக்களை ஈன்று நின்றது.

நற்குணமுடைய தலைவன் வரையாதிருத்தலால் கொடியவனாகத் தோன்றி நின்றான் என்பது உள்ளுறை ஆகும்.

### யானையின் காதல்

"வாழை ஓங்கிய வழை அமை சிலம்பில்,
துஞ்சு பிடி மருங்கின் மஞ்சு பட, காணாது,

பெருங் களிறு பிளிறும் சோலை அவர்

சேண் நெடுங் குன்றம் காணிய நீயே" (நற்.222)

மலைவாழையினையும், சுரபுன்னைகளையும் உடைய உயர்ந்த மலையில் துயிலும் பிடியானையை மேகம் மறைத்தது. அதனால் தன் பிடியானையைக் காணப் பெறாத பெருங்களிற்றியானை பிளிறும் என்றது தலைவி, இற்செறிக்கப்பட்டதால் தலைவன் குறியிடத்தில் காணாது வருந்துவான் என்பதனை உள்ளுறுத்தி நிற்கும். யானையின் அன்புணர்வு தலைவனுக்கு உள்ளுறுத்தி நிற்கிறது.

## யானையின் உணவு

'நெற்கொள் நெடுவெதிர்க் கணந்த யானை

முத்தார் மருப்பின் இறங்குகை கடுப்பத்

துய்த்தலை வாங்கிய புனிறுதீர் பெருங்குரல்' (குறி.பா.வ.35--37)

யானை மூங்கிலின் முளைகளை உணவாகக் கொள்ளும். நெல்லைத் தன்னிடத்தே கொண்டுள்ள நெடிதாக வளர்ந்த மூங்கிலைத் தின்றற்கு மேனோக்கி நின்ற களிறு, வருத்தம் தீர்தற்காக முத்துக்கள் நிறைந்த தன் கொம்பினிடத்தே வளைந்த துதிக்கையை இறக்கிப் போடும். உயர்ந்த குடியில் பிறந்த தலைவியை வேட்கை மிக்க தலைவன் இரவுக்குறிக் கண் வந்து முயல, தலைவி இற்செறிக்கப்பட்டிருத்தலால் காண முடியாமல் மீள்கிறான். நற்குணங்கள் நிறைந்த தலைவன் தன் அறிவால் வருத்தத்தை ஆற்றிக் கொள்வான் என உள்ளுறை அமைந்துள்ளது.

"கொடி விடுபு இருளிய மின்னுஞ் செய் விளக்கத்து,

பிடியொடு மேயும் செய்புன் யானை

அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்" (குறிகலி.41)

ஆண் யானை பெண் யானையுடன் வந்து, புன்செய் நிலத்திலே புகுந்து பயிரைத் தின்னா நிற்கும். அவற்றின் காலடிச் சத்தம் கேட்ட கானவன் கவணையில் கல்லை வைத்து எறிவான் என்றது, தலைவன் மின் வழிகாட்ட வந்து தலைவியொடு புணர்ந்த நிலைமை அலர் கூறக் கேட்ட செவிலி, கடுஞ்சொல் சொல்லி இற்செறித்தனள் என்ற உள்ளுறைப் பொருளை உணர்த்துகிறது.

"மறம் கொள் இரும்புலித் தொல்முரண் தொலைத்த

முறம் செவி வாரணம் முன்குளகு அருந்தி,

கறங்கு வெள் அருவி ஒலின் துஞ்சும்" (குறி. கலி.42)

புலியைக் கொன்ற யானை, தன் முன்னர்க் கிடந்த இலையாகிய உணவைத் தின்றது. ஒலிக்கின்ற வெள்ளிய அருவி நீரைப் பருகி, அயர்ந்து வளம் நிறைந்து விளங்கும் சோலையிலே உறங்கும். அத்தகைய நல்ல மலைக்குத் தலைவன்.

அயலார் கூறும் அலரைப் பொருட்படுத்தாமல் தலைவி இல்லின் கண் இருக்கும் நிலைமை அறியாது மறந்தான் என்பது உள்ளுறை.

"மூங்கில் மிசைந்த முழந்தாள் இரும்பிடி,

தூங்கி இலை வாழை நளிபுக்கு, ஞாங்கர்

வருடை மடமறி ஊர்வு இடைத்துஞ்சும்

இருள்தூங்கு சோலை, இலங்குநீர், வெற்ப!" (குறிகலி.50)

மூங்கில் நெற்கதிர்களை வளைத்துத் தின்றது பெண் யானை. வாழைகள் நிறைந்த இடத்தில் புகுந்து சென்று துயில் கொண்டது என்பதில் தலைவனை அன்புடனே பெற்று நுகர்ந்த தலைவி அவன் வரைந்து கொண்டபின் அலர் கூறுவாரின்றி, அவன் சுற்றத்துடன் இல்லறம் நிகழ்த்தித் தங்குவாள் என்ற உள்ளுறைப் பொருள் அமைகின்றது.

### 3.1.2.2.2. பறவையினங்கள்

கபிலர் பாடல்களில் பறவையினங்கள் சிலவும் உள்ளுறைப் பொருளில் பயன்படுத்தப்பட்டுள்ளன.

1. கிளி
2. குருகு
3. மயில்

ஆகிய பறவையினங்கள் உள்ளுறைப் பொருளில் அமைந்துள்ளன.

### 1. கிளி

### கிளியின் உணவு

ஐங்குறுநூற்றில் கிளியின் உணவு பற்றிய செய்தியை அடிப்படையாகக் கொண்டு உள்ளுறைப் பொருள் அமைகிறது.

> "சாரற் புறத்த பெருங்குரற் சிறுதினைப்
> பேர் அமர் மழைக் கண் கொடிச்சி கடியவும்,
> சோலைச் சிறு கிளி உண்ணும் நாட" (ஐ.கு.நூ.282)

மலைச் சாரலில் விளைந்த பெரிய கதிரைக் கொண்ட சிறிய தினையின் கண் படியும் சோலையில் வாழும் சிறிய கிளிகளைக் கொடிச்சி

விரட்டுகிறாள். அதுபற்றிக் கவலைப்படாமல், அக்கிளிகள் மீண்டும் அத்தினையைக் கவர எண்ணுகின்ற நாட்டிற்குத் தலைவன்.

காவலர் காத்து நிற்கவும் அதை பற்றிப் பொருட்படுத்தாமல் களவொழுக்கமே விரும்புவான் தலைவன் என உள்ளுறை உணர்த்துகிறது.

"பின் இருங் கூந்தல் நல்நுதற் குறமகள்
மென் தினை நுவணை உண்டு, தட்டையின்
ஐவனச் சிறு கிளி கடியும் நாட!" (ஐ.கு.நூ.285)

பின்னிய கரிய கூந்தலையும், அழகிய நெற்றியினையும் உடைய குறமகள் மெல்லிய தினையின் மாவை உண்டு பின்னர்த் தட்டையைப் புடைத்து ஐவன நெல்லை உண்ண வரும் சிறிய கிளிகளை ஓட்டும் மலைக்குத் தலைவன்.

தலைவனால் துறக்கப்பட்ட தலைவி பிரிவுத் துன்பத்தை மனதில் வைத்துக் கொண்டு, பிறர் அறியாமல் தன் மறையினைக் காக்கின்றாள் என்பது உள்ளுறைப் பொருளாகும்.

"சிறுதினை கொய்த இருவி வெண்கால்
காய்த்த அவரைப் படு கிளி கடியும்
யாணர் ஆகிய நல்மலை நாடன்" (ஐ.கு.நூ.286)

சிறிய தினைத் தானியம் கொண்ட கதிர்களைக் குறவர் அறுவடை செய்த பின்னர் தட்டைகளின் மேல் படர்ந்து காய்த்த அவரையின் மேல் வந்து படிகின்ற கிளிகளை ஓட்டுதற்கு இடனான மலைக்குத் தலைவன்.

தலைவன் வரைந்து கொள்ளாமல் இருப்பதன்றி உடன் போதலையும் விலக்கினான் என உள்ளுறை உணர்த்தப் பெறுகிறது.

## 2. குருகு

"நீர் பெயர்ந்து மாறிய செறி சேற்று அள்ளல்
நெய்த் தலைக் கொழுமீன் அருந்த, இனக்குருகு
குப்பை வெண்மணல் ஏறி, அரைசர்
ஒண்படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்" (நற்.291)

நீர் வற்றியுள்ள செறிந்த சேற்றுப் பரப்பினில் பொருந்திய கொழுத்த மீனை அருந்துவதற்காக நாரையின் கூட்டம், குவிந்த மணல் மேட்டின் மீது ஏறியிருக்கும். நாரைகளின் அக்காட்சி அரசர்களின் புகழ்மிக்க காலாட்படை போன்று விளங்கும்.

குருகுகள் கூட்டமாக இருப்பது போலத் தலைவனிடம் பயன் கொள்ள வேண்டிப் பாணர், விறலியர் கூட்டமாக இருத்தலை உள்ளுறையாகக் கூறப்படுகிறது.

குருகுகள் கூட்டமாக இருப்பினும் படையாகாதவாறு போல விறலியர் கூட்டமும் வாயில் ஆகாது எனத் தோழி உள்ளுறையாகக் கூறுகிறாள்.

## 3. மயில்

"நெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல்
நீர்செத் தயின்ற தோகை வியலூர்ச்
சாறுகொள் ஆங்கண் விழவுக்களம் நந்தி

அரிக்கூட் டின்னியங் கறங்க ஆடுமகள்

கயிறூர் பாணியில் தளருஞ் சாரல்'' (குறி.பா.வ.190–195)

பழுத்த மிளகுகள் உதிர்ந்த பாறையில் உள்ள நீர்ச்சுனையில் வீழ்ந்த மாங்கனியானும், வண்டுகள் சிதறிய தேனானும், பலவின் தீம்பழத்தானும் விளைந்த கள்ளினை, கள்ளென்று அறியாமல் நீர் என்று பருகிய மயில், கழாய்க்கயிற்றில் ஏறி ஆடுகிறவள் தாளம் தவற ஆடித்தளருவது போலத் தளரும் மலையினை உடையவன் தலைவன்.

நீரென கள்ளைப் பருகிய மயில், உயர்ந்த தலைவனைத் தன் குலத்திற்கு ஏற்றவனாகக் கருதி நுகர்ந்த தலைவியாகவும், தேறலில் மிகுந்த களிப்பு, களவொழுக்கத்தில் பிறந்த பேரின்பமாகவும், மயில் ஆடமுடியாதத் தன்மை வருந்திக் குறைந்த தன்மையாகவும் உள்ளுறையாகக் கூறப்படுகிறது.

"மயில்கள் ஆலக்குடிஞை இரட்டும்

துறுகல் அடுக்கத்ததுவே–பணைத்தோள்'' (ஐ.கு.நூ.291)

மயில்கள் மகிழ்ந்து ஆட, அவ்வாட்டத்திற்கு ஏற்பப் பேராந்தைகள் மாறி மாறி அலறுவதற்கு இடனான சிறிய குன்றுகளைக் கொண்ட பக்கமலைகளிடையே அமைந்தது தலைவியின் ஊர்.

தலைவன் நிகழ்த்த இருக்கும் திருமணத்திற்குத் தலைவியின் சுற்றத்தார் மகிழ்ந்து உறுதுணையாகிச் சிறப்பிப்பார் என்பது உள்ளுறையாகிறது.

"எரிமருள் வேங்கை இருந்த தோகை

இழைஅணி மடந்தையின் தோன்றும் நாட" (ஐ.கு.நூ.294)

செந்நிற மலர்களையுடைய வேங்கை மரத்தின் மீது அமர்ந்த மயில், பொன்னணிகள் பூண்ட பெண் போலத் தோற்றமளிக்கும் மலைநாட்டையுடையவன் தலைவன்.

வேங்கையைத் தலைவனுக்கும், மயில் தலைவிக்கும் உவமையாக்கி, அவள் அன்றே தலைவனால் வரைந்து கொள்ளப்பட்டவள் போன்று தோழியின் விழிக்கு விருந்தாகி தலைவி பொலிவு பெற்றிருந்தாள்.

"புனவர் கொள்ளியின் புகல் வரும் மஞ்ஞை,

இடுவி இருந்த குருவி வருந்துற,

பந்துஆடு மகளிரின் படர்தரும்

குன்று கெழ நாடனொடு சென்ற என் நெஞ்சே" (ஐ.கு.நூ.295)

வேடர்கள் காட்டில் கொளுத்திய கொள்ளியைக் கண்டு அஞ்சி மயில்கள், கதிர்கள் கொய்யப்பட்ட அரிதாளில் இருந்த குருவிகள் எழுவதும் விழுவதுமாய் வருந்திடத் தம் சிறகை விரித்துப் பந்தாடும் மகளிர் போல அசைந்தாடிச் செல்லும் மலைக்குத் தலைவன்.

தலைவன் அலர் எழுந்ததெனக் கருதி அதற்கஞ்சித் தன் ஊர்க்குத் தலைவியை வருந்தவிட்டுச் சென்றான்.

"கொடிச்சி காக்கும் பெருங்குரல் ஏனல்

அடுக்கல் மஞ்ஞை கவரும் நாட" (ஐ.கு.நூ.296)

குறமகள் காத்து நிற்கும் தினையைப் பக்கமலையில் வாழும் மயலினம் கள்ளத்தனமாய்க் கவர்ந்து உண்ணும் மலைநாட்டுக்குத் தலைவன். தலைவன் களவின் நுகர்ச்சியே விரும்புகின்றான் என்பது உள்ளுறைப் பொருளாகிறது.

“விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை
பூக்கொய் மகளிரின் தோன்றும் நாட” (ஐ.கு.நூ.297)

மலர்ந்த பூக்களைக் கொண்ட வேங்கை மரத்தின் பெரிய கிளையில் அமர்ந்துள்ள மயில், அம்மரத்தின் மீது ஏறிப் பூப்பறிக்கும் பெண் போலத் தோற்றமளிக்கும் மலைக்குத் தலைவன்.

தலைவன் வரைவு கருதிப் பிரிதலை நினைத்தான் ஆயினும் அஃது தலைவியின் உயிரைக் கொல்லும் செயல் போல துயரத்தைத் தருகின்றது என உள்ளுறை அமைகிறது.

“மழை வரவு அறியா மஞ்ஞை ஆலும்
அடுக்கல் நல்ஊர் அசைநடைக் கொடிச்சி” (ஐ.கு.நூ.298)

மயில் மழை முகில் வருதலை உணர்ந்து களிப்பு மிகுந்து அடுதற்கு இடனான பக்க மலைகளை உடைய நல்ல ஊரில் உள்ளவள் தலைவி.

தலைவன் வரவினை அறிந்த தலைவி மிகவும் மகிழ்வாள் என்பது உள்ளுறையாகும்.

“கொடிச்சி கூந்தல் போலத் தோகை
அம்சிறை விரிக்கும் பெருங் கல் வெற்பன்” (ஐ.கு.நூ.300)

குறிஞ்சி நிலக் குறப்பெண்ணின் கூந்தலைப் போல மயில் தன் அழகிய தோகையை விரிப்பதற்கு இடமான நாட்டிற்குத் தலைவன்.

தலைவன் விழைவிற்கு ஒப்பாகவே நம் சுற்றத்தாரும் விழைந்து மகிழ்ச்சியோடு வரவேற்று மகட்கொடையும் தந்தனர் என்னும் உள்ளுறைப் பொருள் அமைகிறது.

### 3.1.2.2.3. பிற உயிரினங்கள்

கபிலர் பாடல்களில் உள்ளுறையாக விலங்கினங்கள், பறவைகள் தவிர்த்து பிற உயிரினங்களும் அமைந்துள்ளன.

#### வண்டு

"பெண்டிர் நலம் வௌவி, தன் சாரல் தாது உண்ணும்
வண்டின் துறப்பான் மலை" (குறி.கலி.40)

மலைச்சாரலிடத்து, தாதினை உண்ட வண்டினம் மீண்டும் அம்மலரைத் தேடாது, வேறொரு மலரை நாடிச் செல்லும். அவ்வண்டு போலத் தலைவன் பெண்டிரின் நலத்தை நுகர்ந்து அவர் வாடுமாறு பிரிந்து சென்றனன் என்பது உள்ளுறை.

### 3.1.2.3. இறைச்சிப் பொருளில் உயிரினங்கள்

கொள்கை கோட்பாடுகளைத் தொகை வகைப்படுத்திக் கற்பதை விட இலக்கியத்தில் ஏற்றிப் பார்க்கும் போது அவை துல்லியமாக அறியப்படும். படைப்பாளி இவ்வாறு படைப்பேன் என அறுதியிட்டு படைப்பதில்லை. பொதுவான திட்டமிடுதல் இருப்பினும் பல திறன்களும்

தாமே அமைந்துவிடுகின்றன. கபிலர் பாடல்களில் இறைச்சிக் கருத்து மேலோங்கியவை எனக் கருதப்பட்ட பாடல்களைக் கொண்டு இறைச்சிப் பொருளை ஆராய்ந்து அறியலாம்.

“கன்றுதன் பயமுலை மாந்த, முன்றில்

தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட!” (குறுந்.225)

யானைக்கன்று தன் தாயின் முலையில் பாலை குடித்து நிற்க, வீட்டின் முன்றிலில் வளர்ந்துள்ள தினைப்பயிரை, அப் பெண்யானை உண்ணுதற்கு இடனாகிய, பெரிய மலைகளையுடைய நாட்டின் தலைவன்.

பெண் யானை முன்றிலில் வளர்ந்த தினைப்பயிரை உண்ணுதல், தலைவியைக் களவில் பெற்று மகிழ்வதைக் குறிப்பதாகும். கன்று பிடியிடம் பால் உண்ணுதல், தலைவியை வரைந்து கொண்டு சுற்றமாக்காமைக் குறித்தது.

“வேங்கை வீ உகும் ஓங்கு மலைக்கட்சி

மயில் அறிபு அறியாமன்னோ;

பயில் குரல் கவரும் பைம் புறக் கிளியே” (நற்.13)

வேங்கை மலர்கள் உதிர்ந்து கிடக்கும் உயர்ந்த மலையில் உள்ள கூட்டில் இருக்கும் மயில்கள் அறிய மாட்டா என்று கருதிக் கொண்டு கிளிகள் தினைக் கதிர்களைக் கவர்ந்து செல்லும். அதனால் தினைக் கதிர்களும் அழிகின்றன. கிளியை ஓட்ட வேண்டிய தலைவியும் இவ்விடத்திலிருந்து எழவில்லை. வேங்கை மலர்கள் உதிர்ந்த கூட்டிலிருக்கும் மயில், தினைக் கதிர்களைக் கிளிகள் கொண்டு போவதனை அறிந்திருக்கும். நாம்

கொய்து கொண்டு போவதனை அம்மயில் அறியா என்று கிளிகள் கருதியதைப் போல உன் களவொழுக்கத்தை நான் அறிந்து வைத்தும் நான் அறியமாட்டேன் என்று நீ கருதி மறைத்தாய் என்று தோழி இறைச்சிப் பொருள் நயம்படக் கூறுகிறாள்.

“ஒடுங்கா எழில்வேழம் வீழ்பிடிக் குற்ற
கடுஞ்சூல் வயாவிற் கமர்ந்து நெடுஞ்சினைத்
தீங்கட் கரும்பின் கழைவாங்கும் உற்றாரின்
நீங்கல் மென்பான் மலை” (குறி.கலி.40)

மடியா அழகுடைய களிற்று யானை ஒன்று, தன் அன்புப் பெண் யானைக்குத் தலைச்சூழால் ஏற்பட்ட வயாநோய் நீங்கத் தருவதற்காக, இனிய கண்ணிலே கிளைத்த நீண்ட கிளைகளை உடைய கரும்புகளை ஒடித்து அளிக்க நின்றது.

தலைவியை முயன்று வரைந்து கொண்டு நம் வயாவிற்குத் தன் மனம் பொருந்தி நாம் விரும்புவனவற்றைத் தந்து மனக்குறை தீர்ப்பான் என்பது குறிப்புப் பொருள்.

யானை எனும் குறிஞ்சி நில விலங்கினம் இறைச்சிப் பொருளில் கபிலரால் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதன் மூலம் யானை எனும் விலங்கினம் மனித உணர்வுகளை தொடர்புப்படுத்திப் பார்க்கும் அளவு உணர்வு நிலையும் அறிவு நிலையும் கொண்டவை என்பது அறியப்படுகிறது. கபிலர் இலக்கியப் பயன்பாட்டில் உவமைக் கூறுவதற்குப் பிற திணை சார்ந்த உயிரினங்களைப் பயன்படுத்தினாலும் இறைச்சி

எனும் உரிப்பொருள் சார்ந்த கருத்தை விளக்க குறிஞ்சி நில உயிரினத்தை மட்டுமே பயன்படுத்தியிருப்பது கருதத்தக்கது.

### 3.1.3. மரபு அடிப்படையில் உயிரினங்கள்

தொல்காப்பியர் இயற்கைக் கூறுகளைத் தெளிவாக உணர்ந்து விளக்கியுள்ளார். கருப்பொருள்களுள் விலங்கு, பறவை ஆகியவை பாடல்களில் வரும்பொழுது நில மரபுகளை ஏற்று வரும். அம்மரபுகளைத் தொல்காப்பியர் மரபியலில் கூறுகிறார். விலங்கு, பறவை ஆகியவை இளமைப் பெயர், ஆண்பாற் பெயர், பெண்பாற் பெயர், என்னும் மூவகைப் பெயர்களையும் ஏற்கும் மரபுகளைத் தொல்காப்பியத்தில் கூறியுள்ளவாறு கபிலர் பாடல்களில் ஆய்ந்தறிந்து விளக்குவது பொருத்தமானதாகும். கபிலர் பாடல்களில் இடம் பெறும் மரபு சார்ந்த இலக்கியப் பதிவுகளை,

1. இளமைப் பெயர்
2. ஆண்பாற் பெயர்
3. பெண்பாற் பெயர்

என்னும் மூன்று பிரிவுகளில் ஆராயலாம்.

#### 3.1.3.1. இளமைப் பெயர்

கபிலர் பாடல்களில் குழவி, மறி, குருளை, பார்ப்பு, பறழ், கன்று, என்னும் ஆறு இளமைப் பெயர்கள் பயின்று வந்துள்ளன.

## 1. குழவி

கலித்தொகையில் குறிஞ்சிக்கலியில் 'குழவி' என்னும் இளமைப்பெயர் தொல்காப்பியர் கூறிய இளமைப்பெயர் மரபுக்கு மாறாக வருடை மானுக்குரிய இளமைப் பெயராக வந்துள்ளதை,

"இருள் தூங்கு இறுவரை ஊர்பு இழிபு ஆடும்
வருடைமான் குழவிய வளமலை நாடனை" (குறி.கலி.43)
"வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போல, பாராட்டி" (குறி.கலி.50)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இதனை மரபு வளர்ச்சி என்று கூறுவது பொருந்தும். மேலும் 'குழவி' எனும் சொல் மக்களினத்தின் இளமைப் பெயராக வருதலே பெரும்பான்மை.

'குழவி' என்பது இக்காலத்தில் 'குழந்தை' என மருவி வழங்கப்படுகின்றது. இவ்வாறு குறிப்பிடுவதனைச்

"சொல்லிய மரபின் இளமை தானே
சொல்லுங் காலை அவையல திலவே" (தொ.பொ.570)

என்னும் தொல்காப்பிய விதியால் மரபென அமைத்துக் கொள்ளலும் பொருந்தும்.

## 2. மறி

தொல்காப்பியர் கூற்றிற்கேற்ப 'மறி' என்னும் இளமைப் பெயர் வருடை மானுக்கும், ஆட்டிற்கும் உரிய சொல்லாக இடம் பெற்றுள்ளது என்பதை,

"வருடை மடமறி ஊர்வு இடைத்துஞ்சும்
இருள்தூங்கு சோலை, இலங்குநீர், வெற்ப" (குறி.கலி.50)
"சிறுகுளகு அருந்து, தாய்முலை பெறாஅ,
மறிகொலைப் படுத்தல் வேண்டி, வெறிபுரி" (அக.நா.292)

என்ற பாடல் வரிகளால் அறியலாம்.

எனவே தொல்காப்பியர் விதிக்கிணங்க வருடைமானின் இளமைப் பெயரைக் குறிக்கும் 'மறி' எனும் சொல் குறிஞ்சிக் கலியிலும், ஆட்டின் இளமைப் பெயரைக் குறிக்கும் 'மறி' எனும் சொல் அகநானூற்றிலும் இடம் பெற்றுள்ளமை இதனின்றும் விளங்குகின்றது.

## 3. குருளை

ஐங்குறுநூற்றில் பன்றியின் இளமைப் பெயராகக் குருளை குறிப்பிடப் பெறுகின்றது.

"புலிகொல் பெண்பால் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பின் கேழல் புரக்கும்" (ஐ.கு.நூ.265)

கருப்பொருள் மரபுகளுக்கேற்ப இச்சொல் பயன்படுத்தப் பெற்றிருப்பதை அறியலாம்.

## 4. பார்ப்பு

ஐங்குறுநூற்றிலும், குறுந்தொகையிலும் குரங்கின் இளமைப் பெயராகப் 'பார்ப்பு' குறிப்பிடப் பெறுகின்றது.

"கருவிரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு" (ஐ.கு.நூ.280)
"நரைமுக ஊகம் பார்ப்பொடு பனிப்ப" (குறுந்.249)

என்ற பாடல் வரிகளில் கருப்பொருள் மரபுகளுக்கேற்ப இச்சொல் பயன்படுத்தப் பெற்றிருப்பதைக் காணலாம்.

**5. பறழ்**

ஐங்குறுநூற்றில் குரங்கின் இளமைப் பெயராகவும், அகநானூற்றில் பன்றியின் இளமைப் பெயராகவும் 'பறழ்' எனும் சொல் குறிப்பிடப் பெறுகின்றது.

"கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்" (ஐ.கு.நூ.272)

"புன்தலை மந்தி வன்பறழ் ஆரும்" (ஐ.கு.நூ.273)

"குரங்கின் வன் பறழ் பாய்ந்தென, இலஞ்சி" (ஐ.கு.நூ.278)

"வயநாய் எறிந்து, வன்பறழ் தழீஇ,

இளையர் எய்துதல் மடக்கி, கிளையொடு" (அக.நா.248)

தொல்காப்பியர் கூறும் மரபு இப்பாடல்களில் அமைந்திருப்பதை அறியலாம்.

**6. கன்று**

குறுந்தொகையில் யானையின் இளமைப் பெயராகக் 'கன்று' எனும் சொல் குறிக்கப் பெற்றிருக்கின்றது.

"கன்று ஆற்றுப்படுத்த புன்தலைச் சிறாஅர்

மன்ற வேங்கை மலர்பதம் நோக்கி" (குறுந்.241)

இதனால் யானையின் இளமைப் பெயரைக் குறிக்கும் 'கன்று' எனும் சொல் கபிலரின் குறுந்தொகைப் பாடலில் தொல்காப்பியர் கூறும் மரபில் அமைந்திருக்கின்றது.

இவற்றால் இளமைப் பெயர்களைக் குறிக்கும் குழவி, மறி, பார்ப்பு, குருளை, பறழ், கன்று எனும் சொற்கள் தொல்காப்பியரின் கோட்பாடுகளுக்கிணங்க கபிலர் பாடல்களில் இடம் பெற்றிருப்பது விளங்குகின்றது. மேலும் மரபு வளர்ச்சியின் காரணமாகத் தொல்காப்பியர் குறிப்பிடாத சில இளமைப் பெயர்களும் கபிலர் பாடல்களில் இடம் பெற்றிருக்கின்றன என்பதையும் சில இளமைப் பெயர்கள் மாறுபட வந்திருப்பினும் அவையும் மரபு வளர்ச்சியினையே தெரிவிக்கின்றன என்பதையும் தெளியலாம்.

## 3.1.3.2. ஆண்பாற் பெயர்

மக்கள், விலங்கு, பறவையினம் ஆகியவற்றின் ஆண்பாற் பெயர்களாகத் தொல்காப்பியர் சிலவற்றைக் குறிப்பிட்டிருக்கின்றார். கபிலர் பாடல்களில் ஆண்பாற் பெயர்களாகக் களிறு, கலை, கடுவன், ஏற்றை, ஒருத்தல், போத்து, வேழம், வாரணம் ஆகியவை வந்துள்ளன. இவற்றுள் வாரணம் தொல்காப்பியர் சுட்டிக் கூறாத பெயராகும்.

### 1. களிறு

‘களிறு’ என்பது யானையின் ஆண்பாற்கே சிறப்புரிமை உடையது ஆகும்.

> “துஞ்சுபிடி மருங்கின் மஞ்சுபட, காணாது
> பெருங்களிறு பிளிறும் சோலை அவர்” (நற்.222)

என்ற பாடல் வரிகளில் ஆண்பால் சொல்லாகக் 'களிறு' என்ற சொல் வழங்கப்பட்டுள்ளது. தொல்காப்பியரின் கருப்பொருள் மரபு கபிலர் பாடல்களில் இவ்வளவில் இடம் பெற்றுள்ளமையும் அறிய முடிகின்றது.

## 2. ஒருத்தல்

கலித்தொகையில் குறிஞ்சிக்கலியில் ஆண் யானையை 'ஒருத்தல்' என்று குறிப்பிடப்பட்டுள்ளதை,

"வாழ்இழி கடாத்த வால்மருப்பு ஒருத்தலோடு
ஆப்பொறி உழுவை, தாக்கிய பொழுதின்" (குறி.கலி.46)

என்ற இப்பாடல் வரிகளின் மூலம் அறியலாம். மேலும் ஐங்குறுநூற்றில்,

"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தலொடு
குறுக்கை இரும்புலி பொரூஉம் நாட" (ஐ.கு.நூ.266)

"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்
துறுகல் அடுக்கத்து வில்லோர் மாற்றி" (ஐ.கு.நூ.267)

என ஆண் பன்றியையும் ஒருத்தல் என்றே கூறப்பட்டுள்ளது.

தொல்காப்பியர் குறிப்பிட்டவாறு கபிலர் பாடல்களில் 'ஒருத்தல்' எனும் சொல் கையாளப்பட்டிருப்பது அறியக் கிடக்கின்றது.

## 3. கலை

அகநானூற்றில்,

"கணக்கலை இகுக்கும் கருங்குரற் தூம்பொடு
மலைப் பூஞ்சாரல் வண்டு யாழ்ஆக" (அக.நா.82)

என்ற பாடல் வரிகளில் மானின் ஆண்பால் பெயரைக் குறிக்கவும், புறநானூற்றில்,

"பயில் இருஞ் சிலம்பில் கலை பாய்ந்து உகளவும்,

கலையும் கொள்ளாவாக" (புற.நா.116)

என குரங்கின் ஆண்பால் பெயரைக் குறிக்கவும் 'கலை' எனும் சொற்கள் கையாளப் பெற்றிருக்கின்றன.

## 4. ஏறு

'ஏறு' எனும் ஆண்பால் பெயர் ஐங்குறுநூற்றில்,

"குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை" (ஐ.கு.நூ.216)

எனப் புலியைக் குறிக்கும் சொல்லாக அமைந்துள்ளது. அகநானூற்றில்,

"தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு" (அக.நா.238)

என காளையைக் குறிக்கும் சொல்லாகவும் இடம் பெற்றிருப்பதை அறிய முடிகிறது.

## 5. கடுவன்

'கடுவன்' எனும் சொல் ஆண்குரங்கைக் குறிக்கும் ஆண்பால் பெயரெனத் தொல்காப்பியர் கூறுகிறார். கபிலர் பாடல்களில்,

"கல்லாக் கடுவன் கணம்மலி சுற்றத்து" (குறி.கலி.40)

"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்" (ஐ.கு.நூ.274)

"குரங்கின் தலைவன் குருமயிர்க் கடுவன்" (ஐ.கு.நூ.275)

எனப் பல இடங்களில் ஆண் குரங்கை, 'கல்லாக் கடுவன்' எனக் குறிக்கப்படுகின்றது.

## 6. போத்து

அகநானூற்றில்,

"பனைமருள் எருத்தின் பல்வரி இரும்போத்து,

மடக்கண் ஆமான் மாதிரத்து அலற" (அக.நா.238)

என்ற பாடல் வரிகளில் ஆண் புலியைப் 'போத்து' என்று குறிப்பிடப்படுகிறது.

## 7. வேழம்

'வேழம்' எனும் சொல் ஆண் யானையைக் குறிக்கும் சொல்லாகும். கபிலர் பாடல்களில் 'வேழம்' எனும் பெயர் ஆண் யானையை உணர்த்தும் முறையில் பல பாடல்களில் பயின்று வந்துள்ளது.

"ஒடுங்கா எழில் வேழம் வீழ்பிடிக்கு உற்ற

கடுஞ்ஞல் வயாவிற்கு அமர்ந்து, நெடுஞ்சினை" (குறி.கலி.40)

"மறம்மிகு வேழம், தன் மாறுகொள் மைந்தினான்" (குறி.கலி.53)

## 8. வாரணம்

'வாரணம்' எனும் சொல் ஆண்பால் பெயராகத் தொல்காப்பியரால் உணர்த்தப் பெறவில்லை. ஆயினும் கலித்தொகையில் ஆண் யானையைக் குறிக்க 'வாரணம்' எனும் சொல்லை கபிலர் பயன்படுத்தியுள்ளமை தெரிய வருகின்றது.

"முறம்செவி வாரணம் முன்குளகு அருந்தி,

கறங்கு வெள்அருவி ஒலின் துஞ்சும்" (குறி.கலி.42)

என்பதில் 'வாரணம்' எனும் சொல் காணப்பெறுகின்றது. இது மரபில் ஏற்பட்ட வளர்ச்சியாகும்.

பாடல்களில் இடம்பெறும் களிறு, ஒருத்தல், வேழம், வாரணம் ஆகிய பெயர்கள் ஆண் யானையைக் குறிக்கும் சொல்லாகக் கூறப்பெறவில்லை. ஆனால் ஆண் யானையைத் தான் உணர்த்துகின்றன என்பதைக் கற்போர் உணரும் வகையில் அதன் கொம்பையோ, மதநீரையோ அடையாகக் கூறி உணர்த்தும் மரபினையும் கபிலர் கையாண்டுள்ளார்.

"மதயானை..... தன் கோடுபுய்க் கல்லாது" (குறி.கலி.38)

"புணர்மருப்பெழில் கொண்ட..... வயங்கெழில் யானை" (குறி.கலி.43)

"நீண்மருப் பெழில் யானை" (குறி.கலி.52)

"ஏந்துகோட் டெழில் யானை" (குறி.கலி.59)

'யானை' என்ற சாதி ஒருமைப் பெயருடன் மருப்பையும் மதத்தையும் குறிப்பிடுவதால் இவ்விடங்களில் ஆண் யானை இஃது என்பது உணரப் பெறுகின்றது. இவ்வாறு அடை புணர்த்துக் கூறுதலும் மரபேயாகும்.

ஆண் யானையை உணர்த்தும் 'வாரணம்' என்னும் சொல்லை தொல்காப்பியர் சுட்டிச் செல்லவில்லை. ஆயினும் இவை மரபு வளர்ச்சியாகக் கொள்ளப் பெறுகின்றன. அல்லது ஆண்பால் பெயரைத் தொகுத்துணர்த்தும் எருதும் ஏற்றையும் எனத் தொடங்கும் மரபியல் நூற்பாவில் பிறவும் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளதால் அதனுள் இவை அடங்கும் எனவும் கொள்ளலாம்.

ஆண்பால் பெயரைக் குறிக்கத் தொல்காப்பியரால் குறிக்கப் பெற்ற பெயர்களுள், களிறு, ஒருத்தல், ஏறு, கடுவன், கலை, போத்து, வேழம் ஆகிய பெயர்கள் கபிலர் பாடல்களில் இடம் பெற்றிருப்பதும் தொல்காப்பியர் குறிப்பிடாத 'வாரணம்' எனும் சொல் கபிலர் பாடல்களில் இடம் பெற்றிருப்பதும் மரபு வளர்ச்சியினையே காட்டுகின்றன.

## 3.1.3.3. பெண்பால் பெயர்

கபிலர் பாடல்களில் மந்தி, பிடி, பெடை, பிணவு, புருவை எனும் பெண்பால் பெயர்கள் பயின்று வந்துள்ளன.

### 1. மந்தி

குரங்கு, முசு, ஊகம் என்னும் மூன்றினத்தின் பெண்பால் பெயரும் 'மந்தி' என்பதாகும்.

கபிலர் பாடல்களில் குரங்கின் பெண்பால் பெயராக மந்தி எனும் சொல் வந்துள்ளது.

"கருவிரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு" (ஐ.கு.நூ.280)

"புன்றலை மந்தி தூர்ப்பத் தந்தை" (நற்.373)

"மந்திக் காதலன் முறிமேய் கடுவன்" (ஐ.கு.நூ.276)

### 2. பிடி

'பிடி' என்பது யானையினத்தின் பெண்பால் பெயராகும்.

"இரும்பிணர்த் துறுகல் பிடிசெத்துத் தழூஉம் நின்"(ஐ.கு.நூ.239)

"யாழ்இசைப் பறவை இமிர, பிடி புணர்ந்து" (அக.நா.332)

என்ற பாடல் வரிகளில் பெண் யானையைப் 'பிடி' என்றழைக்கும் மரபினைக் காணலாம்.

### 3. பெடை

தொல்காப்பியரின் கொள்கைக்கிணங்க பறவையினத்தின் பெண்பால் பெயராக 'பெடை' எனும் சொல் வந்துள்ளது.

"ஆய்தூவி அனம் என, அணிமயிற் பெடை என" (குறி.கலி.56)

என்ற வரியில் பெண்மயில் பெடை எனும் சொல்லால் குறிக்கப் பெறுவது நோக்கத்தக்கது.

### 4. பிணவு

பன்றி, புல்வாய், நாய் ஆகிய மூன்றினுக்கும் பெண்பால் பெயர் 'பிணவு' என்பதாகும்.

"பிணர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு

கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்" (நற்.336)

எனப் பெண் பன்றியைக் குறிக்கும் சொல்லாக 'பிணவு' என்னும் சொல் வந்துள்ளது.

தொல்காப்பியர் விதிக்கு மாறாகப் 'பிணவு' பெண் புலியையும் குறிக்கும் மரபைக் கபிலர் பாடலில் காணலாம்.

"ஈன்றுஇளைப் பட்ட வயவுப்பிணப் பசித்தென,

மடமான் வல்சி தரீஇய, நடுநாள்" (அக.நா.238)

என அகநானூற்றுப் பாடலில் 'பிணவு' எனப் பெண்புலி குறிக்கப்படுகிறது. இது மரபில் ஏற்பட்டதொரு புதுமையைத் தெரிவிக்கின்றது.

## 5. பிணை

புல்வாய் நவ்வி, உழை, கவரி என்னும் நான்கு இனத்தின் பெண்பாற்பெயர் 'பிணை' என்பதாகும்.

தொல்காப்பியர் குறிப்பிட்ட இப் 'பிணை' எனும் சொல், குறிஞ்சிக்கலியில் பல பாடல்களில் கையாளப் பெற்றிருக்கின்றது.

நவ்வி (மான்) இனத்தின் பெண்பால் பெயராகப் பிணை எனும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது என்பதை,

"பேர்எழில் மலர்உண்கண், பிணை எழில்மான் நோக்கின்" (குறி.கலி–58)

என்ற வரியின் மூலம் அறியலாம்.

பெண்பால் பெயரைக் குறிக்கத் தொல்காப்பியரால் சுட்டிக் கூறப்பட்ட பிடி, பெடை, மந்தி, பிணவு, பிணை ஆகிய பெண்பால் பெயர்கள் கபிலர் பாடல்களில் இடம் பெற்றுள்ளன. பிணவு என்னும் மக்கட்குரிய பெண்பால் பெயர் விலங்கின் பெண்பாலை உணர்த்தும் பெயராகவும் அமைந்துள்ளன.

விலங்கு, பறவை இனங்களின் பெண்பால் பெயர்களைக் குறிக்கும் சொற்கள் தொல்காப்பியரின் மரபுச் சொற்களை அடியொற்றி வந்திருக்கின்றன என்பதும், தொல்காப்பியர் குறிப்பிடும் சில சொற்கள்

பிற விலங்குகளுக்குரியதாக காணப்படுவதால் அவை மரபில் தோன்றிய காலத்திற்கேற்ற வளர்ச்சியினைக் குறிக்கும் என்பதும் இவற்றினின்றும் பெறப்படுகின்றன.

இளமைப் பெயர்களைக் குறிக்கும் குழவி, மறி, பார்ப்பு, பறழ், கன்று, மகவு என்னும் சொற்கள் தொல்காப்பியரின் கோட்பாடுகளுக்கிணங்கக் கபிலர் பாடல்களில் இடம் பெற்றிருக்கின்றன.

மரபு வளர்ச்சி எனக் கருதத்தக்க வகையில் தொல்காப்பியர் குறிப்பிடாத சில இளமைப் பெயர்களும், தொல்காப்பியர் குறிப்பிட்ட சில இளமைப் பெயர்கள் மாறுபட்ட பொருளிலும் கபிலர் பாடல்களில் வந்துள்ளன.

ஆண்பால் பெயரைக் குறிக்கத் தொல்காப்பியர் சுட்டிக் கூறியவற்றுள் களிறு, கலை, கடுவன், ஏற்றை, ஒருத்தல், போத்து, வேழம் ஆகியனவும் 'வாரணம்' எனும் சொல்லும் கபிலர் பாடல்களில் இடம் பெற்றிருக்கின்றன. சுட்டிக் கூறாத பெயர்கள் மரபு வளர்ச்சியினைக் காட்டி நிற்கின்றன. பெண்பால் பெயரைக் குறிக்கத் தொல்காப்பியரால் கூறப்பட்டனவற்றுள் பிடி, பெடை, மந்தி ஆகியனவும் பிணவு, பிணை ஆகிய சொற்களும் கபிலர் பாடல்களில் இடம் பெற்று மரபில் ஏற்பட்ட வளர்ச்சியைத் தெரிவிக்கின்றன.

## II. வருணனை நோக்கில் உயிரினங்கள்

3.2.1. செயல் வருணனை

3.2.1.1 யானை

3.2.1.2. புலி

3.2.1.3. பன்றி

3.2.1.4. குரங்கு

3.2.1.5. குதிரை

3.2.1.6. ஆடு

3.2.1.7. கரடி

3.2.1.8. நாய்

3.2.1.9. பசுவும் எருதும்

3.2.1.10. மான்

3.2.1.11. மரையா

3.2.1.12. முள்ளம்பன்றி

3.2.1.13. அன்றில்

3.2.1.14. அன்னம்

3.2.1.15. சிறுவெண்காக்கை

3.2.1.16. கிளி

3.2.1.17. குருவி

3.2.1.18. நாரை

3.2.1.19. கூகை

3.2.1.20. மயில்

3.2.2. உடல் வருணனை

3.2.2.1. நிறம் சார்ந்த வருணனை

3.2.2.2. அளவு சார்ந்த வருணனை

3.2.2.3. வடிவம் சார்ந்த வருணனை

## II. வருணனை நோக்கில் உயிரினங்கள்

கபிலர் பாடல்களில் இடம்பெறும் உயிரினங்களை இரண்டு வகையில் பகுத்து ஆராயலாம்.

1. செயல் வருணனை
2. உடல் வருணனை

### 3.2.1. செயல் வருணனை

கபிலர் பாடல்களில் உயிரினங்களின் செயல்கள் குறித்த செய்திகள் இடம் பெறுகின்றன. உயிரினங்களின் செயல் வருணனையை அடிப்படையாகக் கொண்டு அவ்வுயிரினங்களின் காதல், தாய்மையுணர்வு, வீரம், உணவு, இருப்பிட அமைப்பு, இயல்பு நிலை ஆகியவற்றை ஆராய்ந்து அறியலாம்.

அவ்வகையில் கபிலர் பாடல்களில் செயல் வருணனை கொண்டு அமையும் விலங்கினங்களை,

1. யானை
2. புலி
3. பன்றி
4. குரங்கு
5. குதிரை
6. ஆடு

7. கரடி
8. நாய்
9. பசு
10. எருது
11. மான்
12. மரையா
13. முள்ளம்பன்றி
14. அன்றில்
15. அன்னம்
16. சிறுவெண்காக்கை
17. கிளி
18. குருவி
19. நாரை
20. கூகை
21. மயில்

என்று பகுத்து ஆராயலாம்.

### 3.2.1.1. யானை

தொன்மையான தமிழ் பண்பாட்டின் வரலாற்றை ஆராயும் போது யானை ஒரு பெரிய, பலம் கொண்ட, வளம் கொண்ட, அழகு விலங்காகவே போற்றப்பட்டிருக்கிறது. இலக்கியங்கள் மட்டுமில்லாமல்

மன்னர்களின் சாசனங்கள், பட்டயங்கள், கல்வெட்டுகள், சிற்பங்கள் யாவிலும் யானை இடம் பெற்றிருக்கிறது. வள்ளுவரும் திருக்குறளில் யானையைப் பற்றி எடுத்துரைக்கிறார்.

"பரியது கூர்ங்கோட்டது ஆயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்" (குறள்.599)

யானை பருத்த உடம்பை உடையது. கூர்மையான தந்தங்களை உடையது. ஆயினும் ஊக்கமுள்ளதாகிய புலி தாக்கினால் அஞ்சி நடுங்கும்.

கபிலர் தம் பாடல்களில் குறிஞ்சித்திணைக்கே உரித்தான சிறப்புடைய யானையைப் பற்றி (61) அறுபத்தொறு பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

நற்றிணையில் எட்டுப் பாடல்களிலும் (65, 217, 222, 225, 253, 336, 353, 376), குறுந்தொகையில் ஒன்பது பாடல்களிலும் (13, 100, 142, 198, 208, 225, 241, 246, 357), ஐங்குறுநூற்றில் ஐந்து பாடல்களிலும் (216, 218, 239, 246, 266), கலித்தொகையில் பதினைந்து பாடல்களிலும் (40, 41, 42, 43, 44, 45, 46, 48, 49, 50, 52, 53, 55, 56, 57), அகநானூற்றில் பத்துப் பாடல்களிலும் (12, 18, 82, 118, 128, 218, 238, 278, 292, 332), புறநானூற்றில் ஏழு பாடல்களிலும் (14, 114, 119, 200, 201, 337, 347) பதிற்றுப்பத்தில் ஆறு பாடல்களிலும் (61, 62, 64, 67, 69, 70) குறிஞ்சிப்பாட்டிலும் யானை பற்றிய செய்திகள் இடம் பெற்றுள்ளன.

## யானையின் அன்புணர்வு

கபிலர் காட்டும் குறிஞ்சி நிலப் பகுதியில் கூட்டம் கூட்டமாக வாழும் யானைகள் அஃறிணை உயிரே ஆயினும் களிறும் பிடியும் உயர்திணை மக்களைப் போலவே ஒத்த வாழ்க்கை நடத்தும் இயல்பு கொண்டவை. தனது காதல் மடப்பிடி துன்புறுதலைப் பார்க்கப் பெருங்களிறு ஒரு பொழுதும் பொறுத்துக் கொள்ளாது என்பதை அவற்றின் செயல் குறித்த வருணனை மூலம் அறியலாம். கபிலர் பாடல்களில் யானையின் காதல், தாய்மை, சுற்றம் தழுவுதல், போர்க்குணம், மதநிலை, உணவு முறை ஆகிய இயல்புகள் வெளிப்படுகின்றன.

## காதல்

மடிந்திராத எழிலையும் புகழையும் உடைய மதகளிறொன்று, கருவுயிர்த்துத் துன்புறும் தனது அன்பிற்குரிய மடப்பிடியின் பசியை ஒழிப்பதற்காக உணவு நாடி ஓடியது. பலவிடங்களில் அலைந்த பிறகு கரும்புத் தோட்டத்தைக் கண்ணுற்று, விரும்பியுண்ணும் மடப்பிடிக்கு இனிய சுவையையுடைய கரும்பின் கோல்முறித்துச் சென்று கொடுத்து மகிழ்வுற்றது.

> "ஒடுங்கா எழில்வேழம் வீழ்பிடிக்கு உற்ற
> கடுஞ்சூல் வயாவிற்கு அமர்ந்து, நெடுஞ்சினைத்
> தீங்கண் கரும்பின் கழைவாங்கும்" (குறி.கலி.40)

என்ற பாடல் அடிகள் இதனை எடுத்துக்காட்டுகின்றன.

## தாய்மை

"கன்றுதன் பயமுலை மாந்த, முன்றில்

தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட" (குறுந்.225)

யானைக் கன்று தன் தாயின் முலையில் பாலைக் குடித்து நிற்கிறது. பெண் யானை வீட்டின் முன்றிலில் வளர்ந்துள்ள தினைப்பயிரை உண்ணுகிறது. இப்பாடலில் பிடியின் தாய்மையுணர்வு வெளிப்படுகிறது.

## சுற்றம் தழுவுதல்

தன் இனத்தைப் பேணிப் பாதுகாத்துப் போற்றும் விரைந்த நடையை உடைய களிறானது முதலில் மூங்கில் முளைகளையும், பின்னர் தன் இனம் விரும்பும் தழைகளையும் கொண்டு வந்து கொடுத்து அவற்றை உண்பிக்கும்.

"கிளைபா ராட்டும் கடுநடை வயக்களிறு

முளைதருபு ஊட்டி, வேண்டுகுளகு அருத்த" (அக.நா.218)

இப்பாடலடிகள் தன் சுற்றத்தைப் பேணிக் காக்கும் பண்பை விளக்குகின்றன.

## யானையின் போர்க்குணம்

மதம் பொருந்திய யானைகள் உருவத்தால் பெரியதாகினும் தம்மினும் உருவத்தில் சிறிய புலிகளைக் கண்ட காலத்தும், காணாத காலத்தும் அஞ்சி நடுங்கும் இயல்புடையன. இவற்றிலும் வீரம் செறிந்த வேழங்கள், வலிய புலியை எதிர்த்துத் தாக்கிக் கொல்வதும் உண்டு. இப்போரில் தானே இறப்பதும் உண்டு.

"புகர்முகக் களிறொடு புலிபொருது உழக்கும் நின்"(குறி.கலி.45)

"மறங்கொள் இரும்புலித் தொன்முரண் தொலைத்த"(குறி.கலி.42)

யானை வேங்கை மரத்தின் மீது தாக்குவதை எழில் நலம் மிக்க காட்சியாகக் கபிலர் வருணிக்கிறார்.

வேங்கை மரங்கள் மலர் செறிந்து இருக்கும் காட்சி வேங்கைப் புலியைப் போலத் தோற்றமளிக்கும். அதனை அடங்காத தன் ஆற்றலால் சாய்த்து அழிக்கும். இதனை,

"புதுவதாக மலர்ந்த வேங்கையை
'அது' என உணர்ந்து அதன்அணி நலம் முருக்கிப்
பேணா முன்பின் தன்சினம் தணிந்து, அம்மரம்
காணும் பொழுதில் நோக்கல் செல்லாது
நாணி இறைஞ்சும் நன்மலை நன்னாட" (குறி.கலி.49)

என்ற அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

இரண்டு ஆண் யானைகள் ஒரு பெண் யானைக்காகவோ தலைமைக்காகவோ மோதிக் கொள்வதுண்டு. அப்போது கூரான தந்தங்களால் ஒன்றையொன்று தாக்கக் கூடும். இதனால் கடும் காயங்களை ஏற்படுத்திக் கொண்டாலும் ஒரு முடிவு தெரியும் வரை நடக்கும் சண்டையில் அரிதாக இரண்டிலொன்று கொல்லப்படலாம். மலைச்சாரலில் தன் இனிய பிடியோடு பாறையின் மேல் கூடியிருந்தது ஒரு களிறு. அப்போது அந்தப் பிடியை விரும்புகின்ற ஆசையானது மேலெழ, மற்றொரு களிறும் அவ்விடத்திற்கு வரவே, அதற்குச் சினம் எழுந்தது. வந்த களிற்றின் நெற்றியிலே தன் கொம்புகள் புதையுமாறு குத்தி

அதனைத் துரத்திற்று. அதன் கொம்பு முனைகள் எதிர்வந்த யானையின் செந்நீரால் சிவந்து தோன்றின.

> "விறல்மலை, வியல்அறை, வீழ்பிடி உழையதா
> மறம்மிகு வேழம், தன்மாறுகொள் மைந்தினான்
> புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல" (குறி.கலி. 53)

என்ற பாடல் வரிகள் இதனை உணர்த்துகின்றன.

## மதநிலை

யானைகளின் கன்னத்துக்குச் சற்று மேலே அமைந்துள்ள ஒரு சுரப்பியிலிருந்து சுரக்கும் திரவமே மதநீர் எனப்படுகிறது. அந்நீர் சுரக்கும் காலத்தில் அந்த யானைகளிடம் காணப்படும் உடலியல் மாற்றங்கள் மற்றும் நடவடிக்கைப் போக்குகளே 'மதநிலை' எனக் கூறப்படுகிறது. இந்தச் சுரப்பி எல்லா யானைகளிலும், எல்லா நேரங்களிலும் இயங்குவதில்லை. அது இயங்கும் காலத்தில் அந்தச் சுரப்பி உள்ள நெற்றிப்பகுதி வீங்கி, சுரப்பியின் திறப்பு வழியாக மதநீரான கரிய திரவம் கன்னத்தில் வடியும் வரை அந்த வடிசலின் தாரை கன்னத்தைக் கரையாக்கி ஒரு கடிய வாடையையும் பரப்பும். மதநிலையின் போது ஆண் யானைகள் அவ்வப்போது நெடிமிக்க சிறுநீரைப் பீச்சித் தெளிப்பதும் உண்டு.

மதநீர்ச்சுரப்பி ஆணுக்கும், பெண்ணுக்கும் இருந்தாலும் குறிப்பாக முதிர்ந்த ஆண் யானைகளுக்கே அது நன்கு இயங்குகிறது.பொதுவாக யானைகளுக்கு ஆண்டிற்கு ஒருமுறை, அவற்றின் வயதைப் பொறுத்து,

சில நாட்களிலிருந்து சிலமாத காலம் வரை மதநிலை தோன்றும் அல்லது நீடிக்கும்.

தலைவன் வரும் வழியிலுள்ள காட்டாறு, மதத்தானே தன் பிடியுடனும் கன்றுடனும் தழுவுதலைப் பெறாத களிற்றியானையின் மதம் கெட மோதி அழித்து அதனை வலிமையுடன் இழுக்கும். இதனை,

"மராஅ யானை மதம்தப ஒற்றி,
உராஅ ஈர்க்கும் உட்குவருள நீத்தம்" (அக.நா.18)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

மதத்தால் அறிவு கெட்ட களிறானது, குத்துக் கோலாரின் ஆணைக்கு அடங்காது கட்டுப்பாடுகளைக் கடந்து செயலாற்றி விளங்கும்.

"காழ்வரை நில்லாக் கடுங்களிறு அன்னோன்
தொழூஉம்; தொடூஉம் அவன் தன்மை" (குறி.கலி.55)

என்ற பாடல் வரிகள் யானையின் மதநிலையை எடுத்துக்காட்டுகின்றன.

**உணவு**

யானைகள் உண்ணும் உணவு பற்றி சில பாடல்கள் மூலம் அறிய முடிகிறது.

"நெற்கொள் நெடுவெதிர்க் கனந்த யானை" (குறி.பா.வ.35)

"காய்நெல் கவளம் தீற்றி, காவு தொறும்
கடுங்கண் யானை காப்பனர் அன்றி" (புற.நா.337)

"புணர்நிலை வளகின் குளகுஅமர்ந்து உண்ட" (குறி.கலி.43)

"முறஞ்செவி வாரணம் முன்குளகு அருந்தி

கறங்குவெள் அருவி ஒலின் துஞ்சும்" (குறி.கலி. 42)

"தினைபிடி உண்ணும் பெருங்கல் நாட" (குறுந்.225)

"கிளைபா ராட்டும் கடுநடை வயக்களிறு

முளைதருபு ஊட்டி, வேண்டுகுளகு அருத்த" (அக.நா.218)

என்ற பாடல் வரிகள் யானைகள் மூங்கிலின் முளைகளையும், குளகையும், வளகென்னும் புதலின் தழைகளையும், தினையையும், உணவாகக் கொண்டும் அருவி நீரைப் பருகியும் வாழ்ந்தன என்பதை விளக்குகின்றன. குறிஞ்சி நிலத்தின் தனிப்பெருஞ்செல்வமாக விளங்கும் மலையைப் போலவே, யானையும் விளங்கியது என்பது அறியப் பெறுகின்றது.

### 3.2.1. 2. புலி

குறிஞ்சி நிலத்தில் காணப்படும் விலங்குகளுள் புலியும் ஒன்று. பொதுவாக நோக்குமிடத்து புலிகளே யானைகளைக் காட்டினும் வலிமையுடையன என்பதை இலக்கியங்கள் நமக்கறிவிக்கின்றன. தான் கருதிய பொருள் தன் கைக்குக் கிடைக்காத பொழுது புலி கொள்ளும் சினம் மிகுதியானது.

கபிலர் புலியைப் பற்றி (25) இருபத்தைந்து பாடல்களில் குறிப்பிட்டுள்ளார்.

நற்றிணையில் நான்கு பாடல்களிலும் (65, 217, 336, 353), குறுந்தொகையில் ஒரு பாடல்களிலும் (241), ஐங்குறுநூற்றில் ஆறு பாடல்களிலும் (216, 218, 246, 265, 266, 274), கலித்தொகையில் ஏழு

பாடல்களிலும் (38, 43, 45, 46, 48, 52, 65), அகநானூற்றில் ஐந்து பாடல்களிலும் (118, 158, 218, 238, 332), புறநானூற்றில் ஒரு பாடல்களிலும் (202) குறிஞ்சிப்பாட்டிலும் புலி பற்றிய வருணனைக் காட்சிகள் இடம் பெறுகின்றன.

## அன்புணர்வு

யானையைப் போலவே புலியும் கிளை பாராட்டும் குணம் உடையது. மரங்கள் நெருங்கி வளர்ந்த குறுங்காட்டில் குட்டிகளை ஈன்று அவற்றுக்குப் பாதுகாவலாக அமைந்த வயா வருத்தத்தினை உடைய பெண்புலி பசியுடன் உள்ளது. அதற்கு இளைய மானை உணவாகக் கொண்டு வந்து தரவேண்டி ஆண்புலி இரைதேடிப் புறப்பட்டது. வளைந்த கொம்பினைக் கொண்ட காட்டுப்பசுவை வலப்பக்கம் வீழுமாறு வீழ்த்தி, அகன்ற பாறைகள் குருதியால் சிவக்குமாறு இழுத்துச் சென்று தனது காதல் துணைக்கு உணவாக்கி மகிழ்ச்சி கொள்ளுகின்றது.

> "ஈன்றுஇளைப் பட்ட வயவுப்பிணப் பசித்தென,
> மடமான் வல்சி தரீஇய, நடுநாள்,
> இருள்முகைச் சிலம்பின், இரைவேட்டு எழுந்த,
> பணைமருள் எருத்தின் பல்வரி இரும்போத்து" (அக.நா.238)

என்ற அடிகள் புலியின் அன்பையும், வன்மையையும் எடுத்துக்காட்டுகின்றன.

## புலியின் போர்க்குணம்

புள்ளிமுகக் களிறுகளோடு புலிகள் சண்டையிட்டுக் கிடக்கும் என்பதை,

"புகர்முகக் களிறொடு புலிபொருது உழக்கும்நின்
அகன்மலை அடுக்கத்த அமைஎய்க்கும்" (குறி.கலி.135)

இப்பாடல் வரிகள் விளக்குகின்றன.

"களிறுகோட் பிழைத்த கதம்சிறந்து எழுபுலி" (ஐ.கு.நூ.218)

புலி தான் கொல்லக்கருதிய களிற்றியானை தப்பியமையால் சினம் மிக்கு எழுந்த புலி மழை பொழிதற்குத் திரண்டெழுந்த முகில் முழங்குவது போல் முழங்கும். பன்றிகளோடும் புலிகள் சண்டையிடும் என்பதை,

"புலிகொல் பெண்பால் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பின் கேழல் புரக்கும்" (ஐ.கு.நூ.265)

என்ற பாடலடிகளால் அறியலாம்.

"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தலொடு
குறுக் கைஇரும்புலி பொரூஉம் நாட" (ஐ.கு.நூ.266)

என்ற பாடல் வரிகளில் சிறிய கண்களையும், பெருஞ்சினத்தையும் உடைய ஆண் பன்றி, குறுகிய முன்னங்கால்களை உடைய புலியோடு போரிடற்கு இடனான மலைப்பகுதி என்பதை அறிய முடிகிறது.

## புலியின் உணவு

புலிகள் யானையோ, மானோ, மாடோ கிடைக்காத பொழுது தறுகட் பன்றியை வலம்பட வீழ்த்தித் தின்றன. மலையகத்து வாழும் உயிர்களில்

எதுவும் கிடைக்காத பொழுது, மனிதர்களேனும் கிடைப்பார்களா என்று வயப்புலி, வழிமேல் விழிவைத்து மறைந்து பார்த்துக் கொண்டிருக்குமாம்.

"மடக்கண் ஆமான் மாதிரத்து அலற,

தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு

நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி" (அக.நா.238)

என்ற பாடல் வரிகளில் இளைய மானைத் தேடி இரைதேடிப் புறப்படுவதும், வளைந்த கொம்பினை உடைய காட்டுப்பசுவை வலப்பக்கம் வீழுமாறு வீழ்த்துவதும் அறியப்படுகிறது.

"இருள்மயங்கு யாமத்து இயவுக்கெட விலங்கி,

வரிவயங்கு இரும்புலி வழங்குநர்ப் பார்க்கும்

பெருமலை விடரகம் வர அரிது' (அக.நா.218)

என்பதில் மனிதர்களை எதிர்பார்த்திருக்கும் புலி என்பது பெறப்படுகிறது.

"குறுங்கை இரும்புலிக் கோல்வல் ஏற்றை

நெடும்புதல் கானத்து மடப்பிடி ஈன்ற

நடுங்குநடைக் குழவி கொளீஇய" (ஐ.கு.நூ.216)

என்பதில் யானை ஈன்ற இளங்களிற்றினைப் பற்றித் தின்னுதற்பொருட்டுப் புலி பதுங்கியிருக்கும் என்று குறிப்பிடப்படுகிறது.

### 3.2.1.3. பன்றி

குறிஞ்சி நிலத்தில் வாழும் விலங்குகளுள் ஒன்றான பார்த்தற்கு வெறுப்பூட்டத் தக்கனவும், அழகே சிறிதும் இல்லாதனவுமான பன்றிகள் கூடக் கபிலர் பாடல்களால் அழகுற்றுத் தோன்றுகின்றன. கிழங்கும் தினையும் மலைப்பக்கத்தே மிகுதியாகக் கிடைப்பதால், அங்கே பன்றிகள்

மிகுதியாக வாழ்ந்தன. கபிலர் பன்றியைக் குறித்து (13) பதின்மூன்று பாடல்களில் பாடியுள்ளார். நற்றிணையில் ஒரு பாடலிலும் (336), ஐங்குறுநூற்றில் (261, 262, 263, 264, 265, 266, 267, 268, 269, 270) பத்துப்பாடல்களிலும், அகநானூற்றில் இரண்டு பாடல்களிலும் (18, 248) பன்றி பற்றிய காட்சிகள் இடம் பெறுகின்றன.

## பன்றியின் அன்புணர்வு

புலியால் கொல்லப்பட்ட பெண் பன்றியின் அழகிய வரிகளைத் தம் மேனியில் கொண்ட குட்டிகளை அவற்றின் தந்தையாகிய, வளைந்த வெண்மையான பற்களைக் கொண்ட ஆண் பன்றி பேணிக் காக்கும்.

"புலிகொல் பெண்பால் பூவரிக் குருளை
வளைவெண் மருப்பின் கேழல் புரக்கும்" (ஐ.கு.நூ.265)

என்ற அடிகள் பன்றின் அன்புணர்வை எடுத்துக்காட்டுகின்றன.

## போர்க்குணம்

அஞ்சாமையுடைய ஆண் பன்றியானது வலிமை மிக்க வேட்டை நாயைச் சினந்து எதிர்த்து விரட்டியது. தன்னை நோக்கி வேடர்கள் நெருங்கிவருதலைத் தடுத்து நிறுத்தியது. பெண் பன்றி வலிய குட்டிகளை அணைத்துக் கொண்டு தன் இனத்துடன் தப்பிப் போகும்படிச் செய்தது. பின்னர் காட்டிலிருந்து வெளிவந்து நுழைதற்கரிய வாயிலையுடைய ஒரு முடுக்கின் கண் வேட்டையாடும் ஆட்களை எதிர்பார்த்து நின்றது. இதனைக் கண்ட வேடன் அம்பினை அப்பன்றியின் மேல் செலுத்தாது மீண்டான். இதனை,

"வயநாய் எறிந்து, வன்பறழ் தழீஇ,

இளையர் எய்துதல் மடக்கி, கிளையொடு

நால்முலைப் பிணவல் சொலிய, கான் ஒழிந்து,

அரும்புழை முடுக்கர் ஆள்குறித்து நின்ற

தறுகட், பன்றி நோக்கி, கானவன்" (அக.நா.248)

என்ற வரிகள் உணர்த்துகின்றன.

**உணவு**

பன்றி கானவர்கள் விளைவிக்கும் தினையைப் பெரிதும் விரும்பி உண்டு வாழும். ஐவன நெல்லையும், மலைப்பக்கமெங்கும் உள்ள கிழங்குகளையும் உண்டு வாழும் தன்மையுடையது.

"மென்தினை மேய்ந்த தறுகட் பன்றி" (ஐ.கு.நூ.261)

"கிழங்கு அகழ் கேழல்உழுத சிலம்பில்" (ஐ.கு.நூ.270)

"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்

துறுகல் அடுக்கத்து வில்லோர் மாற்றி

ஐவனம் கவரும் குன்ற நாடன்" (ஐ.கு.நூ.267)

என்ற பாடல் வரிகள் பன்றியின் உணவு குறித்த செய்தியை எடுத்துரைக்கிறது.

### 3.2.1.4. குரங்கு

கனிவகைகளும் பிறவும் மிகுதியாகக் கிடைக்கும் மலைப்பக்கத்தே, குரங்குக் கூட்டங்கள் அதிகமாக வாழும். நற்றிணையில் இரண்டு பாடல்களிலும் (353, 373), குறுந்தொகையில் ஐந்து பாடல்களிலும் (38, 121, 153, 288, 385), ஐங்குறுநூற்றில் 'குரக்குப்பத்து' எனும் தலைப்பில் (271

முதல் 280 வரை) பத்துப்பாடல்களிலும், கலித்தொகையில் (40, 43) இரண்டு பாடல்களிலும், அகநானூற்றில் நான்கு பாடல்களிலும் (2, 82, 182, 382), புறநானூற்றில் மூன்று பாடல்களிலும் (116, 200, 236), என குரங்கு பற்றிய காட்சிகளை இருபத்தாறு (26) பாடல்களில் கபிலர் வருணித்துள்ளார்.

## குரங்கின் அன்புணர்வு

மக்களைப் போலவே குரங்குகளும் மணவாழ்க்கையை மேற்கொண்டனவென்று சில குறிப்புகளால் அறிய முடிகின்றது. கல்லாக் கடுவனொன்று நெடுநாளாகக் களவொழுக்கத்தில் ஈடுபட்டிருந்தது. களவொழுக்கத்திலேயே நெடுநாள் ஒழுக முடியாமல் கடிமணம் புரிந்து கொள்ள அக்கடுவன் விரும்பியது. தனது சுற்றத்திடையே சென்று, தனது மனம் கவர்ந்த மந்தியை மணந்து கொள்ள இவளை எனக்குத் தருக என்பது போல, விரலினை நீட்டி இசைவு கேட்டு எதிர்பார்த்து நின்றது.

> "கல்லாக் கடுவன் கணம்மலி சுற்றத்து,
> மெல்விரல் மந்தி குறைகூறும் செம்மற்றே,
> தொல்லெழில் தோய்ந்தார் தொலையின், அவரினும்
> அல்லற் படுவான் மலை" (குறி.கலி. 40)

என்ற அடிகள் கடுவனின் கடிமண வேட்கைக்குச் சான்றாக அமைகிறது. இக்கருத்தை நோக்க டார்வினின் பரிணாமக் கொள்கையின் படி குரங்கிலிருந்து மனிதன் பரிணாமம் கொண்டான் என்ற தத்துவம் அக்காலத்திலேயே இருந்ததோ எனும் முடிவுக்கு ஏற்புடையதாகின்றது.

குரங்குகள் கூட்டமாக வாழும் தன்மையுடையது. மரத்திற்கு மரம் தாவும் இயல்புடையன. குரங்கு அருவி நீரில் பாய்ந்து விளையாடும். அருவி நீரில் பாய்ந்த கரிய விரலையுடைய மந்தியானது, நீரில் வருகின்ற வளமான காப்பினையுடைய பலாப்பழத்தைத் தெப்பமாகப் பற்றிக் கொண்டு பக்கமலையில் உள்ள ஊரின் துறைமுன்பு வந்து இறங்கும்.

"அருவி பாய்ந்த கருவிரல் மந்தி
செழுங்கோட் பலவின் பழம்புனையாக
சாரல் பேர்ஊர் முன்துறை இழிதரும்
வறன்உறல் அறியாச் சோலை" (அக.நா.382)

என்ற அடிகள் குரங்கின் அரிய செயலை எடுத்துக் காட்டுகின்றன.

## குரங்கின் வேடிக்கையான செயல்

கரிய விரல்களைக் கொண்ட மந்தியினது இளங்குட்டி, முயன்று கல்லாமல் இயல்பாகவே தன் தாயைப் பற்றிக் கொள்ளும் திறன் கொண்டது. இது ஏறற்கு அரிதான மலையில் இருக்கின்ற தேன் இறாலின் கண்ணுள்ள தேனைப் பருகிட எண்ணி அதிலுள்ள தேனீக்களைக் கலைத்து எழுப்பி விட்டுப் பின்னர் அயலே உள்ள அச்சந்தரும் நெடிய கிளையின் மேலே பாயும்.

"கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்
அருவரைத் தீம்தேன் எழுப்பி, அயலது
உருகெழு நெடுஞ் சினைப்பாயும் நாடன்" (ஐ.கு.நூ.272)

என்ற பாடலடிகள் குரங்கு குட்டியின் வேடிக்கையான செயலை நகைச்சுவையாகக் காட்டுகின்றன.

### குரங்கின் அச்சம்

குரங்கு வலிமை சான்ற புலிக்கும், குறவர் எய்தும் அம்பிற்கும் அஞ்சும் தன்மையுடையது.

"மந்திக் கணவன் கல்லாக் கடுவன்,
ஒண்கேழ் வயப்புலி குழுமலின், விரைந்து உடன்
குன்று உயர் அடுக்கம் கொள்ளும் நாடன்" (ஐ.கு.நூ.274)
"பலவில் சேர்ந்த பழம்ஆர் இனக்கலை,
சிலைவிற் கானவன் செந்தொடை வெரீஇ,
செருஉறு குதிரையின் பொங்கி, சாரல்,
இருவெதிர் நீடுஅமை தயங்கப் பாயும்" (குறுந்.385)

என்ற பாடலடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

### குரங்கின் விளையாட்டு

"கான மஞ்ஞை யறையீன் முட்டை
வெயில்ஆடு முசுவின் குருளை உருட்டும்" (குறுந்.38)

காட்டில் உள்ள மயிலானது, பாறையில் ஈன்ற முட்டைகளைக் கருங் குரங்கின் குட்டிகள், உருட்டி விளையாடும்.

### 3.2.1.5. குதிரை

குதிரை தேரில் பூட்டப் பயன்பட்டதாகக் கபிலர் குறிப்பிடுகிறார்.

கபிலர் குதிரையைப் பற்றி பன்னிரண்டு பாடல்களில் பாடியுள்ளார். குறுந்தொகையில் ஒரு பாடலிலும் (385), நற்றிணையில் இரண்டு பாடல்களிலும் (267, 291), ஐங்குறுநூற்றில் ஒரு பாடலிலும் (202), பதிற்றுப்பத்தில் ஐந்து பாடல்களிலும் (62, 64, 65, 69, 70), அகநானூற்றில்

ஒரு பாடலிலும் (238), புறநானூற்றில் இரண்டு பாடல்களிலும் (14, 116) குதிரையைப் பற்றிய காட்சிகள் இடம்பெறுகின்றன.

### குதிரையின் செயல்பாடுகள்

குதிரை விரைந்து செல்லும் தன்மையுடையது. தேர் இழுப்பதற்கும், போரில் பகைவர்களை அழிக்கவும், பரிசுப் பொருளாகவும் பயன்படுத்தப்பட்டது. இதனை,

"நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே" (ஐ.கு.நூ.202)

"பாய்ந்தாய்ந்த மா" (பதி.பத்து.69)

"எஃகுபடை யறுத்த கொய்சுவற் புரவி
அலங்கும் பாண்டில் இழையணிந் தீமென"(பதி.பத்து.64)

என்ற பாடலடிகளால் அறியலாம்.

குதிரை நீர்த்துறையின் ஆழம் அறியும் தன்மையுடையது என்பதை,

"பார் உடைத்த குண்டு அகழி
நீர் அழுவ நிவப்புக் குறித்து
நிமிர் பரிய மா தாங்கவும்" (புற.நா.14)

என்ற அடிகளால் உணரப்படுகிறது.

### 3.2.1.6. ஆடு

புல்லும் பிறவும் மிகுதியாகக் கிடைப்பதால் ஆடுகள் மலைப்பக்கம் வாழ்ந்தன.

கபிலர் ஆட்டினைப் பற்றி ஐந்து பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். நற்றிணையில் ஒரு பாடலிலும் (359), ஐங்குறுநூற்றில் ஒரு பாடலிலும் (238), பதிற்றுப் பத்தில் ஒரு பாடலிலும் (67), அகநானூற்றில் ஒரு பாடலிலும்

(292), புறநானூற்றில் ஒரு பாடலிலும் (113) ஆடு பற்றிய காட்சிகள் இடம்பெறுகின்றன.

## ஆட்டின் அன்புணர்வு

தன் காதலனாகிய நீண்ட கொம்புகளை உடைய வலிய ஆட்டுக்கடாய், தன்பால் வருதலைத் தவிர்த்துப் பிற ஆடுகளை விரும்பிப் போய்விட்டாலும், நிறம் மிகுந்த மயிர்த் தொகுதியையுடைய அதன் மறி, அது தன்னை நாடி வரும் என்ற ஆசையினால் உயிர் தங்கியிருக்கும். இதனை,

"வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும்,
குருமயிர் புருவை நசையின் அல்கும்" (ஐ.கு.நூ.238)

என்ற அடிகளால் ஆட்டின் அன்புணர்வை அறியலாம்.

## பலியிடுதல்

தாயின் முலைப்பால் கிடைக்கப் பெறாது மெல்லிய தளிராகிய தழையுணவை உண்ணக்கூடிய மிக்க இளமையையுடைய ஆட்டுக்குட்டியைப் பலிக்காகக் கொல்வதை விரும்பி வேலன் வெறியாடல் செய்யும் செயலை,

"சிறுகுளகு அருந்து, தாய்முலை பெறாஅ
மறிகொலைப் படுத்தல் வேண்டி, வெறிபுரி
ஏதில் வேலன் கோதை துயல்வர" (அ.நா.292)

என்ற அடிகள் தெரிவிக்கின்றன.

## 3.2.1.7. கரடி

குறிஞ்சி நிலத்திற்குரிய விலங்குகளுள் ஒன்று கரடி. கபிலர் நற்றிணையில் ஒரு பாடலிலும் (336), குறிஞ்சிப் பாட்டில் ஓரிடத்திலும் கரடி குறித்துப் பாடியுள்ளார்.

### கரடியின் உணவு

கரடிக் கூட்டம் மேகம் போலச் சூழ்ந்து பாம்பு உறைகின்ற புற்றில் இருக்கும் ஈயலையும், புற்றாஞ் சோற்றையும், விரும்பிப் புற்றைத் தோண்டும் காட்சி,

"இரவின் அஞ்சாய், அஞ்சுவல்–அரவின்
ஈர் அளைப் புற்றம், கார் என முற்றி
இரைதேர் எண்கினம் அகழும்" (நற்.336)

என்று படைக்கப்படுகிறது.

## 3.2.1.8. நாய்

குறவர்கள் வேட்டையாடுவதற்காகப் பயன்படுத்திய விலங்குகளுள் ஒன்று நாய்.

கபிலர் நாய் பற்றி ஆறு பாடல்களில் குறிப்பிடுகிறார். அகநானூற்றில் ஐந்து பாடல்களிலும் (118, 158, 182, 248, 318), குறிஞ்சிப் பாட்டிலும் நாய் பற்றிய காட்சி இடம் பெறுகிறது.

### நாயின் இயல்பு

நாய்கள் வேட்டையாடப்படும் பொருள்களுள் எவற்றையேனும் கண்டுவிட்டால், அவ்வேட்டை நாய்கள் அவற்றைக் குரைத்து வளைத்துக்

கொள்ளும். வேட்டைக் காலத்தில் தலைவனை விட்டுப்பிரிந்து வேறு திசையிலும் சென்று விடுவதுண்டு. அச்சமயம் தலைவன் இருப்பிடத்தை அவனால் ஊதப்பெறும் ஊது கொம்பின் ஓசையால் வழியறிந்து விரையும். இதனை,

"ஒட்டுஇயல் பிழையா வய நாய் பிற்பட
வேட்டம் போகிய குறவன் காட்ட" (அக.நா.182)
"———————— வேட்டொடு
வேய்பயில் அழுவத்துப் பிரிந்தநின்
நாய் பயிர் குறிநிலை கொண்ட கோடே" (அக.நா.318)

என்ற அடிகளால் அறியலாம்.

வேட்டை நாய்களேயன்றி வீட்டைக் காக்கும் நாய்களும் உண்டு. அவை இரவு நேரத்தில் அயலாரையோ, ஐயுறத்தக்கப் பொருளையோ காணின், உடனே குரைத்து வீட்டிலுள்ளாரை எழுப்பி விடும் இயல்புடையன. இதனை,

"இரவரன் மாலைய னேவரு தோறும்
காவலர் கடுகினும் கதநாய் குரைப்பினும்" (குறி.பா.வ.239–240)

என்ற அடிகள் எடுத்துக்காட்டுகிறது.

### 3.2.1.9. பசுவும் எருதும்

கபிலர் பசு பற்றி ஐங்குறுநூற்றில் ஒரு பாடலிலும் (271), அகநானூற்றில் ஒரு பாடலிலும் (238), புறநானூற்றில் ஒரு பாடலிலும் (117) பாடியுள்ளார். ஏறு பற்றி அகநானூற்றில் ஒரு பாடலிலும் (248), கலித்தொகையில் ஒரு பாடலிலும் (65), குறிஞ்சிப்பாட்டிலும் பாடியுள்ளார்.

## பசுவின் அன்புணர்வு

மனையிடத்துக் கன்றை ஈன்ற பசுக்கூட்டம் நல்ல புல்லை மேய்ந்து, மாலையில் தம் கன்றை அழைத்தனவாய் மன்றங்களிலே வந்து நிறையும்.

"மனைத்தலை மகவை ஈன்ற அமர்க்கண்
ஆமாநெடு நிரை நன்புல் ஆர" (புற.நா.117)

"பல்கதிர் மண்டிலம் கல்சேர்பு மறைய
மான்கண மரமுதல் தெவிட்ட ஆன்கணம்
கன்றுபயிர் குரல மன்றுநிரை புகுதர" (குறி.பா.வ.216–218)

என்ற அடிகளால் குறிப்பிடப்படுகிறது.

சிறிய கொம்பினையுடைய செவ்விய பசு மலையில் மேய்ந்து கொண்டிருந்தது. அசையும் குலையையுடைய காந்தள் மலரை அது தீண்டியதால் காந்தளின் தாது உதிர்ந்தது. அத்தாதினைத் தன் மேல் உதிர்த்தது தன் தாய் என்று அறியாமல் அவ்வாவின் கன்று மயங்கிய நகைச்சுவைக் காட்சியை,

"சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா
அலங்குலைக் காந்தள் தீண்டித் தாதுகக்
கன்றுதாய் மருளும் குன்ற நாடன்" (நற்.359)

என்ற பாடலடிகளால் அறியலாம்.

காட்டுப்பசுவின் தலைமையுடைய மலையேற்றினை அகன்ற இடத்தையுடைய காட்டில் வலப்பக்கம் வீழுமாறு வீழ்த்திய புலியினைக் கண்டு மடப்பம் பொருந்திய கண்களையுடைய காட்டுப்பசு திசையெலாம் கேட்குமாறு தொலைவிலே நின்று அலறியது.

“மடக்கண் ஆமான் மாதிரத்து அலற,

தடக்கோட்டு ஆமான் அண்ணல் ஏஎறு

நனந்தலைக் கானத்து வலம்படத் தொலைச்சி” (அக.நா. 238)

என்ற பாடலடிகளில் காட்டுப்பசுவின் அன்பை உணரமுடிகிறது.

### 3.2.1.10. மான்

முல்லை நிலத்திற்குரிய சிறப்பு விலங்காகிய மான் குறிஞ்சி நிலக்காடுகளிலும் திரிவதைக் கபிலர் பாடியுள்ளார். கபிலர் மானைப் பற்றி பதினான்கு பாடல்களில் குறிப்பிடுகிறார். குறுந்தொகையில் இரண்டு பாடல்களிலும் (115, 187), ஐங்குறுநூற்றில் நான்கு பாடல்களிலும் (203, 217, 271, 287), கலித்தொகையில் நான்கு பாடல்களிலும் (43, 50, 56, 57), அகநானூற்றில் இரண்டு பாடல்களிலும் (82, 182), புறநானூற்றில் ஒரு பாடலிலும் (202) குறிஞ்சிப்பாட்டிலும் மான் பற்றிய காட்சிகள் இடம்பெறுகின்றன.

#### மானின் இயல்பு

மகளிர் நோக்கிற்கு உவமையாகச் சிறப்பிக்கப் பெற்ற இம்மான்கள் எளிதில் அஞ்சும் இயல்புடையன. இதனை,

“பிணையேர் நோக்கின் மனையோள் மடுப்ப” (குறி.பா.154 )

“மாதர்கொள் மான்நோக்கின் மடநல்லாய்” (குறி.கலி.56)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

“வெருள்புடன் நோக்கி வியல் அறையூகம்

இருள்தூங்கு இறுவரை ஊர்இழிபு ஆடும்

வருடைமான் குழவிய வளமலை நாடனை” (குறி.கலி.43)

என்ற பாடலில் கருங்குரங்கைக் கண்டு அஞ்சிய ஒரு வருடை மானின் குட்டி, பயந்து மலைச்சரிவெல்லாம் ஓடிக் கொண்டிருக்கும் காட்சி இடம் பெறுகிறது.

### மானின் உணவு

மான்கள் கூட்டம் கூட்டமாக சேர்ந்து வாழும். மலையகத்தே உள்ள வேங்கை மரத்தின் பொன்னிறமான நறிய மலர்களை உண்டு வாழும். இதனை,

"பெருவரை வேங்கைப் பொன்மருள் நறுவீ
மான்இனப் பெரும்கிளை மேயல் ஆரும்" (ஐ.கு.நூ.217)

என்ற பாடல் வரிகளால் உணர முடிகிறது.

### 3.2.1.11. மரையா

மரையா ஒரு வகையான காட்டு விலங்கு. பெரிய தோற்றம் உடையது. இணை இணையாகக் காட்சி அளிப்பது. கபிலர் குறுந்தொகையில் ஒரு பாடலில் (115) இது பற்றிய செய்தியைக் குறிப்பிடுகிறார்.

அசைகின்ற மூங்கில்கள் வளர்ந்துள்ள குளிர்ச்சியும் நறுமணமும் உடைய மலைப்பக்கத்தில் மெல்லிய நடையுடைய மரையான் தங்கி வாழும். நடை மெலிந்த முதுமை நிலையிலும், மரையான் இனிது உண்டு, முதுமை மலைச்சாரல் நிழலில் உறங்கும். இதனை,

"ஆடுஅமை ஒழுகிய தண்ணறுஞ் சாரல்

மென்நடை மரையா துஞ்சும்

நன்மலை நாட நின்னல திலளே" (குறுந்.115)

என்ற அடிகளால் அறியலாம்.

### 3.2.1.12. முள்ளம்பன்றி

முள்ளம்பன்றி அகநானூற்றில் ஒரு பாடலில் (182) குறிக்கப்படுகிறது. முள்ளம்பன்றி குளிர்ந்த புதரானது குருதிக் கறையுடன் அசையும்படி அதனுள் பதுங்கியிருக்கும். இதனை,

"குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர,

முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட !" (அக.நா.182)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

விலங்குகள் மட்டுமின்றி பறவைகளின் செயல் வருணனைகளும் கபிலர் பாடல்களில் எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

### 3.2.1.13. அன்றில்

அன்றில் பற்றி குறிஞ்சிப்பாட்டில் ஒரே ஒரு காட்சி அமைகிறது. மாலை நேரத்தில் அன்றில் பறவைகள் பனையின் அகமடலிலே இருந்து தந்துணைப் பறவையை அழைக்கும்.

"ஏங்குவயிர் இசைய கொடுவாய் அன்றில்

ஓங்கிரும் பெண்ணை அகமடல் அகவ" (குறி.பா.வ.219–220)

என்னும் பாடலடிகளில் அன்றில் பறவையின் அன்புணர்வு வெளிப்படுகிறது.

### 3.2.1.14. அன்னம்

அன்னப்பறவை தூய வெள்ளை நிறமுடையது. நீரில் நன்கு நீந்தக்கூடியது. அன்னம் பற்றி கலித்தொகையில் குறிஞ்சிக்கலியில் ஒரு பாடலில் (56) இடம் பெறுகிறது. அன்னப்பறவையின் நடை பெண்களின் நடைக்கு ஒப்பாகக் கூறப்படுகிறது.

"ஆய்தூவி அனம்என, அணிமயில் பெடை எனத்" (குறி.கலி.56)

என்னும் அடிகள் அன்னம் என்னும் நின் மென்னடை கண்டவரை மயக்கி அழியச் செய்யும் என அன்னத்தின் நடைச்சிறப்பை விளக்குகிறது.

### 3.2.1.15. சிறுவெண் காக்கை

காக்கை பற்றி குறுந்தொகையில் ஒரு பாடல் (246) இடம் பெறுகிறது. கழுத்துப் பகுதியில் சிறிது வெண்மை நிறமுடைய காக்கை, பெரிய கடலின் கரைப்பகுதியில் உள்ளது. யானைக் கன்றின் செவியைப் போல விளங்கும். நெய்தலின் இலைகளை அது கலக்கி, குளிர்ந்த அக்கழிநீர்ப்பகுதியில் இரையைத் தேடி, ஒரு நாளில் பாதியாகிய பகற்பொழுது முழுதும் துழவிக் கொண்டிருக்கும். இதனை,

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை
களிற்றுச் செவி அன்ன பாசடை மயக்கி
பனிக்கழி துழவும் பானாள், தனித்து ஓர்" (குறுந்.246)

என்னும் அடிகள் எடுத்துரைக்கின்றன.

### 3.2.1.16. கிளி

குறிஞ்சி நிலப் பறவைகளில் சிறப்பிடம் பெறுவது கிளி. கபிலர் கிளி பற்றிய காட்சிகளை 23 பாடல்களில் பாடியுள்ளார். நற்றிணையில் நான்கு பாடல்களிலும் (13, 368, 373, 376), குறுந்தொகையில் மூன்று பாடல்களிலும் (142, 198, 291), ஐங்குறுநூற்றில் பதினொரு பாடல்களிலும் (260, 281, 282, 283, 284, 285, 286, 287, 288, 289, 290), கலித்தொகையில் இரண்டு பாடல்களிலும் (37, 55), அகநானூற்றில் இரண்டு பாடல்களிலும் (12, 118), குறிஞ்சிப்பாட்டிலும் கிளி பற்றிய காட்சிகள் இடம்பெறுகின்றன.

#### சுற்றத்தோடு உணவு உண்ணும் கிளி

கிளிகள் தம் சுற்றத்தோடு சாரல் பொருந்திய மலையிலுள்ள தினைக்கதிரைத் தின்று ஓசை எழுப்பும். தினைப்புனம் காக்கும் மகளிர் இடைவிடாது ஒலிக்குந்தோறும் கிளிகள் இனத்தை அழைக்கும். இதனை,

"ஏனல்அம் காவலர் ஆனாது ஆர்த்தொறும்
கிளி விளி பயிற்றும்" (அக.நா.12)

என்ற அடிகள் எடுத்துக் காட்டுகின்றன.

தலைவி விளிக்கும் ஓசை, கிளி ஓசை என்று எழுந்து போதற்கு விரும்பாமல், அத்தினைக் கதிர்களிலேயே அமர்ந்து இருக்கும். அதனை வெறுத்து அழுத தலைவியின் கண்கள் நீர்த்துளிகளை ஏற்ற குவளை மலர்கள் போல இருந்த காட்சி,

"கிளி, அவள் விளி என விழல் ஒவாவே;
அதுபுலந்து அழுத கண்ணே" (குறுந்.291)

என்ற பாடலடியால் படைக்கப்படுகிறது.

### 3.2.1.17. குருவி

ஒருவகைச் சிறிய பறவையினம் குருவியாகும். இது 'குரீஇ' என்னும் வடிவிலேயே ஏனைய பாடல்களில் இடம் பெற, ஐங்குறுநூற்றில் 'குருவி' என வழங்கப்படுகிறது. கபிலர் 'குரீஇப்பூளை' என்றே குறிஞ்சிப்பாட்டில் ஆள்கிறார். புனவர் கொள்ளிக்கு அஞ்சித் தன் புகலிடம் செல்லும் மயில் புனம் கொய்த பின்பு அரிதாளிலே இருந்த குருவி எழுவது விழுவதாய் வருந்துறச் சிறகை விரித்து ஆடிச் செல்லும் நகைச்சுவைக் காட்சியை,

> "புனவர் கொள்ளியின் புகல் வரும் மஞ்ஞை,
> இருவி இருந்த குருவி வருந்துற
> பந்துஆடு மகளிரின் படர்தரும்" (ஐ.கு.நூ.295)

என்ற அடிகளால் உணரலாம்.

### 3.2.1.18. நாரை

நாரை நீர்நிலையில் வாழும் இயல்புடையது. நீண்ட கால்களும், நீண்ட கழுத்தும் சாம்பல் நிறமும் உடையன. நாரை பற்றி இரண்டு பாடல்களில் கபிலர் பாடியுள்ளார். நற்றிணையில் ஒரு பாடலிலும் (291), குறுந்தொகையில் ஒரு பாடலிலும் (25) நாரை குறித்த செய்தி இடம் பெறுகின்றது.

#### நாரையின் உணவு

நீர் வற்றிச் சுருங்கிய செறிந்த சேற்றுப் பரப்பினிடத்துப் பொருந்திய நிணம் கொண்ட தலையை உடைய கொழுத்த மீனை அருந்துவதற்காக

நாரையின் கூட்டம், குவிந்த வெள்ளிய மணல் மேட்டின் மீது ஏறியிருக்கும். நாரைகளின் அக்காட்சி அரசர்களின் புகழ்மிக்க காலாட்படையின் கூட்டம் போல் விளங்கும். இக்காட்சியை,

"நீர்பெயர்ந்து மாறிய செறிசேற்று அள்ளல்
நெய்த்தலைக் கொழுமீன் அருந்த இனக்குருகு
குப்பை வெண்மணல் ஏறி அரைசர்
ஒண்படைத் தொகுதியின் இலங்கித் தோன்றும்" (நற்.291)

என்ற பாடலடிகள் புலப்படுத்துகின்றன.

### 3.2.1.19. கூகை

கோட்டான்கள் எனப்படும் கூகைகளின் கண்கள் பிதுங்கின போன்றிருக்கும். கபிலர் குறுந்தொகையில் ஒரு பாடலிலும் (153), ஐங்குறுநூற்றில் ஒரு பாடலிலும் (291), புறநானூற்றில் ஒரு பாடலிலும் (124) கூகை பற்றிக் குறிப்பிடுகின்றார்.

மலைப்பக்கத்தே மயில்கள் மகிழ்ந்து ஆட, அவ்வாட்டத்திற்கு ஏற்பப் பேராந்தைகள் மாறி மாறி அலறும். இக்காட்சியை,

"மயில்கள் ஆலக் குடிஞை இரட்டும்" (ஐ.கு.நூ.291)

என்ற அடி குறிப்பிடுகின்றது.

கூகையின் ஒலி தீய நிமித்தத்தைக் குறிப்பதாக மக்கள் நம்பிக்கை கொண்டிருந்தனர். தலைவி, 'குன்றின்கண் வாழும் கூகை, தன்னுடைய பெடையைக் கூவியழைத்தாலும் என் நெஞ்சு அச்சத்தை அடையும்' என்கிறாள். இதனை,

"குன்றக் கூகை குழறினும் முன்றிற்

பலவி னருஞ்சினைக் கலைபாய்ந் துகளினும்

அஞ்சுமன் அளித்தெ னெஞ்ச மினியே" (குறுந்.153)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

### 3.2.1.20. மயில்

குறிஞ்சி நிலப் பகுதியில் வாழும் அழகிய பறவையினங்களுள் ஒன்று மயில். கபிலர் மயில் பற்றி பத்தொன்பது பாடல்களில் குறிப்பிட்டுள்ளார். நற்றிணையில் இரண்டு பாடல்களிலும் (13, 222), குறுந்தொகையில் இரண்டு பாடல்களிலும் (249, 264), ஐங்குறுநூற்றில் பன்னிரெண்டு பாடல்களிலும் (250, 258, 291, 292, 293, 294, 295, 296, 297, 298, 299, 300), அகநானூற்றில் ஒரு பாடலிலும் (158), புறநானூற்றில் ஒரு பாடலிலும் (120), குறிஞ்சிப்பாட்டிலும் மயில் பற்றிய வருணனைக் காட்சிகள் இடம் பெறுகின்றன.

#### மயிலின் உணவு

மலைப்பகுதியில் விளையும் தினையை மயில்கள் உணவாக உட்கொள்ளும். குறமகள் காத்து இருக்கும் பெரிய கதிர்களைக் கொண்ட தினையைப் பக்கமலையில் வாழும் மயிலினம் கள்ளத்தனமாகக் கவர்ந்து உண்ணும். இதனை,

"கொடிச்சி காக்கும் பெருங்குரல் ஏனல்

அடுக்கல் மஞ்ஞை கவரும் நாட!" (ஐ.கு.நூ.296)

என்ற பாடல் வரிகள் விளக்குகின்றன.

பழுத்த மிளகுகள் உதிர்ந்த பாறையின் கண் விழுந்த மாங்கனியானும், வண்டுகள் சிதறிய தேனானும், பலாவின் இனிய சுவையானும் விளைந்த கள்ளினை, கள்ளென்று அறியாமல் நீர் என்று கருதிப் பருகிய மயில், ஊர்களிலே விழாக்காலத்தில், கழாய்க் கயிற்றில் ஏறி ஆடுகின்றவர்கள், தாளம் தவற ஆடித்தளருவது போல மயில்கள் தளரும்.

"பழுமிள குக்க பாறை நெடுஞ்சுனை
முழுமுதற் கொக்கின் தீங்கனி உதிர்ந்தெனப்
புள்ளெறி பிரசாமொ டீண்டிப் பலவின்
நெகிழ்ந்துகு நறும்பழம் விளைந்த தேறல்
நீர்செத் தயின்ற தோகை வியலூர்" (குறி.பா.வ.187–191)

என்ற பாடலடிகள் மயில் நீர் என்று கருதி கள்ளை அறியாமல் உண்டு மகிழ்ந்ததைக் குறிப்பிடுகிறது.

## மயிலின் இருப்பிடம்

மயில் வேங்கை மரத்தின் உயர்ந்த கிளையில் கூடு கட்டி வாழும். வேங்கை மரத்தின் மலர்கள் உதிர்ந்திருக்கும் மலையில் உள்ள கூட்டில் இருக்கும் மயில்கள் அறிய மாட்டா என்று கருதிக் கொண்டு கிளிகள் தினைக் கதிர்களைக் கவர்ந்து செல்லும்.

"வேங்கை வீஉகும் ஓங்குமலைக் கட்சி
மயில் அறிபு, அறியா மன்னோ
பயில் குரல் கவரும் பைம்புறக் கிளியே" (நற்.13)

என்ற பாடல்வரிகள் உணர்த்துகின்றன.

"விரிந்த வேங்கைப் பெருஞ்சினைத் தோகை

பூக்கொய் மகளிரின் தோன்றும் நாட" (ஐ.கு.நூ.297)

வேங்கை மரத்தின் பெரிய கிளையில் அமர்ந்துள்ள மயில் அம்மரத்தின் மீது ஏறி பூப்பறிக்கும் பெண்போலத் தோற்றமளிக்கும் என்பதில் மயில் வேங்கை மரக்கிளையை இருப்பிடமாகக் கொண்டு வாழும் என அறிய முடிகிறது.

## 3.2.2. உடல் வருணனை

கபிலர் பாடல்களில் உயிரினங்களின் உடல் அமைப்பு குறித்து சில பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்களை,

1. நிறம் சார்ந்த வருணனை
2. அளவு சார்ந்த வருணனை
3. வடிவம் சார்ந்த வருணனை

என்று மூன்று பிரிவுகளாகப் பகுத்து ஆராயலாம்.

### 3.2.2.1. நிறம் சார்ந்த வருணனை

உயிரினங்களின் நிறம் குறித்த பாடல்களை,

1. யானையின் நிறம்
2. புலியின் நிறம்
3. குரங்கின் நிறம்
4. பன்றியின் நிறம்
5. கிளியின் நிறம்
6. நாரையின் நிறம்
7. காக்கையின் நிறம்
8. வண்டின் நிறம்

என்று பகுத்து விளக்கலாம். கபிலர் பாடல்களில் யானையின் நிறம் குறிக்கும் செய்திகள் சில பாடல்களில் இடம் பெறுகின்றன.

"இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்" (அக.நா.118)

"இரும்பிணர்த் தடக்கை இருநிலஞ் சேர்த்திச்" (குறி.பா.வ.163)

என்ற இப்பாடல் வரிகளில் யானையின் கரிய நிறம் குறிக்கப்படுகின்றது.

## 1. யானையின் தந்தம்

"பொருத யானை வெண்கோடு கடுப்ப" (நற்.225)

"மறம்மிகு வேழம், தன்மாறுகொள் மைந்தினான்
புகர்நுதல் புண்செய்த புய்கோடு போல" (குறி.கலி.53)

"பொருமுரண் உழுவை தொலைச்சி, கூர்நுனைக்
குருதிச் செங்கோட்டு அழிதுளி கழாஅ" (அக.நா.332)

என்ற பாடல் வரிகளில் யானையின் தந்தம் குறிக்கப்படுகிறது. வெண்மை நிறமுடைய யானையின் தந்தம் புலியைக் கொன்று செம்மை நிறத்தைப் பெறுகிறது.

## 2. புலியின் நிறம்

புலியின் நிறத்தைக் குறித்த செய்திகள் சில பாடல்களில் காணப்படுகின்றன.

"வேங்கையஞ் சினை என விறற்புலி முற்றியும்" (குறி.கலி.46)

"இரும்புலி தொலைத்த பெருங்கை யானை" (நற். 353)

"ஒண்கேழ் வயப்புலி குழுமலின், விரைந்து உடன்" (ஐ.கு.நூ.274)

"உறுபுலி உருவேய்ப்பப் பூத்த வேங்கை" (குறி.கலி.38)

என்ற பாடல் வரிகளில் வேங்கையின் பூங்கொத்துக்கள் போன்ற நிறமும், கருமை நிறமும், ஒள்ளிய நிறமும் உடையதாகப் புலி குறிக்கப்படுகிறது.

### 3. குரங்கின் நிறம்

குரங்கின் விரல் நிறத்தையும் முகத்தின் நிறத்தையும் குறிக்கும் பாடல்கள் இடம் பெறுகின்றன.

"கருவிரல் மந்திக் கல்லா வன்பறழ்" (ஐ.கு.நூ.272)

"கனி கவர்ந்து உண்ட கருவிரற் கடுவன்" (புற.நா.200)

"கருவிரல் மந்திக் கல்லா வன்பார்ப்பு" (ஐ.கு.நூ.280)

என்ற பாடல் வரிகளில் குரங்கின் கருவிரல் குறிப்பிடப்படுகிறது.

"மைப்பட் டன்ன மாமுக முசுக்கலை"" (குறுந்.121)

"செம்முக மந்தியொடு சிறந்து" (புற.நா.200)

என்பதில் ஆண் குரங்கின் முகம் கரியதாகவும், மந்தியின் முகம் சிவந்ததாகவும் உள்ளதாகக் குறிப்பிடப்படுகிறது.

### 4. பன்றியின் நிறம்

ஐங்குறுநூற்றில் பன்றியின் நிறம் குறிக்கும் பாடல்கள் இடம் பெறுகின்றன.

"கட்டளை அன்ன கேழல் மாந்தும்" (ஐ.கு.நூ.263)

"இளம்பிறை அன்ன கோட்ட கேழல்

களங்கனி அன்ன பெண்பால் புணரும்" (ஐ.கு.நூ.264)

என்ற பாடல் வரிகளில் பன்றி கட்டளைக்கல், களங்கனி போன்ற கருமையான நிறத்தை உடையதாகக் குறிக்கப்படுகிறது.

### பன்றியின் மருப்பு

"புலிகொல் பெண்பால் பூவரிக் குருளை

வளைவெண் மருப்பின் கேழல் புரக்கும்" (ஐ.கு.நூறு.265)

"வில்லில் தந்த வெண்கோட்டு ஏற்றை" (நற்.336)

என்பதில் பெண் பன்றியின் அழகிய வரிகளைத் தன் மேனியில் கொண்ட குட்டி என குட்டியின் மேனியையும், வளைந்த வெண்மையான தந்தங்களைக் கொண்டது ஆண் பன்றி என தந்தத்தின் வெண்மை நிறத்தையும் குறிக்கப் பெறுவது நோக்கத்தக்கது.

### 5. கிளியின் நிறம்

"பயில்குரல் கவரும் பைம்புறக் கிளியே" (நற்.13)

"கிளையொடு உண்ணும் வளைவாய்ப் பாசினம்" (நற்.376)

"செவ்வாய்ப் பைங்கிளி" (ஐ.கு.நூ.284)

என்ற பாடல் வரிகள் கிளியின் பசுமை நிறத்தையும், சிவந்த வாயையும் உணர்த்துகின்றன.

### 6. நாரையின் நிறம்

குறுந்தொகையில் நாரையின் காலின் நிறம் குறித்த பாடல் இடம் பெறுகின்றது.

"தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால

ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்" (குறுந்.25)

நாரையின் கால் தினையின் அடியைப் போன்று சிறிய பசிய நிறமுடையதாக உள்ளதை இப்பாடல் வரியால் அறியப்படுகிறது.

## 7. காக்கையின் நிறம்

குறுந்தொகையில் காக்கையின் கழுத்துப்பகுதி வெண்மை நிறம் உடையதாகக் குறிக்கப்படுகிறது.

"பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை" (குறுந்.246)

என்ற பாடல் வரி கழுத்துப் பகுதியில் சிறிது வெண்மை நிறம் உடைய காக்கை, பெரிய கடலின் கரைப் பகுதியில் உள்ளதை உணர்த்துகிறது.

## 8. வண்டின் நிறம்

ஐங்குறுநூற்றில் வண்டின் நிறம் குறித்த பாடல் இடம் பெறுகிறது.

"கட்டளை அன்ன மணிநிறத் தும்பி" (ஐ.கு.நூ.215)

என்ற பாடல் வரியில் வண்டின் நிறம் கட்டளைக் கல் போன்ற கரிய நிறமுடையதாகக் குறிக்கப்படுகிறது.

## 3.2.2.2. அளவு சார்ந்த வருணனை

கபிலர் பாடல்களில் உயிரினங்களின் உடல் உறுப்புகளின் அளவினைக் குறிக்கும் பாடல்கள் இடம் பெறுகின்றன. இப்பாடல்கள்

1. யானையின் கை, மருப்பு அளவு
2. புலியின் கை, கண் அளவு
3. பன்றியின் கண் அளவு
4. ஆட்டின் கொம்பு அளவு
5. பசுவின் கொம்பு அளவு

என்று ஐந்து பிரிவுகளில் விளக்கப்படுகிறது.

## 1. யானையின் கை, மருப்பு அளவு

யானையின் கை அளவு குறித்து சில பாடல்கள் இடம் பெறுகின்றன.

"இரும்புலி தொலைத்த பெருங்கை யானை" (நற்.353)

"இரும்பிடி கன்றொடு விரைஇய கயவாய்ப்

பெருங்கை யானைக் கோள்பிழைத்து, இரீஇய" (அக.நா.118)

எனும் பாடல் வரியில் கருநிறப் பிடியோடும் கன்றோடும் கூடிய அகன்ற வாயினையும் பெரிய கையினையும் உடைய யானை என்பது உணர்த்தப்படுகிறது.

"மடப்பிடித் தடக்கை யன்னபால், வார்பு

கரிக்குறட் டிறைஞ்சிய செறிகோட் பைங்குரற்" (குறுந்.198)

பசிய தினைக்கதிர்கள் மடப்பத்தையுடைய பெண் யானையின் துதிக்கையைப் போலப் பருத்துக் காணப்படும். யானையின் திரண்ட துதிக்கை பால் முற்றிச் செறிந்து காணப்படும் தினையைப் போல் உள்ளதாகக் கூறப்படுகிறது.

"இரும்பிணர்த் தடக்கை இருநிலஞ் சேர்த்திச்" (குறி.பா.வ.163)

"பெருங்களிறு பிளிறும் சோலை அவர்' (நற்.222)

என்பதில் கரிய பெரிய கையைச் சுருட்டி நிலத்திலே எரியும் மதயானை என குறிக்கப்படுகிறது. யானையின் கொம்பினைக் குறித்த செய்தி குறிஞ்சிக்கலியில் இடம் பெறுகிறது.

"நிறம்சாடி முரண்தீர்ந்த நீள்மருப்பு எழில் யானை" (குறி.கலி.52)

நீண்ட கொம்பினை உடைய எழில் யானை என்பது இப்பாடல் வரியின் மூலம் அறியலாம்.

## 2. புலியின் கை, கண் அளவு

ஐங்குறுநூற்றில் புலியின் கை குறித்து இரண்டு பாடல்கள் இடம் பெறுகின்றன.

"குறுக்கை இரும்புலி பொரூஉம் நாட" (ஐ.கு.நூ.266)

"குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை" (ஐ.கு.நூ.216)

என்ற பாடல் வரிகளில் புலியின் முன்னங்கால் சிறியதாக உள்ளது குறிப்பிடப்படுகிறது. பாய்ந்து செல்லும் வலிமையுடைய புலியின் கால் அளவில் சிறியது என்பது பெறப்படுகிறது.

"———————— கறிய

கல்முகை வயப்புலி கழங்கு மெய்ப்படூஉ" (ஐ.கு.நூ.246)

என்ற பாடல் வரியில் கழற்சிக்காய் போன்று கண்ணை உடையது புலி என்பது உணர்த்தப் பெறுகிறது. கானவர்கள் கழற்சிக்காயைக் கண்ணாகப் பொருத்தி மெய்யான பெண்புலி போல பொய்ப்புலியைச் செய்தமைத்தனர் என்பது அறியப்படுகிறது.

## 3. பன்றியின் கண் அளவு

ஐங்குறுநூற்றில் பன்றியின் கண் அளவு குறித்த பாடல் இடம் பெறுகிறது.

"சிறுகட் பன்றிப் பெருஞ்சின ஒருத்தல்" (ஐ.கு.நூ.267)

சிறிய கண்களையும் கடுஞ்சினத்தையும் உடைய ஆண் பன்றி என பன்றியின் கண்கள் சிறியதாக உள்ளதை உணர்த்துகிறது.

### 4. ஆட்டின் கொம்பு அளவு

ஐங்குறுநூற்றில் ஆட்டின் கொம்பு அளவு குறித்த பாடல் இடம் பெறுகிறது.

"வார்கோட்டு வயத்தகர் வாராது மாறினும்
குருமயிர்ப் புருவை நசையின் அல்கும்" (ஐ.கு.நூ.258)

என்ற பாடல் வரிகளில் வலிய ஆட்டுக்கிடாய் நீண்ட கொம்புகளை உடையதாகக் குறிப்பிடப்படுகிறது.

### 5. பசுவின் கொம்பு அளவு

நற்றிணையில் பசுவின் கொம்பு அளவு குறித்த பாடல் இடம் பெறுகிறது.

"சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா" (நற்.359)

சிறிய கொம்பினை உடைய செவ்வியப் பசு என்பதில் பசுவின் கொம்பு அளவு உணர்த்தப் பெறுகிறது.

### 3.2.2.3. வடிவம் சார்ந்த வருணனை

கபிலர் பாடல்களில் யானையின் உடல் உறுப்புகளின் வடிவ அமைப்பு சில பாடல்களில் இடம் பெறுகின்றன. இக்கருத்தை,

1. யானையின் வடிவம்
2. புலியின் வடிவம்

3. குரங்கின் வடிவம்
4. பன்றியின் வடிவம்
5. குதிரையின் வடிவம்
6. ஆட்டின் வடிவம்
7. பூனையின் வடிவம்
8. நாயின் வடிவம்

என்று எட்டு பிரிவுகளில் விளக்கப்படுகின்றன.

## 1. யானையின் வடிவம்

யானையின் முகம் புள்ளிகளை உடையது என்ற குறிப்பு பாடல்களில் உள்ளது.

"புகர்முகக் களிறொடு புலிபொருது உழக்கும்நின்" (குறி.கலி.45)
"பூம்பொறி யானைப் புகர்முகம் குறுகியும்" (குறி.கலி.46)
"புலிசெத்து, வெரீஇய புகர்முக வேழம்" (அக.நா.12)
"சுரும்பு உணக் களித்த புகர்முக வேழம்" (ஐ.கு.நூ.239)

என்ற வெவ்வேறு பாடல் வரிகளில் யானையின் முகம் புள்ளிகளை உடையது என்பது குறிப்பிடப்படுகிறது.

## யானையின் செவி

"முறஞ்செவி வாரணம் முன்குளகு அருந்தி" (குறி.கலி.42)
"முறஞ்செவி மறைப்பாய்பு முரண்செய்த புலிசெற்று" (குறி.கலி.52)
"முறச்செவி யானைத் தடக்கையின் தடைஇ" (நற்.376)

என யானையின் காது முறம் போன்ற வடிவத்தை உடையதெனக் குறிப்பிடப்படுகிறது.

யானையின் செவி நெய்தல் இலை போன்ற வடிவத்தைப் பெற்றிருக்கும் என்பதை,

"களிற்றுச்செவி அன்ன பாசடை மயக்கி" (குறுந்.246)

என்ற பாடல் வரி உணர்த்துகிறது.

### யானையின் நெற்றி

"வரிநுதல் எழில்வேழம் பூநீர்மேல் சொரிதரப்" (குறி.கலி.44)

யானையின் நெற்றியில் வரி இருப்பதை இப்பாடல் வரி உணர்த்துகிறது.

### யானையின் தோற்றம்

"மலையுறழ் யானை வான்தோய் வெல்கொடி" (பதி.பத்து.69)

யானை மலை போன்ற தோற்றத்தை உடையதாகக் குறிப்பிடப்படுகிறது.

### 2. புலியின் வடிவம்

புலியின் தோற்றம் வேங்கை மரம் பூத்திருப்பதற்கு ஒப்பாகக் கூறப்படுகிறது.

"அரும்பு அறமலர்ந்த கருங்கால் வேங்கை
மாத்தகட்டு ஒள்வீ தாய துறுகல்,
இரும்புலி வரிப் புறம் கடுக்கும்" (புற.நா.202)

என்ற பாடல் வரியில் வேங்கைப் பூக்கள் பாறையின் மீது பரந்து கிடக்கும். இக்காட்சி பெரும்புலியினது வரியைக் கொண்ட முதுகை ஒத்திருக்கும் எனக் குறிக்கப்படுகிறது.

"உறுபுலி உருவேய்ப்பப் பூத்த வேங்கையை" (குறி.கலி.38)

"புதுவதாக மலர்ந்த வேங்கையை
'அது' என உணர்ந்து அதன்அணிநலம் முருக்கி" (குறி.கலி.49)

என்ற பாடல் வரி வேங்கை மரமானது பூத்திருக்க அது புலியுருவாக விளங்குமென உணர்த்துகிறது.

## புலியின் பாதம்

"கடுங்கண் உழுவை அடிபோல வாழைக்

கொடுங்காய் குலைதொறூஉம் தூங்கும்" (குறி.கலி.43)

என்ற பாடல் வரியில் கொடிய கண்களையுடைய புலியின் பாதம் போல, வாழைக் குலைகளிலே வளைந்த காய்கள் தொங்குகின்றன எனக் குறிப்பிடப்படுகிறது.

## புலியின் கழுத்து

"----------வீங்கு எருத்து எறுழ்முன்பின்

இரும்புலி மயக்குற்ற இகன்மலை நன்னாட" (குறி.கலி.48)

வளமிகுந்த கழுத்தும், மிக்க வலிமையும் உடைய புலிகள் என்பதை இப்பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

## 3. குரங்கின் வடிவம்

"புன்றலை மந்தி தூர்ப்பத் தந்தை" (நற்.373)

"மெல்விரல் மந்தி குறைகூறும் செம்மற்றே" (குறி.கலி.40)

என்பதில் மந்தியின் மென்மையான தலையும், மென்மையான விரலும் குறிப்பிடப்படுகிறது.

"அவரை அருந்த மந்தி பகர்வர்

பக்கின் தோன்றும் நாடன் வேண்டின்" (ஐ.கு.நூ.271)

அவரைக் காய்களை வயிறார உண்ட பெண் குரங்கு வணிகர் கையாளும் பையைப் போலப் பருத்துக் காணப்படும் என குரங்கின் பருத்த வடிவம் குறிப்பிடப்படுகிறது.

### 4. பன்றியின் வடிவம்

"பிணர்ச்சுவல் பன்றி தோல்முலைப் பிணவொடு" (நற்.336)

சொர சொரப்பான பிடரியையுடையது ஆண் பன்றி எனவும் தோலாய் வற்றிவிட்ட முலையையுடையது பெண் பன்றி எனவும் பன்றியின் வடிவம் எடுத்துரைக்கப்படுகிறது. பன்றியின் மருப்பு இளம்பிறை போன்று உள்ளதை,

"இளம்பிறை அன்ன கோட்ட கேழல்" (ஐ.கு.நூ.264)

என்ற பாடல் வரி உணர்த்துகிறது.

"தாஅய் இழந்த தழுவரிக் குருளையொடு" (ஐ.கு.நு.268)

என்பதில் குருளையின் உடலில் நெருங்கிய வரிகள் உள்ளதை இப்பாடல் வரி எடுத்துரைக்கிறது.

### 5. குதிரையின் வடிவம்

குதிரையின் பிடரி வடிவத்தை,

"எஃகுபடை யறுத்த கொய்சுவல் புரவியொடு" (பதி.பத்து.62)

"பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே" (ஐ.கு.நூ.202)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. குதிரை கொய்யப்பட்ட பிடரி மயிரையுடையதென்றும், அந்தணச் சிறுவர்கள் போல குடுமித் தலையை உடையதென்றும் குறிக்கப்படுகிறது.

## 6. ஆட்டின் வடிவம்

"நெறிபடு மருப்பின் இருங்கண் மூரியொடு" (பதி.பத்து.67)

முறுக்குண்ட கொம்புகளையும், கரிய கண்களையும் உடைய ஆட்டுக்கிடாய் என ஆட்டின் வடிவம் குறிப்பிடப்படுகிறது.

## 7. பூனையின் வடிவம்

"பிள்ளை வெருகின் முள்ளெயிறு புறையப்

பாசில் முல்லை முகைக்கும்'" (புற.நா.117)

வேற்பாரியது நாட்டில் பசிய இலை உடைய முல்லை, இளைய காட்டுப்பூனையின் கூரிய பல்லைப் போன்று மலரும் என்பதில் காட்டுப்பூனையின் கூரிய பல் வடிவம் குறிப்பிடப்படுகிறது.

## 8. நாயின் வடிவம்

குறிஞ்சிப்பாட்டில் நாயின் வடிவம் குறித்த செய்தி இடம் பெறுகிறது.

"முளைவாய் எயிற்ற வள்ளுகிர் ஞமலி

திளையாக் கண்ண வளைகுபு நெரிதர" (குறி.பா.வ.131– 132)

மூங்கில் முளை போன்ற ஒளியுடைய பற்களையும், பெரிய நகங்களையும் உடைய நாய்கள் இமைத்தல் இல்லாத கண்ணையுடையது என நாயின் தோற்றம் விளக்கப்படுகிறது.

# III. வாழ்வியல் நோக்கில் உயிரினங்கள்

3.3.1. உணவாக அமையும் உயிரினங்கள்

3.3.2. தோழனாக உதவும் உயிரினங்கள்

3.3.3. ஊர்தியாக உதவும் உயிரினங்கள்

3.3.4. விரிச்சி கூறும் உயிரினங்கள்

3.3.5. போரில் உதவும் உயிரினங்கள்

3.3.6. பரிசுப் பொருளாக அமையும் உயிரினங்கள்

3.3.7. பலியிடும் நம்பிக்கையில் உயிரினங்கள்

3.3.8. வணிகப் பொருளாக உயிரினங்கள்

3.3.9. தொழில் பயன்பாட்டில் உயிரினங்கள்

# III. வாழ்வியல் நோக்கில் உயிரினங்கள்

மனிதனின் வாழ்க்கை விலங்குகளோடு பல விதங்களில் இணைந்துள்ளது. விலங்குகளில் பல மனிதனுடைய பகையானவை என்றாலும் மிகப் பெரும்பாலான விலங்குகள் மனிதர்களின் நண்பர்களாகவும் பெருஞ்செல்வமாகவும் திகழ்கின்றன. சங்க காலத்தில் மக்கள் பல்வேறு நோக்கங்களுக்காக விலங்கினங்களைப் பயன்படுத்தியுள்ளனர். மக்களின் வாழ்க்கைக்கு விலங்கினங்கள் உறுதுணையாக விளங்கியுள்ளன. சங்க கால மக்கள் விலங்குகளை அறிவார்ந்த விவேகமற்ற அழிவிலிருந்து காப்பதைக் கடமையாகக் கொண்டு வாழ்ந்துள்ளனர். பஞ்சமும் சாவும் விளைவிக்கும் மனிதப்பகை விலங்குகளிடையே இருந்தாலும் மனிதத்தன்மையால் பரிவுக்குரியனவாக உள்ளன. சில உயிரினங்கள் தங்கள் பளிச்சிடும் வண்ணப் பொலிவினாலும் சில வேளைகளில் இசைக்குரல்களாலும் இன்பத்தை நிறைக்கின்றன. சிலவிலங்குகள் இறைச்சிக்காகவும் தோல்களுக்காகவும் வேட்டையாடப்படுகின்றன. கபிலர் பாடல்களில் இடம்பெறும் விலங்குகளையும் பறவைகளையும் அவற்றின் பயன்பாட்டு அடிப்படையில் பகுத்து ஆராயலாம். அதற்கேற்ப இப்பகுதியானது,

1. உணவாக அமையும் உயிரினங்கள்
2. தோழனாக உதவும் உயிரினங்கள்
3. ஊர்தியாக உதவும் உயிரினங்கள்
4. விரிச்சி கூறும் உயிரினங்கள்

5. போரில் உதவும் உயிரினங்கள்

6. பரிசுப் பொருளாக அமையும் உயிரினங்கள்

7. பலியிடும் நம்பிக்கையில் உயிரினங்கள்

8. வணிகப் பொருளாக உயிரினங்கள்

9. தொழில் பயன்பாட்டில் உயிரினங்கள்

என ஒன்பது கூறுகளாகப் பிரித்து ஆராயப்பெறுகின்றது.

### 3.3.1. உணவாக அமையும் உயிரினங்கள்

கபிலரது பாடல்களில் உயிரினங்கள் உணவாகப் பயன்பட்ட செய்திகளும் இடம் பெற்றுள்ளன.

ஆட்டின் இறைச்சியை உண்ணும் பழக்கம் அக்கால மக்களிடையே இருந்தமை கபிலர் பாடல் வழியாக அறியப்படுகிறது.

"மட்டுவாய் திறப்பவும், வை விடை வீழ்ப்பவும்,
அட்டு ஆன்று ஆனாக் கொழுந்துவை ஊரன் சோறும்
பெட்டாங்கு ஈயும் பெருவளம் பழுனி" (புற.நா.113)

என்ற பாடல் வரிகள் மது இருந்த சாடியை வாய் திறப்பவும், ஆட்டுக் கிடாயை வெட்டிச் சமைத்த கொழுந்துவையையும், ஊண் சோற்றையும் விரும்பியவாறே தருபவன் பாரி என்பதை உணர்த்துகிறது.

"நெறிபடு மருப்பின் இருங்கண் மூரியொடு
வளைதலை மாத்த தாழ்கரும் பாசவர்
எஃகாடு ஊனம் கடுப்ப மெய் சிதைந்து" (பதி.பத்து.67)

என்ற பாடல் வரிகளில் முறுக்குண்ட கொம்புகளையும் கரிய கண்களையும் கொண்ட ஆட்டுக்கிடாய்களோடு, வளைந்த தலைகளையுடைய பிற விலங்குகளின் தாழ்வான இழிந்த இறைச்சிகளையும் விற்பார்கள் என்ற செய்திகளின் மூலம் ஆடு உணவாகப் பயன்பட்டதை அறியலாம்.

குறிஞ்சி நில மக்கள் பன்றி இறைச்சியையும் உணவாகக் கொண்டனர். கானவன் தான் கொன்ற ஆண் பன்றியை கரிய கூந்தலையுடைய மனைவியிடம் தருவான். அவளும் அப்பன்றியை அறுத்துத் தன் குடியினர் யாவர்க்கும் முறையுடன் பகுத்துத் தருவாள் என்பதை,

"வில்லின் தந்த வெண்கோட்டு ஏற்றை,
புனைஇருங் கதுப்பின் மனையோள் கெண்டி,
குடிமுறை பகுக்கும் நெடுமலை நாட" (நற்.336)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

### 3.3.2. தோழனாக உதவும் உயிரினங்கள்

அக்கால மக்கள் உயிரினங்களைத் தமது அன்றாட வாழ்வில் தோழமை உறவுக் கொண்டவையாக அமைத்துக் கொண்டதைக் கபிலர் பாடல்களின் மூலம் அறியலாம். நாய், மான்குட்டி, குரங்கு ஆகிய உயிரினங்கள் தோழமை பூண்டு மக்களிடம் பழகியமைக் கபிலர் பாடல்களில் உணர்த்தப்படுகின்றது.

## 1. நாய்

"இயல்முருகு ஒப்பினை, வயநாய் பிற்பட

பகல்வரின், கவ்வை அஞ்சுதும்; இகல்கொள" (அக.நா.118)

என்ற அடிகளில் "முருகவேளை ஒத்துக் காணப்படுகின்றத் தலைவன் வலியநாய் பின்னே வர, பகற்பொழுதில் தலைவியைக் காண வந்தால் எழும் அலருக்கு அஞ்சுகிறோம்" என்று தோழி கூறுவதன் மூலம் தலைவன் தன் தோழனாக நாயைக் கொண்டுள்ளதை அறியமுடிகிறது.

"ஓட்டுஇயல் பிழையா வயநாய் பிற்பட,

வேட்டம் போகிய குறவன் காட்ட

குளவித் தண்புதல் குருதியொடு துயல்வர,

முளவுமாத் தொலைச்சும் குன்ற நாட" (அக.நா.182)

என்ற வரிகளில், தப்பாது விலங்குகளைத் துரத்திப் பிடிக்கும் இயல்பு கொண்ட வலிய வேட்டை நாய்கள் பின்னே வர வேட்டைக்குச் செல்கிறான். சென்றவன் காட்டுமல்லிகையின் குளிர்ந்த புதிரானது குருதிக் கறையுடன் அசையும்படி அதனுள் பதுங்கியிருந்த முள்ளம்பன்றியைக் கொன்று வீழ்த்துதற்கு இடனான நாட்டின் தலைவன் என்று தலைவன் வருணிக்கப்படுவதில் நாயுடன் அவன் கொண்ட தோழமை உறவு அறியப்படுகிறது.

"புலிக்கணத் தன்ன நாய்தொடர் விட்டு

முருகன் அன்ன சீற்றத்துக் கடுந்திறல்

எந்தையும் இல்லன் ஆக" (அக.நா.158)

என்ற வரிகளில் தலைவியின் தந்தை, புலிக்கூட்டத்தைப் போன்ற நாய்கள் தொடர்ந்து வர வேட்டையாடுதலைக் கைவிட்டு, வீட்டிலே இருக்கிறான். அதனால் தலைவி தலைவனைக் காணப் படப்பை சென்று வர அஞ்சுவாள் எனத் தோழி கூறுகிறாள்.

“உரவுச்சினஞ் செருக்கித் துன்னுதொறும் வெகுளும்
முளைவாள் எயிற்ற வள்ளுகிர் ஞமலி
திளையாக் கண்ண வளைகுபு நெரிதர” (குறி.பா.வ.130–133)

என்ற பாடல் வரிகளில் தோழி, “மிகுதியான சினத்தாலே செருக்குற்று, நெருங்குந்தோறும் சினக்கும் இயல்புடைய மூங்கில் முளைபோன்ற ஒளியுடைய பற்களையுடையவாகிய பெரிய நகங்களையுடைய நாய்கள் வளைத்துக் கொண்டு நெருங்கி வந்தன” என உரைக்கின்றாள்.

மேற்கூறப்பட்ட பாடல்களில் நாய் தோழனாக இருந்து வேட்டைக்குப் பயன்பட்டதை அறியலாம்

## 2. மான்குட்டி

“வழைவளர் சாரல் வருடை நன்மான்
குழவி வளர்ப்பவர் போல, பாராட்டி” (குறி.கலி.50)

என்ற வரிகளில் மலைச்சாரலில் திரியும் வருடையாகிய நல்ல மானினது குட்டியை வளர்ப்பாரைப் போல, தலைவன் தலைவியைப் பிரியாது வாழ வேண்டும் என்று தோழி கூறுவதின் மூலம் மான்குட்டியைத் தோழமையோடு வளர்த்துள்ளதை அறியலாம்.

### 3. குரங்கு

குறவன் மகள் கரிய விரலையுடைய மந்திக்குப் பலாச்சுளையைத் தந்து விருந்தோம்புவாள், இதனை,

"கல்கெழு குறவர் காதல் மடமகள்
கருவிரல் மந்திக்கு வருவிருந்து அயரும்" (நற்.353)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. இதன் மூலம் குரங்கினை விருந்தாக ஏற்றுக் கொள்ளும் தலைவியின் தோழமை உணர்வு அறியப்படுகிறது.

## 3.3.3. ஊர்தியாக உதவும் உயிரினங்கள்

அக்கால மக்கள் தங்கள் போக்குவரத்து வசதிக்கென்றும் உயிரினங்களைப் பயன்படுத்தினர். கபிலர் பாடல்களில் குதிரை, யானை ஆகிய விலங்கினங்களை ஊர்தியாக வருணிக்கப்பட்டுள்ளன.

### 1.குதிரை

"பார்ப்பனக் குறுமகப் போலத் தாமும்
குடுமித் தலைய மன்ற—
நெடுமலை நாடன் ஊர்ந்த மாவே" (ஐ.கு.நூ.202)

என்ற அடிகளில் "நம் காதலனாகிய நெடிய மலைநாட்டுக்குத் தலைவன் தேரை ஈர்ந்து வரும் குதிரைகளும் நம்மூர் அந்தணச் சிறார் போலவே குடுமித் தலையை உடையனவாக இருந்தன" என்று தலைவி கூறுவதில் குதிரை ஊர்தியாக பயன்பட்டமை அறியப்படுகிறது.

"மாஇரு முள்ளூர் மன்னன் மாஊர்ந்து" (நற்.291)

என்ற பாடல் வரி மலையமான் திருமுடிக்காரி குதிரை மீது ஏறிச் சென்றதை விளக்குகிறது.

**2. யானை**

"மலையன் மா ஊர்ந்து போகி, புலையன்
பெருந்துடி கறங்கப் பிற புலம் புக்கு, அவர்" (நற்.77)

என்ற பாடல் வரிகள் தலைவன் யானை மீது ஊர்ந்து செல்ல புலையன் பெரிய துடியை ஒலிக்கிறான் என்பதை உணர்த்துகிறது.

கபிலர் பாடல் வழியாக, குதிரை, யானை ஆகிய உயிரினங்கள் ஊர்தியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறிய முடிகிறது.

### 3.3.4. விரிச்சி கூறும் உயிரினங்கள்

அக்கால மக்கள் வாழ்வில் நம்பிக்கைகள், அதிகமாக இடம் பெற்றிருந்தன. அந் நம்பிக்கைகளுள் விரிச்சி கேட்டலும் ஒன்று. இவ்விரிச்சி கேட்டலுக்கு உயிரினங்கள் துணை செய்தன.

**1. கூகை**

பண்டை நாளிலே ஒரு செயலை மேற்கொள்ளும் போது விரிச்சி பெற்றுச் செல்வர். இக்காலத்தும் அவ்வழக்கு வழங்கி வருகின்றது. விரிச்சி பெறுதல் இன்ன நாள் வினை வாய்க்கும் என்பதை அறிதற்காகவேயாம். இங்கு பறவையின் ஒலி தீய நிமித்தமாகக் கருதப் பெறுகிறது.

"——————— வெருவர

மன்ற மராஅத்த கூகை குழறினும்

நெஞ்சு அழிந்து அரணம் சேரும்" (அக.நா.158)

என்ற பாடல் வரிகள், மன்றத்தின் கண் நிற்கும் மராமரத்தில் உள்ள கூகை அச்சம் தோன்றிக் குழறினாலும், உள்ளம் நடுங்கிப் பாதுகாப்பான இடத்தைத் தலைவி சேருவாள் என கூகையின் தீய நிமித்தத்தை உணர்த்துகின்றன. தலைவி, 'குன்றின் கண் வாழும் கூகை, தன்னுடைய பெடையை கூவியழைத்தாலும் என் நெஞ்சு அச்சத்தை அடையும்' என்கிறாள். இதனை,

"குன்றக்கூகை குழறினும் முன்றிற்

பலவி ன்இருஞ்சினைக் கலைபாய்ந் துகளினும்

அஞ்சுமன் அளித்தெ னெஞ்ச மினியே" (குறுந்.153)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

### 3.3.5. போரில் உதவும் உயிரினங்கள்

சங்ககாலம் போருக்கு முக்கியத்துவம் தந்த வீரயுகக் காலம். இப்போர்களுக்கு உயிரினங்கள் அதிகம் பயன்படுத்தப்பட்டன. போரில், யானை, குதிரை முதலான விலங்கினங்கள் ஈடுபட்டமையை கபிலர் பாடல்கள் வழி அறியலாம்.

#### 1. யானை

வன்கண்மையுடைய கொல்லும் யானையால் காவலுடைய கணையமரத்தை முறித்து, இரும்பால் செய்த அங்குசத்தால் அந்த யானையைத் தூண்டுவர் என்பதை,

"கடுங் கண்ண கொல் களிற்றால்

காப்பு உடைய எழு முருக்கி" (புற.நா.14)

என்ற பாடல் வரியால் யானை போருக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியலாம்.

## 2. குதிரை

பாரியோடு போர் செய்வதற்காக வந்த வேந்தரின் பொன்னால் செய்யப்பட்ட அணிகலன் அணிந்த போர்க் குதிரைகளை எண்ணி விளையாடுகின்றனர் பாரி மகளிர்.

"———————— போர் எதிர்ந்து வந்த

வலம்படு தானை வேந்தர்

பொலம் படைக் கலிமா எண்ணுவோரே" (புற.நா.116)

என்ற பாடல் வரிகள் குதிரைகள் போருக்குப் பயன்படுத்தப்பட்டுள்ளதை விளக்குகின்றன.

"இழையணிந் தெழுதரும் பல்களிற்றுத் தொழுதியொடு

மழையென மருளும் மாயிரும் பல்தோல்

எஃகுபடை யறுத்த கொய்சுவல் புரவியொடு" (பதி.பத்து.62)

என்ற அடிகள், அணிகள் பூண்ட பலவாகிய களிற்றின் தொகுதிகள் போருக்கு எழும். கொய்யப்பட்ட பிடரிமயிரையுடைய குதிரைப்படையும் அத்துடனே எழும் என்ற செய்தி அமைந்துள்ளது. அக்கால மக்கள் யானை, குதிரை இரண்டையும் போருக்குப் பயன்படுத்தியுள்ளனர் என்பது விளங்குகிறது.

### 3.3.6. பரிசுப் பொருளாக அமையும் உயிரினங்கள்

பரிசில் வாழ்க்கை போற்றப்பட்ட அக்கால சமுதாயத்தில் உயிரினங்களைப் பரிசிலாகத் தருதலும் அமைந்தன.

#### 1. யானை

மன்னர்கள், இரவலர்களுக்குப் பரிசுப் பொருளாக யானைகளைக் கொடுத்து மகிழ்ந்துள்ளனர்.

"விளங்குறு பராரைய ஆயினும், வேந்தர்
வினைநவில் யானை பிணிப்ப,
வேர் துளங்கின, நம் ஊருள் மரனே" (புற.நா.347)

என்ற வரிகளில் அகுதை என்னும் வள்ளலிடம், பெண் யானைகளைப் பரிசாகப் பெறுகின்றனர் இரவலர். இவர்கள் கோசர்களின் விருப்பப்படி, நன்னனுடைய காவல் மரத்தில் தாங்கள் பெற்ற யானைகளைப் பிணிக்கின்றனர். அவை அம்மரத்தைச் சிதைக்கின்றன, என்பது பெறப்படுகிறது.

"நீயே, வளியின் இயல்மிகும் தேரும், களிறும்
தளியின் சிறந்தனை—வந்த புலவர்க்கு
அளியொடு கைதூவலை" (குறி.கலி.50)

என்ற வரிகளில் காற்றினும் விரைந்து செல்லும் மிக்க தேரினையும், களிற்றையும், பாரி தன்னிடம் வந்த புலவோர்க்கு மழையினும் அருள் சிறந்து, மகிழ்வுடன் வழங்குவான். அவ்வாறு வழங்குவதில் கை ஒழியாதவன் தலைவன் என்ற செய்தி பெறப்படுகிறது.

இதன் மூலம் யானை பரிசுப்பொருளாக பயன்படுத்தப் பட்டுள்ளமையைக் கபிலர் பாடல்கள் வெளிப்படுத்தியுள்ளன என்பது அறியப்படுகிறது.

## 3.3.7. பலியிடும் நம்பிக்கையில் உயிரினங்கள்

அக்கால மக்களிடம் பலியிடும் வழக்கம் நாளடைவில் தோன்றியது. அப்பலியிடலுக்கு மக்கள் தாங்கள் உண்ணுதற்கு ஏற்ற விலங்குகளைப் பயன்படுத்தினர்.

### 1. ஆடு

"சிறுகுளகு அருந்து, தாய்முலை பெறாஅ,
மறிகொலைப் படுத்தல் வேண்டி, வெறிபுரி
ஏதில்வேலன் கோதை துயல் வர" (அக.நா.292)

என்ற பாடல் வரிகளில் "தாயின் முலைப்பால் கிடைக்காமல் மெல்லிய தளிராகிய தழையுணவை உண்ணக்கூடிய மிக்க இளமையுடைய ஆட்டுக்குட்டியைப் பலிக்காகக் கொல்வர்" என்ற செய்தி பெறப்படுகிறது. இதன் மூலம் ஆட்டைப் பலியிடும் பழக்கம் அக்கால மக்களிடமும் நிலவி வந்ததை உணர முடிகிறது.

## 3.3.8. வணிகப் பொருளாக உயிரினங்கள்

### 1. யானை

குறிஞ்சி நில மக்கள் தம் தேவைக்கு யானையின் கொம்பை விற்று அதற்கு விலையாகப் பிற பொருளைப் பெறுவர்.

"கடுங்கண் வேழத்துக் கோடு நொடுத்து உண்ணும்

வல்வில் ஓரி கொல்லிக் குடவரைப்

பாவையின் மடவந்தனளே" (குறுந்.100)

என்பது, மலையில் சிறுகுடியில் வாழும் மக்கள் உணவின்றிப் பசிப்பாராயின், வலிமையுடைய யானையின் கொம்பை விற்று, அதன் விலையால் பெறப்படும் உணவை உண்டு வாழ்வர் என்பதை உணர்த்துகிறது.

பகைவேந்தர் ஊர்ந்து செலுத்தும் யானையது வெண்கொம்பைப் பறித்துக் கொண்டு கடைத்தெருவுக்குள் புகுந்து, அரிய கள்ளிற்கு அக்கொம்புகளை விலையாகத் தந்து குடிப்பர் என்பதனை,

"வேந்தூர் யானை வெண்கோடு கொண்டு

கள்கொடி நுடங்கும் ஆவணம் புக்குடன்" (பதி.பத்து.68)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன.

### 3.3.9. தொழில் பயன்பாட்டில் உயிரினங்கள்

அக்கால மக்களிடம் உயிரினங்களைத் தங்கள் தொழில் சார்ந்த பணிகளிலும் ஈடுபடுத்தும் பழக்கம் காணப்பட்டது.

**1. யானை**

குறிஞ்சி நில மக்களின் அன்றாடம் பயன்படுத்தப்படும் பொருளாகவும், நிலத்தை உழுவதற்கும் விலங்கினங்கள் பயன்பட்டன.

"-----------வயக் களிற்றுக்

கோடு உலக்கையாக, நல் சேம்பின் இலைசுளகா" (குறி.கலி.41)

என்ற வரிகளில் வலிமை படைத்த யானையினது கொம்பை உலக்கையாகக் கொண்டு குற்றுவதைப் பாடல்வரிகள் உணர்த்துகின்றன.

"கொல் யானைக் கோட்டால் வெதிர்நெல் குறுவாம் நாம்" (குறி.கலி.42)

என்ற அடியில் கொல்லப்பட்ட யானையின் கொம்பால், மூங்கில் நெல்லைக் குற்றுவது அறியமுடிகிறது.

## 2. பன்றி நிலத்தை உழுதல்

பன்றி உழுதமையால் ஓங்கிய உயர்ந்த கோரைப் புற்கள், அவை உள்ள இடத்திற்கு நெல்வயல் போன்ற தோற்றத்தைக் கொடுக்கும்.

"கேழல் உழுதெனக் கிளர்ந்த எருவை
விளைந்த செறுவின் தோன்றும் நாடன்" (ஐ.கு.நூ.269)

என்பதில் பன்றி நிலத்தைக் கொம்பினால் உழுததை அறிய முடிகிறது.

"கிழங்கு அகல் கேழல் உழுத சிலம்பில்
தலை விளை கானவர் கொய்தனர் பெயரும்" (ஐ.கு.நூ.270)

என்ற வரிகளில் "கிழங்குகளை அகழ்ந்தெடுக்கும் பன்றிகள் தம் கொம்பினால் உழுத புழுதியில் தாம் விதைத்து விளைவித்த தினையின் முதல் விளைச்சலைக் கானவர் கொய்தனர்" என்று தோழி கூறுவதில் பன்றி நிலத்தை உழுவதற்குப் பயன்பட்டதை அறியமுடிகிறது.

குறிஞ்சி நிலப் பின்னணியில் அதிகம் காணப்பட்ட ஊறு செய்யாத பழக்கத்திற்கு ஏதுவான உயிரினங்களைத் தொழில் பயன்பாட்டிற்கு அக்கால மக்கள் கொண்டனர் என்பது தெளிவாகிறது.

# ஆய்வு முடிவுகள்

கபிலரின் இலக்கியக் கோட்பாட்டில் இடம் பெறும் உயிரினங்கள், தொல்காப்பியரின் இலக்கியப் படைப்புக் கோட்பாட்டிற்குப் பெரிதும் பொருந்த அமைந்திருக்கின்றன என்பதனை வரையறை செய்யத் தொடங்கிய இவ்வாராய்ச்சி, இந்நோக்கினின்றும் மாறாது, விளக்கமாக விரிந்து, இதுகாறும் கண்டவற்றோடு நிறைவைக் கண்டது. இவ் ஆய்வில் பெற்ற கருத்துகள் நிறைவுரையில் தக்க அளவில் சுருக்கமாகத் தரப்பெற்றுள்ளன.

## இயல்கள் உணர்த்தும் மெய்ம்மைகள்

இவ்வாராய்ச்சியில் பொருந்திய இயல்களில் ஆராய்ந்து கண்ட மெய்ம்மைகளின் பிழிவுகள் இங்குத் தரப்பெறுகின்றன.

- இலக்கியம் சுவைபட வருபவை அல்லது சிறந்து நிற்பவை பற்றிக் கூறுவதாக அமையும்.

- தொல்காப்பியம் பொருளதிகாரத்தின் ஒன்பது இயல்களில் முதல் ஐந்து இயல்கள் பாடுபொருள்களை வகைப்படுத்துகின்றன. அடுத்த நான்கு இயல்கள் செய்யுள் அமைப்பையும், மரபையும் விளக்குகின்றன.

- தொல்காப்பியம் பொருளதிகாரம் அவர்கால இலக்கிய ஆக்கத்திற்கான இலக்கணம் கூறுவது.

- ஒரு இலக்கிய நிகழ்வானது அந்நிகழ்வை மேம்படுத்துவதற்கான பின்னணியில் கூறப்படுவது அந்நிகழ்வின் உணர்வை மேலும் தூண்டக்கூடியதாக அமைகிறது.

- இப்பின்னணியானது பாடலின் அளவிற்கு ஏற்ப அமையும்.

- கவிதையின் பாடுபொருளாக வரும் முதல், கரு, உரி எனும் மூன்றனுள் முதல் கருப் பொருட்கள் நிலைத்தன்மை பெற்றவை. உரிப்பொருள் வரையறைகள் புலவர்களால் இயற்றப்படும் செய்யுளுக்கு மட்டும் உரியவையாகும்.

- உவமை, உள்ளுறை, இறைச்சி ஆகியன கவிதைக்கே உரியக்கூறுகள். அவற்றுள் உள்ளுறை, இறைச்சி இரண்டும் அகத்திணைக்கே உரியவை.

- திணை இலக்கியம் நிலத்தை அடிப்படையாகக் கொண்டது. மனித உளவியலை அடிப்படையாகக் கொண்டு அகப்புற நிகழ்ச்சிகளைக் கருவாக்கி அதில் தோன்றும் சிறுசிறு சிக்கல்களைப் பின்னிப் புனைவது திணை இலக்கியம்.

- அகம், புறம் என்பன பொருள் கருதி பிரிக்கப்பட்டுள்ளன. அகத்திணை ஏழனுள் கைக்கிளை ஆண்பாற்குரியது. அகத்திணைக் கைக்கிளையில் பெண்பாற்கு இடம் இல்லை.

❖ அன்பின் ஐந்திணை ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே அமையும் பத்துவகைப் பொருத்தத்தில் உள்ளடங்கி மேற்கொள்கின்ற உயர்வான காதல் என வரையறுக்கப்படுகிறது.

❖ 'உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே'– என்ற நூற்பா கருத்தை விளக்குவதில் இளம்பூரணர், நச்சினார்க்கினியர் ஆகியோரிடையே கருத்து வேறுபாடு உள்ளது. இதில் நச்சினார்க்கினியர் கருத்து பொருத்தமாக உள்ளது.

❖ உரிப்பொருள் அல்லாத கைக்கிளையும், பெருந்திணையும் பிற திணைகளில் மயங்கி வரும் என்ற நச்சினார்க்கினியரின் கருத்தே தொல்காப்பியர் கருத்தாக அமைகிறது.

❖ அகப்பாடல்கள் பெரும்பான்மை முதல் பொருளாலேயே திணை வகுக்கப் பெற்றுள்ளன.

❖ திணை–ஒழுக்கம்–உரிப்பொருள் ஆகிய அனைத்தும் ஒரு பொருள் குறித்தன.

❖ முதல் பொருளில் நிலம் மயங்காது. பொழுது மயங்கும். கரு, உரிப்பொருட்கள் அனைத்தும் மயங்கி வரும்.

❖ திணை ஏழாயினமைக்குக் காரணம் எழுவகைக் காதல் ஒழுக்கங்களே–உரிப்பொருள்களே ஆகும்.

- உவமையின் பொருளை அதன் மரபு வழியோடு ஒட்டிப் பொருள் காண வேண்டும்.

- தொல்காப்பியர் உவமையை அணி எனக் கொள்ளாமல் பொருளுறுப்பாகக் கொள்கிறார்.

- பிற்கால அணி இலக்கண வளர்ச்சிக்குத் தொல்காப்பியரின் 'உவமவியல்' பகுதி பெரும்பங்கு வகிக்கிறது.

- உவமை பொது உவமம், உள்ளுறை உவமம் என இருவகைப்படும். இரண்டும் அகப்பாடல்களில் வரும்.

- உள்ளுறை தெய்வம் ஒழிந்த கருப்பொருள்களை அடிப்படையாகக் கொண்டு வரும்.

- பொது உவமத்தில் தெய்வமும் உவமையாகும்.

- தண்டியலங்காரத்தில் இடம் பெறும் ஒட்டணி உள்ளுறையை அடிப்படையாகக் கொண்டது.

- உள்ளுறை சொல்ல வந்த கருத்துக்கு மறுதலையாக அமையும் முரண்குறிப்பாகவும் வரும்.

- படிமங்கள் உள்ளுறையால் உறையும் சிறப்பு பெற்றவை. வடமொழியாளரின் தொனி போன்றது உள்ளுறை.

- குறிப்புப் பொருளாய்ச் செய்யுளுள் இடம் பெறுவன உள்ளுறையும் இறைச்சியுமாகும்.

- உவமையும் பொருளும் உய்த்துணர்ந்து அறியப்படுவது உள்ளுறை. உவமை வெளிப்பட புலப்பட்டு இருக்கும். அதனால் உணர்த்தப்படும் உவமேயம் பொருள் புலப்படாமல் மறைந்து இருக்கும்.

- உள்ளுறை படைப்போன் முன்பே திட்டமிட்டுக் கொண்டு படைக்கப்படுவது.

- உள்ளுறையின் நோக்கம் தலைவனின் தீய ஒழுக்கம், கூடா ஒழுக்கம் இவற்றைத் தவிர்ப்பது ஆகும்.

- தலைவனின் நிலம் சார்ந்த கருப்பொருட்கள் இயற்கைக் காட்சிகளோடு உள்ளுறையாக அமையும்.

- ஒரு பாடல் எத்துணை உள்ளுறைகளைக் கொண்டு அமைந்தாலும் அத்தனை கருத்துகளும் ஒரே ஒரு உட்கருத்தை நோக்கித்தான் பயன்படுத்தப் பெறும்.

- உள்ளுறை தலைவனுக்கு அறிவுறுத்துதலாகவே அமையும். உள்ளுறை தலைவனுக்காக தலைவன் காதுபடவே உரைக்கப்பெறும்

- உள்ளுறை குறிஞ்சி, மருதம், நெய்தல், நிலப் பாடல்களுக்குப் பொருந்தும்.

- உள்ளுறை தலைவனது நடத்தைப் பற்றியே அமைந்திருக்கும்.

- தலைவனது செய்கை அவன் நிலத்துக் கருப்பொருள்களை ஒத்தோ அல்லது அவற்றின் தன்மையைக் காட்டிலும் சற்றுத் தாழ்ந்தனவாகவோ இருக்கலாம்.

- தொல்காப்பியத்திற்குப் பின் வந்த இலக்கண நூல்கள் தொல்காப்பியரின் சிந்தனைகளைச் சுருக்கிக் கூறுவதாகவும், பல தொல்காப்பியக் கோட்பாட்டைத் திருப்பிச் சொல்வதுமாகவும் உள்ளன.

- நாற்கவிராச நம்பியாரின் அகப்பொருள் தொல்காப்பியக் கருத்தைத் திருப்பிச் சொல்வது. அகப்பொருள் இலக்கணத்தில் உள்ளுறை, உவமையை மட்டும் கூறி ஏனைய உள்ளுறைகள் கூறாமல் விடுபட்டுள்ளன.

- மாறனலங்காரத்தில் உள்ளுறை உவமை மட்டுமே கூறி, உள்ளுறை, அதன் வகை முதலியவை விடுபட்டுள்ளன.

- வீரசோழியம் இதனை சுருக்கணி என்று கூறுகிறது. பிற்காலத்தவர்கள் கூறும் ஒட்டணி அகம், புறம் அனைத்திற்கும் பொதுவானது.

- இறைச்சி பெரிதும் பயன்படும் இடங்கள் பாலைவழியிடையே காணப்படும் தன்னியல்பான காதல் செயல்களேயாகும்.

- விலங்குகளின் தன்னியல்பான குடும்ப உறவு, காதலுறவு போலும் செயல்களில் ஈடுபடும் போது அவற்றைப் பார்க்கும் இளையவர்களுக்குக் காதல் உணர்வைத் தூண்டும்.

- பறவை, விலங்கினம் போன்றவற்றின் அன்பு, அவற்றிடையேயும் காணப்படும் தன்னியல்பான காதல் செயல்களைக் குறித்த இறைச்சி எனும் சொல் தற்காலத்தில் ஊனைக் குறிப்பதாக உள்ளது. இது இழிபொருட்பேறு.

- இறைச்சி என்பது பறவை, விலங்கினங்களின் வாழ்க்கை நிகழ்ச்சிகளைக் குறிக்கப் பயன்பட்டது. அவற்றின் பாலுணர்வு வெளிப்பாடுகளை, அன்பை வெளிப்படுத்தும் மிகுவிக்கும் காட்சிகளைச் சுட்டப் பெரிதும் இடனாயிற்று.

- ‘இறைச்சி’ என்பது இதனால் பிறிதொரு பொருளையும் உணர்த்துவதாகியது. அதற்குக் குறிப்புப் பொருள் தரும் சிறப்பும் இருப்பதனால், இறைச்சி என்றாலே குறிப்புப் பொருள் என அதன் கருத்து வளர்ந்தது.

- இறைச்சி என்றால் உயிரினங்களின் அன்பு நிகழ்ச்சி. இறைச்சி, அன்பு, காதல், பாலுணர்வுடன் நெருங்கிய தொடர்புடையதாயிற்று.

- இறைச்சி பாலுணர்வுத் தூண்டல்களுக்குப் புறத்தூண்டல்களாகப் பயன்பட்டவை. இயற்கைக் காட்சிகள் வழியிடைக் காணும் காட்சிகளே இறைச்சியில் மிகுதி.

- மக்களின் காதல் ஒழுக்கங்கள் உரிப்பொருள். பிற உயிரினங்களின் காதற் செயல்கள் உரிப்புறத்தன என்னும் இளம்பூரணர் கருத்து ஏற்புடையதாகிறது.

- மக்களின் காதலாகிய உரிப்பொருளைச் சார நின்று அதன் கருத்தை, உணர்வை மிகுவிக்க வரும் என்பதாம். இறைச்சியானது உரிப்புறத்தானது என்பது கருத்து.

- உள்ளுறையானது ஒன்றைக் கூறி, அதன் வழியாகப் பிறிது ஒன்றை விளக்குவது. உவமையைக் கூறி உவமிக்கப்படும் பொருளை உணர்த்துவது போன்றது அது. இதற்கு இது என்று நிரலே ஒப்புமையுடைய ஒவ்வொன்றையும் பொருத்திப் பார்க்க வேண்டும்.

- இறைச்சி உயிரினங்களின் காதல் செயல்களை அடிப்படையாகக் கொண்டது. பாடலைப் படிக்கும் போது அதனுள் சொல்ல வந்த செய்தி இருக்காது. படித்து முடித்தபின் தோன்றுவது இறைச்சி. அதுவும் ஒட்டுமொத்தமான பொருளே. இதில் 'அன்புறுவதற்கு ஏற்புடையனவே' வரும்.

- உள்ளுறைப் பொருளை முற்றிலும் உணர்ந்தால் தான் பாட்டுப்பொருளை முழுவதும் அறிய முடியும். இறைச்சியின் பொருள் அறிய முடியாவிடினும் சொல்ல வந்த செய்தியில் குறைவு இருக்காது.

- இயற்கைக் கூறுகளை உணர்ந்து தெளிந்த ஆற்றலைத் தொல்காப்பியர் நுணுக்கமாக மரபியலில் உணர்த்தியிருக்கின்றார்.

- மரபு மீறுதல் என்பது முன்னைய அடிப்படையை வைத்தே செயல்படுவதாகும். மரபில் வளர்ச்சி காட்டுவதே இலக்கியத்தின் தனித்திறன் வெளிப்பாடாகும்.

- தொல்காப்பியர் மரபியலில் தரும் செய்தியால் ஆண்பால் பெயர்கள், பெண்பால் பெயர்கள், இளமைப் பெயர்கள் ஆகியவை சிறப்பான இடத்தைப் பெறுகின்றன.

- நாட்டுப்புறவியல் என்ற துறை தொல்காப்பியரின் மரபியலோடு தொடர்புடையதாக அமைந்துள்ளது. நிலப்பகுதிகளைத் தகவல் சேகரிக்கும் களங்களாகத் தேர்வு செய்து, தன் முயற்சியைத் தொடங்கியிருக்கிறார் என்பதனை மரபியலில் கூறப்பட்ட வேறுபட்ட நிலங்களுக்குரிய விலங்குகள் பறவைகள் பற்றிய செய்திகளிலிருந்து உணரலாம்.

- தொல்காப்பியர் நிகழ்ச்சி நடைபெறுகின்ற போது தான் பார்வையாளராக இருந்து தனக்குத் தேவையான செய்திகளைச் சேகரிப்பது, தான் சேகரிக்க நினைத்த தகவல் தொடர்பான வினாக்களைத் தகவலாளியிடமே கேட்டு விடை தெரிந்து கொள்ளுதல் என இரண்டு விதமான சேகரிப்புத் தகவல்களைத் தந்துள்ளார்.

- தகவல் சேகரித்த பின்னர் அவற்றை முறையாக வகைப்படுத்தி தகவல்களைப் பதிவு செய்தார். எந்தெந்த உயிர்களுக்கு ஆண்பால்,

பெண்பால், இளமைப் பெயர்களை வழங்கப்பட வேண்டும் என்பதையும் முறையாக வகைப்படுத்தியிருக்கிறார்.

- 'நாட்டுப்புற இயல்' என்ற துறையில் முக்கிய அங்கமாகக் கள ஆய்வுக் கோட்பாடுகளை மரபியல் என்னும் இயல் வழியாகத் தந்துள்ளார்.

- தலைச்சங்க காலத்து இலக்கியங்களின் பாடுபொருள் தொல்காப்பிய இலக்கணத்திற்கு ஏற்றதாக அமைந்திருக்கலாம். சங்க இலக்கியங்கள் இதன் கால எல்லையில் தோன்றியிருந்தாலும் இவற்றிற்கு முன்னைய மரபு ஒன்று இருந்திருத்தல் வேண்டும். கபிலர் பயன்படுத்திய இலக்கிய உத்தி தொல்காப்பியர் காலத்திற்கு முன்பும் இருந்துள்ளதாகக் கொள்ளலாம்.

- முல்லை நிலத்திற்குரிய கருப்பொருள்களுள் ஒன்றான மான் குறிஞ்சி நிலத்தில் இடம் பெற்றுள்ளது.

- உவமைக்காகவும் திணைக்குரிய விலங்கு மாறி வருவதும் உண்டு.

- 'மான்' என்ற சொல் விலங்குகளைக் குறிப்பிடும் பொது சொல்லாக இருந்து பிற்காலத்தில் வருடை மானைக் குறிக்கும் சிறப்புச் சொல்லாக வழங்கியது.

- இயற்கை நிகழ்ச்சிகளை மனித உணர்வோடு இயைத்துப் பேசுகின்ற இடங்கள் பல கபிலர் பாடல்களில் காணப்படுகின்றன.

- கபிலர் இலக்கியத்தில் இயற்கையை மனிதர்களுக்குப் பின்னணியாகவும், மனித வாழ்க்கைக்கு மனித உள்ளுணர்வுகளுக்குப் பின்னணியாகவும் படைத்துள்ளார்.

- மரபாகி உவமையாகி வழங்கிய ஒன்றைப் பொருளாக்கிப் பொருளை அதற்கு உவமையாக மாற்றியமைக்கும் பாங்கும் கபிலர் பாடல்களில் அமைந்துள்ளது.

- உவமையில் வினை, பயன், மெய், உரு ஆகிய நான்கிலும் உயிரினங்கள் இடம் பெறுகின்றன.

- இரண்டு பொருளுக்கு ஒரு உவமையும் கூறப்பட்டுள்ளது.

- கபிலர் வினை உவமத்தில் ஒப்பிணை உவமையை அமைத்துள்ளார். தொடர்புபடுத்தக்கூடிய வேறுபட்ட இரு பொருட்கள் தொடர்பும் உறவுமுடைய இருவருக்கு உவமையாகும் போது இவ்வகை உருவாகின்றது. கபிலர் உவமையை பொருத்தமுடையதாக அமைத்துள்ளார்.

ஒரு பொருளுக்கு உவமை கூறுமிடத்து ஒரு உவமை கூறி அமைந்து விடாது உவமைப் பொருளுக்கும் உவமையொன்று அமைத்துக் கூறியுள்ளார் கபிலர்.

- பின்புல வருணனை கால–இடக்குறிப்பு தருவதோடு உள்ளுறை, இறைச்சிக்கும் களனாக அமைகிறது.

- தொல்காப்பியர் வகுத்த உள்ளுறை, இறைச்சிக்கான கோட்பாடுகள் கபிலர் பாடல்களில் ஏற்றி துல்லியமாக விளக்கப்படுகின்றன.

- உள்ளுறை, இறைச்சிப் பொருளில் உயிரினங்களின் அதிகாரத்தன்மை காணப்படுகின்றன.

- கருப்பொருள்களுள் விலங்கு, பறவை ஆகியவை பாடல்களில் வரும்பொழுது நில மரபுகளை ஏற்றுவரும்.

- தொல்காப்பியர் மரபியலில் குறிப்பிட்ட இளமைப் பெயர்களுள் குழவி, மறி, குருளை, பார்ப்பு, பறழ் எனும் சொற்கள் கபிலர் பாடல்களில் இடம்பெற்றுள்ளன.

- மரபு வளர்ச்சியின் காரணமாகத் தொல்காப்பியர் குறிப்பிடாத சில இளமைப் பெயர்களும் கபிலர் பாடல்களில் மாறுபட வந்திருக்கின்றன.

- சில இளமைப் பெயர்கள் மாறுபட வந்திருப்பினும் அவையும் மரபு வளர்ச்சியினையே தெரிவிக்கின்றன.

- ஆண்பால் பெயரைக் குறிக்கத் தொல்காப்பியரால் குறிக்கப் பெற்ற பெயர்களுள் களிறு, ஒருத்தல், ஏறு, கடுவன், கலை, போத்து, வேழம் ஆகிய பெயர்கள் கபிலர் பாடல்களில் இடம் பெற்றிருப்பதும் தொல்காப்பியர் குறிப்பிடாத 'வாரணம்' எனும் சொல் கபிலர் பாடல்களில் இடம் பெற்றிருப்பதும் மரபு வளர்ச்சியினையே காட்டுகின்றன.

❖ ‘பிணவு’ என்னும் மக்கட்குரிய பெண்பால் பெயர் விலங்கின் பெண்பாலை உணர்த்தும் பெயராகவும் அமைந்துள்ளது.

❖ விலங்கு, பறவை இனங்களின் பெண்பால் பெயர்களைக் குறிக்கும் சொற்கள் தொல்காப்பியரின் மரபுச் சொற்களை அடியொற்றி வந்திருக்கின்றன.

❖ பன்றி, புல்வாய், நாய் ஆகிய மூன்றினுக்கும் குறித்த ‘பிணவு’ என்னும் பெண்பால் பெயர் தொல்காப்பியர் விதிக்கு மாறாக பெண்புலியைக் குறிக்கின்றது.

❖ குறிஞ்சி நிலப் பகுதியில் யானைகள் கூட்டம் கூட்டமாக வாழும். யானைகள் அஃறிணை உயிரே ஆயினும் களிறும் பிடியும் உயர்திணை மக்களைப் போலவே அன்பு வாழ்க்கை நடத்தும் இயல்பு கொண்டவை.

❖ ஆண் யானை, பெண் யானையை விட்டுப் பிரியாது. கருவுயிர்த்து இருக்கும் மடப்பிடி விரும்பியுண்ணும் என சுவையுடைய கரும்பின் கோல் முறித்து கொணர்ந்து கொடுக்கும் தன்மையது.

❖ யானைக் கன்றிற்குப் பிடியானை பால் கொடுத்து தன்னுடனேயே வைத்துக் கொள்கிறது.

❖ களிற்றியானை மூங்கில் முளைகளையும், தழைகளையும் கொண்டு வந்து கொடுத்து சுற்றத்தைப் பேணிப் பாதுகாக்கிறது.

- ❖ வீரம் செறிந்த வேழங்கள் வலிய புலியை எதிர்த்துத் தாக்கிக் கொல்கின்றன. பகைமை உணர்வு மேலோங்கியதால் புலி போல் காட்சி தரும் வேங்கை மரத்தை புலியெனக் கருதித் தாக்குகின்றது.

- ❖ ஒரு பிடிக்காக இரண்டு களிறுகள் ஒன்றொடொன்று மோதிக் கொள்ளும் செயலும் உண்டு.

- ❖ மதம் கொண்ட யானை கட்டுப்பாடுகளைக் கடந்து செயலாற்றும்.

- ❖ யானைகள் மூங்கிலின் முளைகள், குளகு, வளகென்னும் புதலின் தழைகள், திணை, சுனைநீர் ஆகியவற்றை உட்கொண்டு வாழும்.

- ❖ பெண்புலி குட்டிகளை ஈன்று அதற்குப் பாதுகாவலாக இருக்கும். ஆண்புலி வயா வருத்தத்தையுடைய பெண்புலிக்கு வலப்பக்கம் வீழுமாறு வீழ்த்திய காட்டுப்பசுவை உணவாகக் கொண்டு வந்து தரும். புலி தான் கொல்லக் கருதிய உயிரினம் தப்பிய நிலையில் அடங்காத சினம் கொண்டு முழங்கும்.

- ❖ புலிகள் பன்றிகளோடும் சண்டையிடும். யானை, மான், மாடு இவைகளில் எதுவும் கிடைக்காத பொழுது, பன்றியை வலம்பட வீழ்த்தித் தின்னும்.

- ❖ புலிகள் மலையகத்து வாழும் உயிர்களில் எதுவும் கிடைக்காத நிலையில் மனிதர்களை எதிர்பார்த்துக் காத்திருக்கும்.

- பார்ப்பதற்கு வெறுப்பூட்டத்தக்கனவும், அழகே சிறிதும் இல்லாததுமான பன்றிகள் பாடல்களால் அழகுற்றுத் தோன்றுகின்றன.

- புலியால் கொல்லப்பட்ட பெண்பன்றி ஈன்ற குட்டிகளை ஆண் பன்றி பாதுகாத்து இருக்கும்.

- வேடர்களிடம் இருந்தும், வேட்டை நாய்களிடமிருந்தும் பெண் பன்றியையும் குட்டிகளையும் அஞ்சாமையுடன் காத்து வாழும்.

- குரங்குகள் கூட்டம் கூட்டமாக வாழும். மரத்திற்கு மரம் தாவும். அருவி நீரில் பாய்ந்து விளையாடும். இளங்குட்டிகள் தன் தாயைப் பற்றிக் கொள்ளும் திறன் கொண்டவை. பலாப்பழத்தைத் தெப்பமாகக் கொண்டு நீரில் நீந்திக் கரையேறும்.

- மக்களைப் போலவே குரங்குகளும் களவு வாழ்க்கை வாழ்ந்து கடிமணம் புரிந்து கொள்ள சுற்றத்தை எதிர்பார்த்து இருக்கும் என்ற கற்பனை குரங்கை மனிதச் சமுதாயத்துடன் தொடர்புபடுத்தும் நிலையைச் சுட்டுகிறது.

- குரங்குகள் புலிக்கும், குறவர் எய்தும் அம்பிற்கும் அஞ்சும் தன்மையுடையன. மயிலின் முட்டைகளை கருங்குரங்கின் குட்டிகள் பாறையிலே உருட்டி விளையாடும்.

- குதிரைகள் விரைந்து செல்லும் தன்மையுடையதாய் தேர் இழுப்பதற்கும், போரில் பகைவர்களை அழிக்கவும், பரிசுப் பொருளாகவும் பயன்படுத்தப்பட்டன.

- ஆட்டுக்கடாய் பிற ஆடுகளை விரும்பிப் போய்விட்டாலும் அதன் மறி 'அது' தன்னை நாடி வரும் என்ற ஆசையினால் உயிர் தங்கியிருக்கும்.

- வேலன் வெறியாட்டத்தில் ஆட்டுக்குட்டி பலியிடப்படுகிறது. கரடிகள் கூட்டமாக பாம்புப் புற்றைச் சூழ்ந்து ஈயலையும், புற்றாஞ்சோற்றையும் விரும்பியுண்ணும்.

- குறவர்கள் வேட்டையாடுவதற்காக நாயைப் பயன்படுத்தியுள்ளனர். அவை தலைவனை விட்டு வேறு திசையில் சென்றாலும் அவனால் ஊதப் பெறும் ஊதுகொம்பின் ஒசையால் வழியறிந்து விரைந்து செல்லும்.

- வீட்டைக் காக்கும் நாய்கள் அயலாரையோ, ஐயுறத்தக்கப் பொருளையோ காணின் குரைத்து வீட்டிலுள்ளாரை எழுப்பும்.

- மான்கள் வேங்கையின் பொன்னிறமான மலர்களை உண்டு வாழும்.

- முள்ளம்பன்றி புதரினுள் பதுங்கியிருக்கும்.

- அன்றில் பறவையை மாலை நேரத்தில் தன் துணைப்பறவை அழைக்கும்.

❖ கிளிகள் சுற்றத்தோடு தினைக்கதிரைத் தின்று ஓசை எழுப்பும். தினைப்புனம் காக்கும் மகளிர் எழுப்பும் ஓசையைத் தன் இனம் எனக் கருதி எழுந்து போகாமல் ஓசை எழுப்பும்.

❖ ஏனைய பாடல்களில் 'குரீஇ' என்னும் வடிவில் வழங்கிய சொல் கபிலர் பாடல் ஒன்றில் 'குருவி' என அழைக்கப்படுகிறது.

❖ நாரைகள் கொழுத்த மீனை அருந்தக் கூட்டமாகக் காத்திருக்கும்.

❖ கூகையின் ஒலி தீய நிமித்தத்தைக் குறிக்கும் என்ற நம்பிக்கை மக்களிடையே நிலவியிருந்தது.

❖ மயில்கள் தினையை உண்டு வாழும். மலைப்பக்கத்தே நீர் என்று கருதி கள்ளை அறியாமல் உண்டு மகிழும். வேங்கை மரத்தின் உயர்ந்த கிளையில் கூடு கட்டி வாழும்.

❖ நாய் வேட்டைக்காகவும் வீட்டின் காவலுக்காகவும் தோழமை உணர்வுடன் பயன்படுத்தப்பட்டது.

❖ குரங்கினை விருந்தாக ஏற்றுக் கொள்ளும் பாங்கு குறமகளிடம் காணப்பட்டது.

❖ ஊர்தியாகக் குதிரைகளும் யானைகளும் பயன்படுத்தப்பட்டன.

❖ விரிச்சி கூறும் பறவையினத்துள் ஒன்று கூகையாகும்.

❖ யானைகளும், குதிரைகளும் போரில் பயன்படுத்தப்பட்டன. பரிசுப் பொருளாகவும் பயன்படுத்தப்பட்டன.

❖ யானையின் கொம்புகள் வணிகப் பொருளாகப் பயன்படுத்தப்பட்டன. குறிஞ்சி நிலமக்கள் யானையின் கொம்பினை உலக்கையாகப் பயன்படுத்தியுள்ளனர்.

❖ சங்க கால சமுதாயத்தில் மனிதன் பிற உயிரினங்களுடன் கொண்டிருந்த தொடர்பு மிகவும் வலுவுடையதாக இருந்தது என்பது இவ் ஆய்வின் வழி அறியலாகிறது.

மேற்கண்ட முடிவுகளுடன் "சங்க இலக்கியத்தில் உயிரினங்கள்'' என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு தன்னளவில் நிறைவுடையதாக அமைந்தாலும் மேலும் ஆய்வுகளுக்கு பின்வரும் நிலையில் இடமளிப்பதாக அமைந்துள்ளது.

1. தொல்காப்பியரின் அகப்பொருள் கோட்பாடுகளின் வழியில் கபிலர் தவிர்த்த பிற புலவர்களின் பாடல்களை ஆராய்வதற்கு இடம் உண்டு.

2. தொல்காப்பியர் கூறிய மரபியலோடு சங்க இலக்கியப் பாக்களை ஒப்பிட்டு ஆராய்வதற்கும் இடம் உண்டு என்பதை இம்முழுமை நோக்கில் கூறுதல் இயலும்.

# துணைநூற்பட்டியல்


1. அன்பு.ப. – 'ம.பொ.சி.யின் இலக்கிய நூல்கள்– ஒரு மதிப்பீடு',
1983 உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

2. ஆநிரைக்காவலன்.இராம. – 'புறநானூறும் கபிலர் கல்வெட்டும்'
2002 மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம்.

3. இராமசுப்பிரமணியம். வ.த. – 'நம்பியகப் பொருள் விளக்கம்'
2005 சிட்டு நூலகம், தி.நகர், சென்னை.

4. இளம்பூரணர். (உ.ஆ). – 'தொல்காப்பியம் பொருளதிகாரம்'
1961 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

5. இளம்பூரணர். (உ.ஆ). – 'தொல்காப்பியம் எழுத்ததிகாரம்'
1996 திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

6. இளம்பூரணர். (உ.ஆ) – 'தொல்காப்பியம் சொல்லதிகாரம்'
2005 சாரதா பதிப்பகம், இராயப்பேட்டை. சென்னை.

7. இளங்குமரானார். இரா. – 'தொல்காப்பியம் சொற்பொருட் களஞ்சியம்'
2002 (முதல் பகுதி) தமிழ் மண் பதிப்பகம், தி.நகர், சென்னை.

8. காசிராசன். இரா. – 'காப்பியரின் எழுத்திலக்கணக் கோட்பாடு'
2000 மதி பதிப்பகம், மதுரை.

9. காளிமுத்து. கா – 'தொல்காப்பியம் அதன் இலக்கியக் கொள்கைகளும் குறுந்தொகையும்'
2003 பூம்புகார் பதிப்பகம்,
சென்னை.

10. கோபாலன். சே. (ப.ஆ) – 'நாற்கவிராச நம்பி இயற்றிய அகப்பொருள் விளக்கவுரை'
1962 சரஸ்வதி மஹால் வெளியீடு,
தஞ்சாவூர்.

11. சாமி. பி.எல். – 'சங்க இலக்கியத்தில் விலங்குகள்'
1992 திருக்குறள் பதிப்பகம்,
சென்னை.

12. சுந்தரமூர்த்தி. கோ. – 'பண்டைத் தமிழ் இலக்கியக் கொள்கைகள்'
1977 சர்வோதய இலக்கியப் பண்ணை,
மதுரை.

13. சுப்ரமணியன். ச.வே. – 'கம்பன் இலக்கிய உத்திகள்'
2002 மெய்யப்பன் தமிழாய்வகம்,
சிதம்பரம்.

14. சுந்தரமூர்த்தி.கு (உ.ஆ) – 'தண்டியலங்காரம்'
2004 உமா பதிப்பகம்,
மண்ணடி, சென்னை.

15. செயபால். இரா. (உ.ஆ) – 'அகநானூறு'
2004 நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை.

16. தமிழண்ணல். – 'தொல்காப்பியரின் இலக்கியக் கொள்கைகள்' (முதற்பாகம்)
2004 மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை.

17. தமிழண்ணல். – 'சங்க இலக்கிய ஒப்பீடு'
1985 மீனாட்சி புத்தக நிலையம்,
மதுரை.

18. தட்சிணாமூர்த்தி.அ (உ.ஆ) – 'ஐங்குறுநூறு'
2004 நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை.

19. தேவிரா – 'தமிழ் இலக்கியத் திறனாய்வும் பண்பாடும்'
2005 இதய ரோஜா பதிப்பகம்,
கோடம்பாக்கம், சென்னை.

20. நச்சினார்க்கினியர். (உ.ஆ) – 'தொல்காப்பியம் பொருளதிகாரம்'
1975 திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை.

21. நாகராசன். வி. (உ.ஆ) – 'குறுந்தொகை'
2004 நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை.

22. நாகராசன். வி. (உ.ஆ) – 'பத்துப்பாட்டு'
2004 நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட்,
அம்பத்தூர், சென்னை.

23. பகவதி கோவிந்தன் – 'தொல்காப்பியக் கொள்கைகளும்
2003 கலித்தொகையும்'
பகவதி பதிப்பகம்,
சென்னை.

24. பரிமேலழகர் (உ.ஆ) – 'திருக்குறள்'
1968 பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை.

25. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ)– 2004 — 'புறநானூறு' நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், அம்பத்தூர், சென்னை.

26. பாலசுப்பிரமணியன். கு.வெ. (உ.ஆ)– 2004 — 'நற்றிணை' நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், அம்பத்தூர், சென்னை.

27. பேராசிரியர். (உ.ஆ) – 1951 — 'தொல்காப்பியம் பொருளதிகாரம்' திருநெல்வேலித் தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை.

28. பொற்கோ. டாக்டர் – 2001 — 'தொல்காப்பிய அறிமுகம்' வானதி பதிப்பகம், திநகர், சென்னை.

29. மணவாளன். அ.அ. – 1995 — 'இருபதாம் நூற்றாண்டின் இலக்கியக் கோட்பாடுகள்' உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

30. மனோன்மணி சண்முகதாஸ். – 2000 — 'குறுந்தொகை – ஒரு நுண்ணாய்வு' உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

31. மாரிமுத்து. ஆ. – 2002 — 'கபிலர் கவிநலம்' தமிழ்த்தாய் பதிப்பகம், சிட்லபாக்கம், சென்னை.

32. முகமது அலி.ச. யோகானந்த்.க – 2002 — 'யானைகள் அழியும் பேருயிர்' காட்டுயிர் பாதுகாப்புக் கழகம், மலைபடுகடாம் பதிப்பகம், மேட்டுப்பாளையம்.

33. வசந்தகுமார். இரா. – 'அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள்'
2002 வசந்தா பதிப்பகம், சென்னை.

34. வரதராசன்.மு. – 'குறுந்தொகைச் செல்வம்'
2003 பாரி நிலையம், சென்னை.

35. வரதராசன். மு. – 'இலக்கிய மரபு'
1997 பாரி நிலையம், சென்னை.

36. விசுவநாதன். அ. (உ.ஆ) – 'கலித்தொகை'
2004 நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், அம்பத்தூர், சென்னை.

37. ஜான் லாறன்ஸ். செ. (ப.ஆ) – 'தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள்'
2001 உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

38. ஜான் லாறன்ஸ். செ. பகவதி. கு. (ப.ஆ) – 'தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்' உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

39. ஷாலாயேவ்.வ. ரிக்கல்.நி. – 'விலங்கியல்'
1979 மீர் பதிப்பகம், சோவியத் நாடு–மாஸ்கோ. ரிஜ்ஸ்கி பெரெயூலக்–2


## ஆய்வேடு


1. இராஜேஸ்வரி. மு. – 'நற்றிணை குறிஞ்சித் திணையில் விலங்கினங்கள்'
2008 ஆய்வியல் நிறைஞர் பட்டப் படிப்பின் ஆய்வேடு, அண்ணாமலைப் பல்கலைக்கழகம், (தொலை நிலைக்கல்வி இயக்கம்)

## கட்டுரைகள்

1. அகத்தியலிங்கம். ச. 2001 – "தொல்காப்பியத்தின் தோற்றமும் ஏற்றமும்" 'தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள்' உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

2. அகத்தியலிங்கம். ச. – "தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்" 'தொல்காப்பிய இலக்கியக் கோட்பாடுகள்' உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

3. திருமுருகன். இரா. – 'தொல்காப்பிய இலக்கண உருவாக்கக் கோட்பாடுகள்' தொல்காப்பிய இலக்கண மொழியியல் கோட்பாடுகள்' உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை.

## அகராதிகள்

1. ஆசிரியர் குழு. – 'நர்மதாவின் தமிழ் அகராதி', நர்மதா பதிப்பகம், நல்ல நூல் வெளியீட்டாளர்கள், சென்னை–17.

2. இராம சுப்பிரமணியம். வ.த. – 'திருமகள் அகராதி', திருமகள் நிலையம், சென்னை–17.

# 1. கபிலர் – சில குறிப்புகள்

ஈராயிரம் ஆண்டுகட்கு முன் தமிழகம் இயற்கை வளனும் செயற்கைத் திறனும் நிறைந்து, அறிவும் அன்பும் அருளும் பொருளும் நிறைந்த நல்நாடாக இருந்தது. மக்களின் அறிவைக் கூரியதாக்கி உணர்வை நுண்ணியதாக்கிச் செய்த இனிய கவிதைகளை இயற்றியப் புலவர்கள் பலர். அத்தகைய புலவர்களுள், தனிச்சிறப்புப் படைத்தவர் கபிலர் ஆவார்.

கபிலர் புலவர் பெருமக்கள் யாவரிலும் தலைசிறந்தவர். கி.பி.இரண்டாம் நூற்றாண்டினர். இவர் பிறந்தது திருவாதவூர். இவர் பெற்றோரைப் பற்றி அறிய இயலவில்லை. எனினும்,

"யானே பரிசிலன் மன்னு மந்தணன்" (புற.நா.200)

"யானே தந்தை தோழன் இவரென் மகளிர்
அந்தணன் புலவன் கொண்டு வந்தனனே" (புற.நா.201)

என இவரே கூறியிருத்தலாலும்,

"புலனழுக்கற்ற அந்தணாளன்" (புற.நா.126)

என மாறோகத்து நப்பசலையார் புகழ்ந்திருத்தலாலும், இவர் தாமியற்றிய இன்னா நாற்பதில் புலால் உண்ணலைக் கண்டித்திருத்தலின் இவர் அந்தணர் மரபைச் சார்ந்தவர் என்பது புலப்படும்.

கபிலர் தமது வாழ்நாளில் பற்பல மன்னரவைக்களங்களுக்குச் சென்று தமது புலமையைப் புலப்படுத்திப் பரிசில் பெற்று வருதலை வாழ்க்கை நெறியாகக் கொண்டு ஒழுகினார். இவ்வாறு இவர் தமிழகம் முழுவதும் சுற்றி வரும் போது ஒருமுறை மலையமானாட்டுத்

திருமுடிக்காரியைப் பரிசில் வேண்டிக் கண்டார். அவ்வரசன் ஏனையப் புலவருக்கு அளிப்பதைப் போல பரிசில் அளித்தான். இது கண்டு பொறாத கபிலர் வெகுளியும் வருத்தமும் கலந்து அறிவுரை வழங்கினார். அதுகேட்டு நாணமுற்ற சிற்றரசன் பிறகு கபிலருக்கு ஏராளமான வெகுமதிகளை வழங்கினான். பிறகு சில நாட்கள் கோவிலூரில் தங்கிவிட்டுப் பின் புறப்பட்டு பாண்டிய நாட்டை அடைந்தார். அங்குப் பறம்பு நாட்டிற்குச் சென்று அந்நாட்டிற்கும் அங்குள்ள மலைக்கும் தலைவனான வேள்பாரி யென்பானைக் கண்டு அவனோடு பெருநட்புப் பூண்டார். முல்லைக்குத் தேரீந்த புரவலனும் குறிஞ்சியிற் சிறந்த புலவரும் ஈருடல் ஒருயிர் எனவாம்படி ஆருயிர் நட்புப் பூண்டனர். புலவர் புரவலர்க்குப் பல நன்மைகளைச் செய்தார். மூவேந்தர்கள் சூழ்ச்சியால் பாரியைக் கொல்ல, கபிலரும் பாரி மகளிரும் அங்கு இருக்க இயலாமல் பறம்பு மலையிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று.

பறம்பிலிருந்து அவர்களை இட்டுக் கொண்டு சென்ற கபிலர் எவ்வாறேனும் அப்பெண்களைத் தக்கார்க்கு மணமுடித்து வைத்து வாழ்க்கையில் நிறுவ விரும்பினார். அங்கிருந்து புறப்பட்ட கபிலர் செல்வக்கடுங்கோ வாழியாதன் என்னும் சேர அரசன் நாட்டிற்குச் சென்று அங்கு அவனால் புரக்கப் பெற்றுச் சில காலம் இருந்தனர். அங்கு அவ்வரசனை அவர் பதிற்றுப் பத்தில் ஏழாம் பத்துப்பாடல்களைப் பாடி அவனிடம் ஆறாயிரம் காணம் பொன்னும் அவன் நன்றா என்னும் ஒரு மலை மீது ஏறி நின்று கண்டு கொடுத்த நாடும் பரிசிலாகப் பெற்றார்.

பிறகு பாரி மகளிர்க்குத் தாம் செய்து முடிக்க வேண்டிய கடமையை எவ்வாறேனும் கழித்தல் வேண்டும் என்று கருதி விச்சிக்கோன் என்னும் ஒரு சிற்றரசன் பாலடைந்து அவனை அப்பெண்களை மணந்து கொள்ள வேண்டினார். அவன் மறுத்தானாக அவன் பால் வெறுப்புற்று இருங்கோவேள் என்னும் வேறொரு சிற்றரசன் பால் சென்று அவ்வாறே வேண்ட அவனும் உடன்படவில்லை. அங்கிருந்து விலகிச் சென்று தக்க அந்தணர்கள் சிலரிடம் அப்பெண்களை ஒப்படைத்துவிட்டுப் புறப்பட்டுச் சென்றார். சென்றவர் பாரி இறந்த பின் அவனுக்குப் பிறகு தாம் உயிர்வாழ்தல் நேரிதன்று என்று கருதினார். கருதியவர் பாரிக்கும் தனக்குமிருந்த நட்பின் பெருமையைச் சுட்டி அரிய பாடல் ஒன்று பாடினார். 'இன்மை போலக் காட்டி யும்மையினும் நின்னோடு உடனுறை வாக்குக அயர்ந்தபாலே (புறம்–236) என்று மனம் நொந்து அவர் பாடிய அப்பாடலே அவர் வாழ்க்கையில் பாடிய கடைசிப் பாடல் என்று கருத இடனுண்டு. இவர் பாரி மேல் கொண்டிருந்த நட்பு பிசிராந்தையார் சோழ மன்னன் பால் கொண்டிருந்த நட்பிற்குச் சிறிதும் குறைந்ததன்று என்பது உறுதி.

கபிலருடைய தமிழன்பு, பிரகத்தன், என்னும் ஆரிய அரசனுக்கு அவர் தமிழ் அறிவுறுத்திய பண்பால் உணரப்படும்.

கபிலர் பாரி மாட்டுக் கொண்டிருந்த நட்பு மிகச் சிறந்த வகையினது. அவனுடைய இன்ப துன்பங்களைத் தமதாகவே கருதும் இயல்பினர் இவர். அவன் வாழ்ந்த போது இவர் அடைந்த மகிழ்ச்சியும் அவன் இறந்த பின் இவர் அடைந்த துன்பமும் அளவிறந்தவை. அவன்

மகளிரைத் தம் மகளிரைப் போலவே பாராட்டினார். இவர் நட்பின் பெருமையை அனுபவத்தில் அறிந்தவர்.

வையாவிக் கோப்பெரும் பேகனால் துறக்கப்பட்டு வருந்திய கண்ணகி என்பாளிடம் இவர் காட்டிய பரிவும் அனுதாபமும் இரக்கமும் அவரது இரக்கத் தன்மையை வெளிப்படுத்துகின்றன.

பாரி மகளிரைக் காக்கும் கடமை கொண்டு அதைக் கடைசி வரையில் தளராமல் முயன்று செய்து முடித்தார். அவர்களைச் சிற்றரசர்கள் இருவர் மணக்க மறுத்தமையால் தன் இனத்தாராகிய சில அந்தணர்களிடம் அவர்களை ஒப்படைத்துவிட்டு பாரியின் பிரிவால் வருந்தி மறைந்தார். கபிலர் கடமை உணர்ச்சி மிக்கவர் என்பதை அறிய முடிகிறது.

கபிலர் வாழ்ந்த காலத்திலேயே அவரது புலமைப் பெருமையும் பண்புச் சிறப்பும் பிற புலவர்களால் உணர்ந்து போற்றப்பெற்றன.

"உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை
வாய்மொழிக் கபிலன்" (அக.நா.78)

என நக்கிரரும்,

"உவலை, கூராக் கவலையில் நெஞ்சின்
நனவிற் பாடிய நல்லிசைக்கபிலன் பெற்ற வூரினும் பலவே"
(பதி.பத்து.85)

என பெருங்குன்றூர்க்கிழாரும்,

"செறுத்த செய்யுட் செய் செந்நாவலின்
வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க்கபிலன்" (புற.நா.53)

என பொருந்திலிளங்கீரனாரும்

"புலனழுக்கற்ற அந்தணாளன்
இரந்து சென்மாக்கட் இனியிடனின்றிப்
பரந்திசை நிற்கப் பாடினன்" (புற.நா.26)

"பொய்யா நாவிற் கபிலன்" (புற.நா.174)

என மாறோகத்து நப்பசலையாரும் கபிலரைப் புகழ்ந்து பாடியுள்ளனர்.

கபிலர் வாழ்ந்த காலம் தமிழ் மக்கள் இயற்கையோடு இயைந்த இன்ப வாழ்க்கை நடத்திய காலம். சங்கச் சான்றோர்களுடன் கபிலர் தலை சிறந்த அடியராய் விளங்கியவர்.

## கபிலர் இயற்றியப் பாடல்கள்

| | | |
|---|---|---|
| 1. | நற்றிணை:20 | 1, 13, 32, 59, 65, 77, 217, 222, 225, 253, 267, 291, 309, 320, 336, 353, 359, 368, 373, 376 |
| 2. | குறுந்தொகை:28 | 13, 18, 25, 38, 42, 87, 95, 100, 106, 115, 121, 142, 153, 187, 198, 208, 225, 241, 246, 249, 264, 288, 291, 312, 355, 353, 361, 385 |
| 3. | ஐங்குறுநூறு:100 | குறிஞ்சி, 201–300 |
| 4. | பதிற்றுப்பத்து:10 | 7–ஆம் பத்து 61–70 |
| 5. | கலித்தொகை:29 | குறிஞ்சி 37–65 |
| 6. | அகநானூறு:18 | 2, 12, 18, 42, 82, 118, 128, 158, 182, 203, 218, 238, 248, 278, 292, 318, 332, 382 |

| | | |
|---|---|---|
| 7. | புறநானூறு:28 | 8, 14, 105, 106, 107, 108, 109, 110, 111, 113, 114, 115, 116, 117, 118, 119, 120, 121, 122, 123, 124, 143, 200, 201, 202, 236, 337, 347 |
| 8. | பத்துப்பாட்டு:1 | குறிஞ்சிப்பாட்டு |
| 9. | இன்னாநாற்பது | 41 |
| 10. | தனிப்பாடல் | 'நெட்டிலையிருப்பை' 1 |

அகப்பாடல்களிலும் புறப்பாடல்களிலும் அவர் பாடியுள்ள பாடல்களின் மொத்த எண்ணிக்கை 276 ஆகும். இவற்றுள் சங்கப் பாடல்களாக நமக்குக் கிடைத்திருக்கும் எட்டுத்தொகை, பத்துப்பாட்டில் கபிலர் செந்தமிழ் நடையில் இயற்கையின் இன்ப வளத்தையும் அங்கு வாழும் உயிரினங்களின் வாழ்க்கையையும் கற்றவர் உளம் தழைக்க பாடியுள்ளார்.

# 2. அட்டவணைகள்

## கபிலர் பாடல்களில் உயிரினங்கள் சார்ந்த உவமைகள்

| வ. எண். | இலக்கியம் | பாடல் எண். | உயிரினம் | உவமை | | | |
|---|---|---|---|---|---|---|---|
| | | | | வினை | பயன் | மெய் | உரு |
| 1. | நற்றிணை | 336 | கரடி | √ | | | |
| 2. | புறநானூறு | 117 | காட்டுப்பூனை | | | √ | |
| 3. | குறுந்தொகை | 385 | குதிரை | √ | | | |
| 4. | ஐங்குறுநூறு | 202 | ” | | | √ | |
| 5. | ஐங்குறுநூறு | 271 | குரங்கு | | | √ | |
| 6. | குறுந்தொகை | 121 | ” | | | | √ |
| 7. | ஐங்குறுநூறு | 280 | ” | | | √ | |
| 8. | அகநானூறு | 158 | நாய் | √ | | | |
| 9. | குறிஞ்சிப்பாட்டு | 131 பா.வரி | ” | | | | √ |
| 10. | குறிஞ்சிப்பாட்டு | 136 பா.வரி | காளை | √ | | | |
| 11. | அகநானூறு | 248 | ” | | | √ | |
| 12. | அகநானூறு | 18 | பன்றி | √ | | | |
| 13. | ஐங்குறுநூறு | 264 | ” | | | √ | |
| 14. | ஐங்குறுநூறு | 264 | ” | | | | √ |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 15. | ஐங்குறுநூறு | 263 | ” | | | | √ |
| 16. | ஐங்குறுநூறு | 218 | புலி | √ | | | |
| 17. | குறிஞ்சிக்கலி | 43 | ” | | | √ | |
| 18. | புறநானூறு | 202 | புலி | | | | √ |
| 19. | குறிஞ்சிக்கலி | 56 | மான் | | | √ | |
| 20. | அகநானூறு | 278 | யானை | √ | | | |
| 21. | குறிஞ்சிக்கலி | 42 | ” | | | √ | |
| 22. | குறுந்தொகை | 246 | ” | | | √ | |
| 23. | குறுந்தொகை | 13 | ” | | | √ | |
| 24. | குறிஞ்சிக்கலி | 48 | ” | | | √ | |
| 25. | புறநானூறு | 114 | ” | | | √ | |
| 26. | நற்றிணை | 376 | கிளி | √ | | | |
| 27. | அகநானூறு | 12 | ” | √ | | | |
| 28. | குறுந்தொகை | 291 | ” | √ | | | |
| 29. | ஐங்குறுநூறு | 289 | ” | √ | | | |
| 30. | நற்றிணை | 291 | நாரை | | | √ | |
| 31. | குறுந்தொகை | 25 | ” | | | | √ |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| 32. | ஐங்குறுநூறு | 258 | மயில் | √ | | | |
| 33. | குறிஞ்சிப்பாட்டு | 169 பா.வரி | ” | √ | | | |
| 34. | குறிஞ்சிப்பாட்டு | 250 பா.வரி | ” | √ | | | |
| 35. | அகநானூறு | 158 | ” | √ | | | |
| 36. | ஐங்குறுநூறு | 293 | ” | | | √ | |
| 37. | ஐங்குறுநூறு | 294 | ” | | | √ | |
| 38. | ஐங்குறுநூறு | 297 | மயில் | √ | | | |
| 39. | ஐங்குறுநூறு | 300 | ” | √ | | | |
| 40. | குறிஞ்சிக்கலி | 46 | வானம்பாடி | √ | | | |
| 41. | குறிஞ்சிக்கலி | 56 | புறா | | | √ | |
| 42. | குறிஞ்சிப்பாட்டு | 147 பா.வரி | வண்டு | √ | | | |
| 43. | ஐங்குறுநூறு | 226 | ” | √ | | | |
| 44. | குறிஞ்சிக்கலி | 43 | ” | | | | √ |
| 45. | குறிஞ்சிக்கலி | 53 | மீன் | √ | | | |
| 46. | குறிஞ்சிக்கலி | 64 | பாம்பு | | | √ | |
| 47. | நற்றிணை | 267 | நண்டு | | | √ | |

# கபிலர் பாடல்களில் இடம் பெறும் உள்ளுறை, இறைச்சி குறிக்கும் உயிரினங்கள்

## 1. உள்ளுறை

| வ. எண். | இலக்கியம் | பாடல் எண். | உயிரினம் | காதல் | உணவு | அச்சம் | விளையாட்டு | வடிவம் | செயல் | வீரம் | பகை | சினம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | ஐங்குறுநூறு | 238 | ஆடு | √ | | | | | | | | |
| 2. | ஐங்குறுநூறு | 271 | குரங்கு | | √ | | | | | | | |
| 3. | ஐங்குறுநூறு | 272 | ” | | √ | | | | | | | |
| 4. | ஐங்குறுநூறு | 273 | ” | | √ | | | | | | | |
| 5. | ஐங்குறுநூறு | 279 | ” | | √ | | | | | | | |
| 6. | ஐங்குறுநூறு | 274 | ” | | | √ | | | | | | |
| 7. | ஐங்குறுநூறு | 275 | ” | | | | √ | | | | | |
| 8. | ஐங்குறுநூறு | 277 | ” | √ | | | | | | | | |
| 9. | நற்றிணை | 359 | பசுக்கன்று | | | √ | | | | | | |
| 10. | ஐங்குறுநூறு | 261 | பன்றி | | √ | | | | | | | |
| 11. | ஐங்குறுநூறு | 262 | ” | | √ | | | | | | | |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 12. | ஐங்குறுநூறு | 267 | ” | | √ | | | | | | | |
| 13. | ஐங்குறுநூறு | 268 | ” | √ | | | | | | | | |
| 14. | ஐங்குறுநூறு | 263 | ” | | | | | √ | | | | |
| 15. | ஐங்குறுநூறு | 264 | ” | | | | | √ | | | | |
| 16. | ஐங்குறுநூறு | 266 | ” | | | | | √ | | | | |
| 17. | ஐங்குறுநூறு | 269 | ” | | | | | | √ | | | |
| 18. | ஐங்குறுநூறு | 270 | ” | | | | | | √ | | | |
| 19. | ஐங்குறுநூறு | 248 | ” | | | | | | | √ | | |
| 20. | நற்றிணை | 336 | ” | | √ | | | | | | | |
| 21. | ஐங்குறுநூறு | 216 | புலி | | √ | | | | | | | |
| 22. | ஐங்குறுநூறு | 218 | ” | | √ | | | | | | | |
| 23. | ஐங்குறுநூறு | 246 | ” | √ | | | | | | | | |
| 24. | அகநானூறு | 118 | ” | | | | | | | | √ | |
| 25. | ஐங்குறுநூறு | 217 | மான் | | √ | | | | | | | |
| 26. | அகநானூறு | 332 | யானை | | | | | | | | √ | |
| 27. | குறிஞ்சிக்கலி | 48 | ” | | | | | | | | √ | |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 28. | குறிஞ்சிக்கலி | 52 | ” | | | | | | | | √ | |
| 29. | நற்றிணை | 65 | ” | | | | | | | | √ | |
| 30. | அகநானூறு | 12 | ” | | | √ | | | | | | |
| 31. | நற்றிணை | 217 | ” | | | | | | | | | √ |
| 32. | குறிஞ்சிக்கலி | 38 | ” | | | | | | | | | √ |
| 33. | குறிஞ்சிக்கலி | 53 | ” | | | | | | | | | √ |
| 34. | நற்றிணை | 222 | யானை | √ | | | | | | | | |
| 35. | குறிஞ்சிப்பாட்டு | 35–37<br>பா.வரி | ” | | √ | | | | | | | |
| 36. | குறிஞ்சிக்கலி | 41 | ” | | √ | | | | | | | |
| 37. | குறிஞ்சிக்கலி | 42 | ” | | √ | | | | | | | |
| 38. | குறிஞ்சிக்கலி | 50 | ” | | √ | | | | | | | |
| 39. | ஐங்குறுநூறு | 282 | ” | | √ | | | | | | | |
| 40. | ஐங்குறுநூறு | 285 | கிளி | | √ | | | | | | | |
| 41. | ஐங்குறுநூறு | 286 | ” | | √ | | | | | | | |
| 42. | நற்றிணை | 291 | குருகு | | | | | | √ | | | |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 43. | குறிஞ்சிப்பாட்டு | 190–195 வரிகள் | மயில் | | √ | | | | | | | |
| 44. | ஐங்குறுநூறு | 291 | ” | | | | | | √ | | | |
| 45. | ஐங்குறுநூறு | 294 | மயில் | | | | | √ | | | | |
| 46. | ஐங்குறுநூறு | 295 | ” | | | √ | | | | | | |
| 47. | ” | 296 | | | √ | | | | | | | |
| 48. | ” | 297 | | | | | | √ | | | | |
| 49. | ” | 298 | | | | | | | √ | | | |
| 50. | ” | 300 | | | | | | √ | | | | |
| 51. | குறிஞ்சிக்கலி | 40 | வண்டு | | √ | | | | | | | |
| | | | | | | | **இறைச்சி** | | | | | |
| 52. | குறுந்தொகை | 225 | யானை | | √ | | | | | | | |
| 53 | குறிஞ்சிக்கலி | 40 | ” | | √ | | | | | | | |
| 54. | நற்றிணை | 13 | ” | | √ | | | | | | | |

# கபிலர் பாடல்களில் உயிரினங்களின் வாழ்வியல் பயன்பாடு

| வ. எண் | இலக்கியம் | பாடல் எண். | உயிரினம் | உணவு | தோழன் | ஊர்தி | விரிச்சி | போர் | பரிசுப் பொருள் | பலியிடுதல் | வணிகம் | தொழில் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1. | புறநனூறு | 113 | ஆடு | √ | | | | | | | | |
| 2. | பதிற்றுப்பத்து | 67 | ” | √ | | | | | | | | |
| 3. | நற்றிணை | 336 | பன்றி | √ | | | | | | | | |
| 4. | அகநானூறு | 118 | நாய் | | √ | | | | | | | |
| 5. | அகநானூறு | 182 | ” | | √ | | | | | | | |
| 6. | அகநானூறு | 158 | ” | | √ | | | | | | | |
| 7. | குறிஞ்சிப்பாட்டு | 130–133 வரிகள் | ” | | √ | | | | | | | |
| 8. | குறிஞ்சிக்கலி | 50 | மான்குட்டி | | √ | | | | | | | |
| 9. | நற்றிணை | 353 | குரங்கு | | √ | | | | | | | |
| 10. | ஐங்குறுநூறு | 202 | குதிரை | | | √ | | | | | | |
| 11. | நற்றிணை | 291 | ” | | | √ | | | | | | |
| 12. | நற்றிணை | 77 | யானை | | | √ | | | | | | |

| | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 13. | அகநானூறு | 158 | ” | | | | √ | | | | | |
| 14. | குறுந்தொகை | 153 | ” | | | | √ | | | | | |
| 15. | புறநானூறு | 14 | யானை | | | | | √ | | | | |
| 16. | ” | 116 | குதிரை | | | | | √ | | | | |
| 17. | பதிற்றுப்பத்து | 62 | ” | | | | | √ | | | | |
| 18. | புறநானூறு | 347 | யானை | | | | | | √ | | | |
| 19. | குறிஞ்சிக்கலி | 50 | ” | | | | | | √ | | | |
| 20. | அகநானூறு | 292 | ஆடு | | | | | | | √ | | |
| 21. | குறுந்தொகை | 100 | யானை | | | | | | | | √ | |
| 22. | பதிற்றுப்பத்து | 68 | ” | | | | | | | | √ | |
| 23. | குறிஞ்சிக்கலி | 41 | யானை | | | | | | | | | √ |
| 24. | குறிஞ்சிக்கலி | 42 | ” | | | | | | | | | √ |
| 25. | ஐங்குறுநூறு | 269 | பன்றி | | | | | | | | | √ |
| 26. | ” | 270 | ” | | | | | | | | | √ |

## கபிலர் பாடல்களில் இடம் பெறும் உயிரினங்களின் மரபுப் பெயர்களும் அறிவியல் பெயர்களும்

| வ. எண். | பொதுப்பெயர் | இளமைப் பெயர் | ஆண் பால் பெயர் | பெண் பால் பெயர் | ஆங்கிலப் பெயர் | விலங்கியல் பெயர் |
|---|---|---|---|---|---|---|
| **விலங்கினங்கள்** | | | | | | |
| 1. | ஆடு | மறி | மூரி | புருவை | GOAT | CAPRAHIRCUS |
| 2. | கரடி | – | உளியம் | – | BEAR | URSUS MARITIMUS |
| 3. | காட்டுப்பூனை | பிள்ளை வெருகு | வெருகு | – | CAT | FELIES CHAUS |
| 4. | குதிரை | – | பாய்மான் புரவி கடுமா | – | HORSE | EQUUS CABALLUS |
| 5. | குரங்கு | பார்ப்பு, பறழ் | கடுவன், முசுக்கலை, ஊகம் | மந்தி | MONKEY | ALLENOPITHECUS NIGROVIRIDIS |
| 6. | நரி | – | – | – | FOX | VULPES VOLGARIS |
| 7. | நாய், ஞமலி, | – | வயநாய் | – | DOG | CANIS DOMESTICUS |
| 8. | பசு | – | – | ஆமான் | COW | BOSTAURUS |
| 9. | பன்றி | குருளை, பறழ் | ஒருத்தல், கேழல் | பிணவு | PIG | SUS. DOMESTICUS |
| 10. | புலி | – | உழுவை, ஏறு, போத்து, வேங்கை | பிணவு | TIGER | PANTHERA TIGRIS |
| 11. | மான் | மறி, குழவி | கலை | பிணை | DEER | MUNTIACUS |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | MUNTJAT |
| 12. | முதலை, கராஅம் | – | – | – | CROCODILE | CROCODYLUS POROSUS |
| 13. | முயல் | – | – | – | PABBIT | ORYE TOLAGUS CUNICULUS |
| 14. | யானை | கன்று | களிறு, ஒருத்தல், வேழம், வாரணம் | பிடி | ELEPHANT | ELEPHAS MAMIMUS |
| **பறவையினங்கள்** | | | | | | |
| 15. | அன்னம் | – | – | – | SWAN | CYGNUS COLUMBIANUS JANKOWSKII |
| 16. | காக்கை | – | – | – | CROW | CORRUS |
| 17. | கிளி, வளைவாய்ப் பாசினம் கிள்ளை | – | – | – | RARROT | ARDEA CINEREA |
| 18. | குருவி, குரீஇ | – | – | – | SPARROW | PASSER DEMESICUS |
| 19. | நாரை, குருகு | – | – | – | CRANE | LEUCOGER ANUS |
| 20. | புறவு, புறா | – | – | – | DOVE | COLUMBA LIVIA |
| 21. | கூகை, பேராந்தை குடிஞை | – | – | – | OWL | ATHENE CUNICULARIA |

# 3. புகைப்படங்கள்

## விலங்கினங்கள்

மறி



ஆட்டுக்கிடா



பூனை



குதிரை



குரங்கு



நரி



முயல்




யானை



## பறவையினங்கள்

அன்னம்



காக்கை



கிளி



குருவி



நாரை



புறா



கூகை



மயில்



## பிற உயிரினங்கள்

அனில்



உடும்பு



தவளை



பாம்பு



வண்டு



தேனீ



மீன்



நண்டு



| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 22. | மயில், மஞ்ஞை | – | – | – | PEACOCK | PARO CRISTATUS |
| **பிற உயிரினங்கள்** | | | | | | |
| 23. | அணில் | – | – | – | SQUIRREL | SCIURUS SP |
| 24. | உடும்பு | – | – | – | LIZARDS | LACERTA RIVIPARA |
| 25. | தவளை, நுணல் | – | – | – | FROG | RANA hEXADACTYLA |
| 26. | பாம்பு, அரவு | – | – | – | SNAKE | VIPERA BERUS |
| 27. | சுரும்பு, தும்பி, வண்டு | – | – | – | BEETLE | ORYZAE RHINOCEREOUS |
| 28. | தேனீ | – | – | – | BEE | APIS INDICA |
| 29. | ஆரல் மீன், கயல் மீன் | – | – | – | FISH | SCOLIODON SARRAKOWAH |
| 30. | நண்டு | – | – | – | CRAB | CALLINECTES SAPIDUS |